சிவமயம்.

ஓம் மஹா கணபதயே நம:

ஸ்ரீ விசுவநாத பஞ்சானன பட்டாசாரியரால்

அருளிச்செய்யப்பட்ட

# காரிகாவலி யென்னும்

## மூலமும்

# * நியாய சித்தாந்த முக்தாவலி

## யென்னும் அதனுரையும்

இவை,

ஸ்ரீ கோவிலூர் மடாலயம்

ஸ்ரீ வேதாந்த பாஸ்கரராயும் நியாய சந்திரராயும்

விளங்காநின்ற

**ஸ்ரீ வீர. சுப்பய்ய சுவாமிகளால்**

மொழிபெயர்க்கப்பட்டு,

ஸ்ரீ வியாசர்பாடி ஆநந்தாஸ்ரமம்,

**ஸ்ரீ க. சிவப்பிரகாச சுவாமிகள்**

**பாதசேகரராகிய மூர்த்தி சுவாமிகளால்**

அமெரிக்கன் டைமண்ட் பிரஸில்,

பதிப்பிக்கப்பெற்றன.

**1917.**

விலை அணா 12.



---

* N. B. இதனுரையாகிய தினகரி அச்சிலிருக்கிறது. ...பிறில் வாக்கிருக்கும் நியாயப் பிரகாசமும் இதனுரை ...டீகையேயாம்.

சிவமயம்.

ஓம் மகா கணபதயே நம:

# முகவுரை.



அன்பர்களே! கணாதர் நியாயமும் பாணினி வியாகரணமும் எல்லா நூற்கும் உபகாரமா மென்ப தமிந்தவிடயமே. "எண்ணென்பவேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங் கண்ணென்ப வாழு முயிர்க்கு" எ-ம். "எண்ணு மெழுத்துங் கண்ணெனத்தகும்" எ-ம். ஆன்றோர் கூறிய திதுபற்றியேயாம். எல்லா நூலுள்ளும் சர்வ அநர்த்த நிவிர்த்தியையும் பரமானந்தப் பிராப்தியையும் அடைவிப்பது வேதாந்த நூலே, பிறவெல்லாம் அதற்குச் சாதனமாம். அவற்றுள்ளும் மிகவுமின்றியமையாதது தருக்கமேயாம்; மனனத்திற்கு பயோகமாதலின், சிரவணத்திற்குஞ் சிறுபான்மை சேர்தலின்: அத்தருக்கம் நியாயம் வைசேடிகம் என இருவகைப்படும். அவற்றுள் நியாயம் கௌதமமுனிவரானும், வைசேடிகங் கணாதமுனிவரானுஞ் செய்யப்பெற்றனவாம். அவற்றையும் அவற்றின் பாடியங்களையும் வார்த்திக தாற்பரிய டீகை குசுமாஞ்சலி கிலாவதி கிரணாவலி இலக்கணாவலி சிந்தாமணி சிரோமணி

யென்னும் தீதிதிமுதலியவற்றை முற்றினு மினிதுணர்ந்து முதியர் புதியர் நதிபதியின் மூழ்கிக் கரையடைந்த கௌதம சூத்திர விருத்திக் காரராகிய ஸ்ரீ விசுவநாத பஞ்சானனபட்டாசாரியரான் இவ்வரிய மூலமும் உரையு மாக்கப்பட்டன. இம்முக்தாவலியே சேதுமுதல் இமாசலம்வரை பரிமளித்துலவும் தருக்கநூல். இதனனுமான சப்த கண்டங்களே ஸ்ரீ ஜகதீசர் ஸ்ரீ கதாதரரால் ஆக்கப்பட்ட அனுமான சப்த கண்டங்களின் சங்கிரகம். இந்நூற் கரியதோர் வியாக்கியானம் உலகப் பிரசித்திபெற்ற தினகரியாம். பிரகரண நியாயங் கற்பதும் தினகரிவரையுமே (இத்தினகரி அச்சிலுளது விரைவில் வரும்) இத்தினகரி முக்தாவலிகளையனுசரித்தே தமிழில் வந்துலவும் நியாயப்பிரகாசம், ஹிந்தியில் ஸ்ரீ சிற்கனனந்த சுவாமிகளால் அருளிச் செய்யப்பட்டது. அன்னம்பட்டீய முதலியவற்றைக் கற்றே இந்நூற் கற்கவேண்டும். இந்நூற் சிறந்ததென்பதை அன்னம்பட்டீய உரையாசிரியர்களால் விதந்தோதப்பட்டமையானும் காண்க. இதன் பயனைத் தமிழ்மக்கள் அனுபவிக்க வேண்டுமென்னு மவாவால், ஸ்ரீ கோவிலூர் மடாலயம் வேதாந்த பாஸ்கரராயும் நியாய சந்திரராயும் நிலவாநின்ற ஸ்ரீ வீர. சுப்பய்ய சுவாமிகளால் மூலமும் உரையும் செந்தமிழ்ப் பாவானும் நடையானும் மொழிபெயர்க்கப்பட்டன. இதனையும் வரும் தினகரியையும் கற்பதனுனே எல்லா நியாய

நூற்களையும் கற்றறிந்த பயன் பெறலாம். பெறவே அத்வைத சித்தி முதலிய வேதாந்த நூற்களை யெளிதிற்கற்றுப் பேரானந்தப் பேறெய்தலாமென்பது திண்ணம், ஆகலின் இந்நூல் ஒவ்வொரு மனுட சரீரம்படைத்த தமிழ் மக்கள் கரத்திலு மிலங்கவேண்டிய தின்றி யமையாததேயாம். சுபம்.

இங்ஙனம்,

மூர்த்தி சுவாமி,

ஆநந்தாஶ்ரமம், வியாசர்பாடி,

சென்னை.



சிவமயம்.

ஓம் மகா கணபதயே நம:

# நியாய காரிகாவலி யென்னும் மூலமும் நியாய சித்தாந்த முக்தாவலி யென்னும் உரையும்.

---

மங்கலம்.

தருவன முறைதரு சமிவன முனிவனை
யருமறை முடிபரு ளளிநிறை குரவனை
யொருவனை மருவினை யெனினனி யுளமே
யிருவினை யறலெளி தெளிதெளி தெளிதே.

மூலம்.

ஒண்ணு நூதன சலதர வொளியினை யுடையோன்
வண்ண கோபநல் வதுக்களின் றுகிலினை மறைப்போன்
விண்ண தாஞ்சமு சாரம கீருக விரையோன்
கண்ண னுமவன் கழன்மலர் கருத்திருத் துதுமே. (1)

உரை.

மதியை நற்சிர மணியென வணைதரு மறையோன்
கொதிகொள் வாசுகி யெனுங்கா கங்கணங் கொண்டோன்
அதிக லீலையாற் றாண்டவ பண்டித னானோன்
முதிய னும்பவன் மங்கல மெய்தமுன் னுறவே. (1)

நிகழுமென் றனை னிருமித காரிகா வலியைத்
திகழுமேவமிகத் தொகுத்திடுஞ் சிரந்தனைத் திகளாற்
புகழினியாரா ஜீவன்கட் பொலிதயை வயமாய்
மகிழ்கவுத்தக மதனினை பலவுற வகுப்பேன். (2)

பொருள்களுடன் பொருந்துவதாய்க் குணத்தினுடன் புணர்ந்தே, புண்ணியர்க ணற்றொழிலைப் பொலிவுறச்செய் வதுவாய், மருளறுசற் பொதுமைசிறப் புநித்தியமு மணைந் தே, மருவுமொளி யின்மையின்மிக் கொளிருவதே யாகு, மரு ளுநல வுத்திநிறை சித்தாந்தத் தரள, ஆவலியை நனிவிசுவ நாதனை ஞாற்றித், தெருளருளுங் கண்ணனெழின் மார்பினினி தளித்தேன், றெளிஞருளத் தனவரத முதமிதுசெய் குகவே.

இயற்ற அவாவிய நூலினிடையூற்றை நீக்குவானுக்கிய மங் கலத்தை மாணாக்கர்க் கறிவுறுத்தற்பொருட்டு யாப்பினால் யாத்துவைக்கப் படுகின்றது:—ஒண்ணு நூதன வென. அற் றேல்? மங்கலம் இடையூற்றை யழிப்பதற்கேனும், முடிவுபெற் றிற்கேனும் காரணமன்று, மங்கலமின்றிய வழியும் நாத்திக ரது நூற்களில் இடையூறின்றி யினிதாம் முடிவுபெறு காண் டலின் எனின். அற்றன்று, பழிப்பின்றிய ஆன்றோரொழுக்க விடயத் தன்மையானே மங்கலத்திற்குப் பலனுடைத்தாந் தன் மை துணிபப்பெறலாயவழி ஆண்டும் பலனறியும் வேட்கை யின்கண், கண்கூடாயபலன் கைக்கிடைப்பக் கண்கூடற்ற பல கற்பனைக் கொழுங்கன்மை யுண்மையானும், நினைவுண்மையா னும், முடிவுபேறே அதனது பலமெனக் கற்பிக்கப்படும். இங் ஙனமாகவே யாண்டு முடிவு பேறு கண்டும் மங்கலம் காணப்

பெறுவதின்றே ஆண்டும் முற்பிறப்பின் முயன்ற அது கற்பி
க்கப்பெறு மென்றுணர்க. யாண்டு மங்கல முளதாயவழியும்
முடிவுபேறு காணப்பெறுவதின்றே, ஆண்டு மிக வலியதோரி
டையூறேனும், இடையூற்றின் மிகுதிப்பாடேனும், உளவென
வுணர்ந்து கொள்க. மிகுதியாய வதற்கே வன்மைமிக்க விடை
யூற்றை நீக்குவதிற் காரணமுண்மையின்; இடையூற்றி னழிவு
பாடோ மங்கலத்தின் வாயிலென்பர் முதியர். புதியரோ மங்
கலத்திற்கு இடையூற்றினழிவே பலம், முடிவு பேறே புத்தி
யின் சிறப்பொளிர்வு முதலிய காரண கலாபத்தாலாம். இங்ங
னமேல், இயல்பானே யிடையூறின்றியோரு லாற்றப்பட்ட மங்
கலத்திற்குப் பயனின்மையி னடைவாமெனப் பகாற்க, உடன்
பாடுண்மையின். இடையூற்றி னெண்ணத்தா லஃதொழுக
லின், அங்ஙனமே யான்றோரொழுக்க மாதலின். அதற்குப்
பயனின்மை வந்துழி யஃதை யுணர்த்தும் வேதம் பிரமாணமா
தலின்மையை மரீஇநிற்குமென மொழியற்க. இடையூறுள்
வழி அதனழிவிற்கே வேதமுணர்த்தற் றன்மை யுண்மையின்.
அதனானே, பாவமயலாற் பயின்ற பிராயச்சித்தத்திற்குப் பய
னின்மை வந்துழியும், அஃதுணர்த்தும் வேதம் பிரமாண
மாதலின்மையை மருவாதென்க. மங்கலமோ, இடையூற்றழிவு
விசேடத்தே காரணமாம், இடையூற்றழிவு விசேடத்திறே,
விநாயக தோத்திரபாட முதலியனவாம், சிலவிடத்தோ, இடை
யூற்றின் முற்று மின்மையே முடிவுபேற்றின் சாதனமாம்,
தடையின் சம்சர்க்க வின்மைக்கே காரியத்தைப் பயக்குந்தன்
மை யுண்மையின். இங்ஙனமாகவே நாத்திகாது நூற்களின்

கண் முற்பிறப்பின் முயன்ற மங்கலம் பயந்த பாவ வழிவேனு
ம், இயல்பானே இடையூற்றின் முற்று மின்மையேனும் உள
தாமென முறைபிறழ்த லின்றுமென்று மொழிவர்.

சமுசார மகிருக விரையோனென்பது பொருட்படுமாறு:-
சமுசாரமே மகிருகம், விருக்ஷம், அதன் விரையா யுறைவோ
ன்; நிமித்தகாரணன் என்பதாம். இதனாற் கடவுளிடத்தே கரு
தலளவையுங் காட்டப்பட்டதாம். அங்ஙனமன்றே:—எங்ங
னம் கட முதலிய காரியங்கள் கருத்தாவா லாக்கப்பெற்ற
னவோ, அங்ஙனமே மண்ணங்குர முதலியனவுமாம். அக்கரு
த்துருத் தகைமை நம்மனோர் முதலாயினருக் கேதுவதன்று
மென்க, எனவே அக்கருத்துருத் தன்மையானே கடவுட்டு
ணிபாம். காயத்தா லாக்கப்படாத் தன்மையானே கருத்தா
வாலாக்கப்படாத் தன்மைச் சாதகத்தாற் சற்பிரதி பக்கமாமெ
னச் சாற்றற்க; அப்பிரயோஜகத்தன்மை யுண்மையின். எமக்
கோ, கருத்துருத் தன்மையானே காரியத்தன்மையானே
காரிய காரண வுண்மையே அனுகூல தருக்கமாம். "தேவுல
கையும் பூவுலகையும் தேவனொருவ னுண்டாக்கினான், விசுவத்
தைப் பூப்போன், புவனத்தைக் காப்போன்" என்றற் றொட
க்கத்தனவாய ஆகமங்களும் ஈண்டினிது நினைதற்பாலனவாம்.

## பதார்த்தங்கள் பகுக்கப் படுகின்றன :—

அண்போ ருட்குண மன்னண மாந்தோழி
லோண்போ துமைசி றப்பினே டோற்றுமை
நண்ப போலின்மை நாடுகே வேழதாய்
எண்ப தார்த்தம தென்ன வியம்புவார். (2)

ஈண்டு எழாவதற் கின்மை யியம்பியதானே ஆறனுக்கு முண்மையடைவுற்றது, அதனான் உண்மைத் தன்மையானே தனித்துரைக்கப்படவில்லை. இப்பதார்த்தங்களோ, வைசேடிக மதத்தில் வெளிப்படையனவாம், நையாயிகர்கட்கும் முரண்ப டாதனவாம், இங்ஙனமே பாடியத்தும் பகரப்பட்டுளது, இத ஞனே யுபமான சிந்தாமணியின்கண் எழுபதார்த்தங்களின் வேறாக ஆற்றல், ஒப்புமை முதலியவற்றிற்கும் அயற்பதார்த் தத்தன்மை யாசங்கிக்கப்பட்டுளது. அற்றேல், இத்துணையன வே பதார்த்தங்க ளென்பது யாங்ஙனம்? ஆற்றல் ஒப்புமை முதலியவற்றிற்கும் அயற்பதார்த்தத் தன்மை யுண்மையின். அங்ஙனமன்று:-மணி முதலியவற்றோடு ணிகழும் அழலால் அழற்சி யுண்டாவதின்றும், அவையின்மையினனே உண் டாம். ஆண்டு மணி முதலியவற்றால் அழலின்கண் அழற்சியனு கூல ஆற்றல் அழிக்கப்படும். மாற்றனும், மணி முதலியவற் றின் மறைவானுமோ, உண்டாமெனக் கற்பிக்கப்படும். இங்ங னம், ஒப்புமையும் அயற்பதார்த்தமாம். அஃதோ உண்மை யனவாய ஆறனுள் அடங்கிடாதாம், பொதுமையினும் உண் மையின். எங்ஙனம் ஆத்தன்மை யழியாததோ, அங்ஙனம் மாத்தன்மையு மழியாததாமென ஒப்புமை புலப்படுதலின். இன்மையினு மின்றும், உண்மையாகப் புலப்படுத லுண்மை யின் எனின்? அற்றன்று, மணி முதலியவற்றின் இன்மையடு த்த அழன் முதலியவற்றிற்கு அழற்சி முதலியவற்றின்பொரு ட்டுத் தனிமையாகவாதல், மணியின்மை முதலியவற்றிற்கே யாதல், ஏதுத்தன்மை கற்பிக்கப்படும். இதனானே நன்குறப்

பெற,முடிபறுமாற்றல், அதன் முன்னின்மை பின்னின்மைகள் கற்பித்தல் தகுதியாகாமையின் என்க. மாற்றுள்வழி தடையிருப்பினும் அழற்சி யாங்ஙனமா மாலோவென வறையற்க. மாற்றின்மையடுத்த மணியின்மைக் கேதுத்தன்மை யுண்மையின். ஒப்புமையும் அயற்பதார்த்த மன்றும். மற்றோ, அதனினும் வேறாய தன்மையோடு அதன் கண்ணுற்ற மிகுதியாய தருமமுடைமையாம். மதியின் வேறாய தன்மையோடு மதிக்கண்ணுற்ற மகிழ்வுடைமை முதலியன வுடைமை, வதனத்தே மதி யொப்புமை யாதலேபோல வென்பதாம். (2)

பொருள்கள் பகுக்கப் படுகின்றன :—

மண்ணை றலனன் மாருதம் வானமோ
டெண்ணு காலங் திசைதேகி யுள்ளமே
கண்ணு நற்பொருள் கள்பின் குணமுரு
வண்ண ருஞ்சுவை கந்தம தன்பினே (3)

மண்—பிருதிவி, அறல்—நீர், அனல்— அக்கினி, மாருதம்—வாயு, வானம்—ஆகாசம், காலம்—சமயம், திசை—திக்கு, தேகி—ஆன்மா, உள்ளம்—மனம், என்னுமிவை ஒன்பது பொருள்களாமென்பது பொருளாம்.

அந்நேற் பொருண்மைச்சாதிக்கண் அளவை யென்னை? ஆண்டுக்காட்சி அளவையின்றும். நெய்யரக்கு முதலியவற்றிற் பொருண்மை கவராமையி னெனின்? அற்றன்று, சையோகத்திற்கும் விபாகத்திற்கும், காரியசமவாயி காரணத்தன்மையை வரைந்து கொள்வதாறுதல், சமவாயி காரணத் தன்மையை

வரைந்து கொள்வதாகுதல், பொருண்மை துணியப்பெறு தலின் என்க. அற்றாயினும், இருள் பத்தாம் பொருளென விய ம்பாத தென்னைகொல்? அஃதோ காட்சியானே கவரப்பெறும்; அதற்கும் உருவமுடைமை யாகுதல், தொழிலுடைமையா குதல், பொருண்மையு முளது; அஃதோ, மணமின்மை யுடை மையின் மண்ணன்றும், நீலவுருவ முடைமையினானும் நீர்முத லியன வன்றும். அதன் காட்சியினோ ஒளியை விழையாவிழி காரணமாம் எனின்? அற்றன்று, இன்றியமையாத தேயுவின் மையானே கிடைப்ப, வேறு பொருட் கற்பனைக் கொழுங்கண் மை யுண்மையின். உருவமுடையதாய்ப் புலப்படலோ மயல் வடிவமாம். தொழிலுடையதாய்த் தோற்றலும் ஒளி நீக்க வுபாதியாலாய மயலேயாம். இருட்கயற் பொருண்மையாங் கால் முடிபி லவயவ முதலியன கற்பிக்கும் அரிதின் முடிதலு மாம். பொன்னிற்குத் தேயுவின்கண் அடக்கமெங்ஙன மென் பதுமேற் கூறப்படும். (3)

ஊறுசங்கை பரிமாணம் வேற்றுமையு மதன்பரமா யோ ளிர்சை யோக, மாறுவிபா கமுமுன்மை பின்மையொடு புத்தி சுக மரந்தை யாசை, தேறுதுவே டமுமுயல்வுந் திண்மையொடு நெகிழ்ச்சியுமே திகழ்சி நேகம், ஏறுசமக் காரமறம் பாவமொலி யென்னவே யிருபா னன்கே. (4)

இருபத்திநான் கெண்ணிக்கை யுடையனவாய இக்குண ங்கள் கணாதரால் கண்டத்தானும், உம்மைச் சத்தத்தானும், காண்பிக்கப்பட்டன. ஆண்டுக் குணத்தன்மைச் சாதியின் பெறுதி மேல் விளம்பப்படும்.

தொழில்கள் பகுக்கப் படுகின்றன:—

எழுதல்விழு தல்வளைதல் நிமிர்தலோடு நடத்தலென வெண்ணு மைந்துந், தொழிலவென்ப சுழலலோடு பறத்தலொழு கல்லூர்த்தச் சோலனமூர்த, லெழுங்கமனத் தானேயாம் பரவபர சாதிவகை யிரண்டவாகு, மொழிபொருண்முன் மூன்றிலுள சத்தைபர சாதியென மொழிவா ரன்றே. (5)

தொழிற்றன்மைச் சாதியோ காட்சியாற் றுணிவதாம். இங்ஙனமே எழுதற்றன்மை முதலியவுமாம்.

அற்றேல், ஈண்டுச் சுழலுதன் முதலிய வற்றையும் ஐந்தொழிற் கதிகமாய் வைத்தறையாத தென்னை? எனக்கடாவ; விடையளிக்கப் படுகின்றது:—சுழலலென.

பொதுமை புகலப்படுகின்றது:—பரவென

அதனிலக்கணமோ, நித்தியத்தன்மையோடு பலவற்றிற் சமவேதமாந் தன்மையாம். பலவற்றிற் சமவேதமாந் தன்மை, சையோகாதிகட்கும் உளதென வுரைக்கப்பட்டது நித்தியத் தன்மையோடு என. நித்தியத்தன்மையோடு சமவேதமாந் தன்மை, ககனபரிமாணாதிகட்கும் உளதென உரைக்கப்பட்டது பலவற்றிலென. நித்தியத்தன்மையோடு பலவற்றிலிருக்குந்தன்மை, முற்றுமின்மைக்கு முளதாப்; ஆதலின் இருக்குந்தன்மைப் பொதுமையை யொழித்துச் சமவேதமெனச் சாற்றியதாம். ஒரு வடிவமாத்திரைக்கண் ணிருப்பதோ சாதியன்றாம், அங்ஙனமே:— “ வடிவ அபேதம், துல்லியத் தன்மை, சங்கரம், வரம்பின்றியோடல், உருவ அழிவு, சம்

பந்தமின்மை, என்னுமிவை சாதிக்குப் பாதகங்களெனத் தொகுக்கப்பட்டுள்ளன" எனக் கூறப்பட்டுளது. முன்மை, அதிகதேசத் திருத்தற்றன்மை. பின்மை, அற்பதேசத் திருத்தற்றன்மை. சகலசாதிகளையுங் குறித்துச் சத்தைக்கு, அதிக தேசத் திருத்தற்றன்மை யுண்மையின் முன்மையாம். (5)

பரவயலாஞ் சாதியெது வதுவேநல் லபரமெனப் பகரலா குந், திரவியத்தின் றன்மைமுதற் பராபரமாஞ் சாதியெனச் செப்ப லாகும், பரமதென மிகுதலினு மபரமெனக் குறைதலினும் பழு திலாத, திரவியத்தி லிருப்பதா யந்தியமா வதுசிறப்பாய்ச் செப்ப லாமால். (6)

அதைக்குறித்தோ மற்றைய சாதிகட்குப் பின்மையாம். மண்மைமுதலியவற்றைக்குறித்துப் பொருண்மைக்கதிக தேச த்திருத்தற் றன்மையினனே வியாபகத்தன்மை யுண்மையின் முன்மையாம். சத்தையைக் குறித்து அற்ப தேசத்திருத்தற் றன்மையினனே வியாப்பியத்தன்மை யுண்மையின் பின்மையா மெனவறிக.

சிறப்புச் செப்பப்படுகின்றது:—பழுதிலாதவென.

அந்தியமென்பது பொருட்படுமாறு:— அந்தத்தில், முடி யில்; இருப்பதென்பதனால், அந்தியம்; எதனைக்குறித்துச் சிற ப்பின்றுமோ என்பது பொருள். துவியணுகம் வரையுறுங் கடமுதலியவற்றிற் கொன்றற்கொன்று வேற்றுமை, அவ்வச் சினைவேற்றுமையாலா மென்றறிக. பரமாணுக்கட் கொன்றற் கொன்று வேற்றுமை யுடைமை, சிறப்பானேயாம். அதுவோ

தானே விலகியதாம்; அதனான் ஆண்டு வேறு சிறப்பின் விழைவின்று மென்பது கருத்தாம். (6)

சமவாயந் தரிசிப்பிக்கப் படுகின்றது:—

கடமுத லவற்றிற்குக் கபால மாதியி
லிடுகுண வினைகளுக் கிரும்பொ ருள்களிற்
றடையறப் பொதுமைக்கு மவற்றிற் சம்பந்தம்
படர்சம வாயமாய்ப் பகரு வாரரோ. (7)

கினைமுதற்கட்கும், சாதிவடிவங்கட்கும், குண குணி கட்கும், வினை வினைமுதற்கட்கும், நித்தியப்பொருட் சிறப் புக்கட்கும், யாது சம்பந்தம் அது சமவாயமாம்; சமவாயத் தன்மை நித்திய சம்பந்தத் தன்மையாம். ஆண்டு, அள வையோ? குணம் வினை முதலிய அடையடுத்த வுணர்வு, அடை அடுப்பவைகட்குளதாகிய சம்பந்தத்தை விடயமாக வுடையது, அடையடுத்த வுணர்வாகலின், தண்டமுடைய புரு டன் என்னும் அடையடுத்த வுணர்வுபோலும்; என்னுங் கரு தலாம். இதனாற் சையோக முதலவற்றின் மறுப்பாற் சம வாயம் பெறுதும். சொரூப சம்பந்தத்தானே துணிந்ததைத் து ணிதலேனும், அயற்பொருட் பெறுதியேனும் ஆமென்னற்க. முடிபறு வடிவங்கட்குச் சம்பந்தத்தன்மைக் கற்பனைசெய்யின் அரிதின் முடிதலுண்மையின்; எளிதின் முடிதலானொரு சம வாயப்பெறுதியாம். சமவாயமொன்றாயின் வாயுவின்கண் உருவ முடைமை யுணர்ச்சி யுண்டாதல் வேண்டுமென்னற்க; ஆண்டு உருவசமவாயமிருப்பினும் உருவமின்மையின். இங்ஙு

னம் இன்மைக்கும் அடையடுத்தமைச் சம்பந்தம் வேறு பெறுக வெனக்கூறற்க; அதற்கு நித்தியத்தன்மையேல் பூதலத்திற் கடவருகையின் பின்னும் கடவின்மை யுணர்வுண்டாதல் வேண்டும், கடவின்மைக்கு ஆண்டிருப் புண்மையின்; அதற்கும் நித்தியத்தன்மை யுண்மையின். அன்றாயினோ, அயலிடத்தும் கடவின்மைப் புலப்பாடுண்டாகாது; அடையடுத்தமைக்கும் ஆண்டிருப் புண்மையின். எமக்கோ, கடத்திற் பக்குவச் சிவப்புளதாங்கால், கறுப்புருவிற் கழியுபாடுண்மையின் அஃதுடை யறிவாகாதாம். அடையடுத்தமைக்கு நித்தியத்தன்மையேலோ, அளவறும் அடையடுத்தமைக் கற்பனையில் நினக்கே அரிதின் முடிதலாம். இங்ஙனமாகவே, அவ்வக்காலத்திய அவ்வப்பூதலாதிகள் அவ்வவ்வின்மைகட்குச் சம்பந்தமா மென்றுணர்க. (7)

அபாவம் பகுக்கப் படுகின்றது:—

இன்மையு மிருவகை யேயுஞ் சமுசர்க்க
வின்மையன் யோன்னிய வின்மை யென்னமுன்
னின்மையின் னின்மையு முழுது மின்மையே
யின்மைசம் சர்க்கமு விதம தேயுமே. (8)

அபாவத்தன்மை, பொருண்முதலிய ஆறன் ஒன்றினொன்ற பாவமுடைமையாம். சமுசர்க்காபாவ ஒன்றினொன்றபாவ வேற்றுமையா னென்பது பொருள். ஒன்றினொன்றபாவ மொருவகை யுண்மையானே, அதன் பிரிவுபாடின்மையின் சமுசர்க்காபாவம் பகுக்கப்படுகின்றது:—முன்னபாவ மென. சமுசர்

க்க அபாவத்தன்மை ஒன்றினென்றபாவத்தின் வேறுப அபாவத்தன்மையாம். ஒன்றினென்றபாவத்தன்மை, தாதாத்மிய சம்பந்தத்தால் வரைந்துகொண்ட எதிர்மறைத் தன்மையை யுடைய அபாவத்தன்மையாம், அழிவுறுமபாவத்தன்மை முன்னபாவத் தன்மையாம். தோற்றுறு மபாவத்தன்மை அழிவுபாட்டபாவத்தன்மையாம். நித்திய சமுசர்க்க அபாவத்தன்மை முழுதுமின்மையாம். யாண்டுப் பூதலாதியிற் கடமுதலாயின நீக்கப்பட்டனவோ, மீண்டுங் கொண்டு வரலாக்கப் பட்டனவோ ஆண்டுக் கடகாலத்திற்குச் சம்பந்தம் பொருந்தாமையின் முழுதும் அபாவத்திற்கு நித்தியத்தன்மை யிருப்பினும் கடகாலத்தே கடத்தின் முழுது மபாவவுணர்வின்றும். ஆண்டுத் தோற்ற மாற்றவியல்பிற்றுய நான்காவதபாவ மிஃதென்பர் சிலர். ஈண்டுப் பின் முன்னபாவ நிலைக்களத்தே முழுது மபாவமின்றுமென்பது பிராசீனர் மதமாம். கருங்குடத்தே சிவப்பின்றும், செங்குடத்தே கறுப்பின்றும் என்னு முணர்வுகளோ, முன்னபாவ பின்னபாவங்களைக்கவர்கின்றன வேயன்றி அவற்றின் முழுது மபாவங்களைக்கவரா; அவற்றிற்கு முரணுண்மையின். நவீனரோ ஆண்டு முரண்படுதலின்கண் மானமின்மையின், அழிவுபாட்டபாவ முதலியவற்றின் காலவரைவானும் முழுது மபாவமுளதென மொழிவர். அற்றேல், அபாவங்கட் கதிகரண வடிவத்தன்மை யெளிதின் முடிதலானுளதாகுக வெனின்? அற்றன்று, அளவற்ற அதிகரண வடிவத்தன்மைக்கற் பனையைக் குறித்து அபற்கற்பனைக்கே எளிதின்முடித லுண்மையின். இங்ஙன

மாக, ஆதார ஆதேய பாவமுமமையும். இங்ஙனமாக அவ்வச் சத்தஞ் சுவை நாற்ற முதலியவற்றின் அபாவங்கட்குக் காட்சித்தன்மையுங் கைகூடும். அன்றாயினோ, அவ்வவ் வதிகரணங்கட் கவ்வப் பொறிகளாற் கவரற்பாலதாந்தன்மை யுண்மையின் காட்சித்தன்மை கதுவாதென்க. இதனான் ஞான விசேட காலவிசேடாதி வடிவுடைமை யபாவத்திற்கா மென்பது மறுக்கப்பட்டது, காட்சித்தன்மை கதுவாமையின். (8)

## இப்போழ்து பதார்த்தங்களின் சாதர்மியமும் வைதர்மியமும் இயம்பத் துவங்கப்படும்:—

நீதியேழற்குஞ் சாதர்ம்யம் ஞேயதை யாதி
யோதுறும்பொருண் முதலவைந் துண்மையோன் றலதா
யேதமில்சம வாயியா மேர்சத்தை யுறுவ
வாதிமூன்றும்பண் பாதிநிர்க் குணக்கிரி யையயவே. (9)

சமானமாய தர்மம் எவற்றிற்கோ, அவை சதர்மாணங்களாய்; அவற்றின் பாவம், சாதர்மியமாம். சமானதர்மம் என்பது திரண்ட பொருளாம். இங்ஙனமே, விருத்தமாய தர்மம் எவற்றிற்கோ, அவை விதர்மாணங்களாய்; அவற்றின் பாவம், வைதர்மியமாம். விருத்த தர்மம் என்பது திரண்ட பொருளாம்.

ஞேயதை, ஞானவிஷயதையாம். அதுவும் யாண்டுமே யுளது; ஈசுரஞான விஷயதைக்குக் கேவலாந்துவயித்தன்மை யுண்மையின். இங்ஙனம் அபிதேயத்தன்மை,பிரமேயத்தன்மை முதலனவற்றையு முணர்ந்துகொள்க. பொருள், பண்பு, வினை, பொதுமை, சிறப்பு, என்பவற்றிற்குச் சாதர்மியம் அநேகத்

தன்மையுஞ் சமவாயித்தன்மையுமாம். அநேகத்தன்மை, அபாவத்தின்கண்ணும் உளதாமாயினும், அநேகத்தன்மையோடு பாவத்தன்மை ஐந்தனுக்கும் சாதர்மியமாம். அங்ஙனமாகவே, அநேக பாவத்துள்ள பதார்த்தம் பகுக்கும் உபாதியுடைமை யென்பது திரண்ட பொருளாம். ஆதனாற் றனித்தனி குடமுதலியவற்றின்கண்ணும், ககனதியின்கண்ணும் அவ்வியாத்தியின்றாம். சமவாயித்தன்மையும் சமவாய சம்பந்தத்தாற் சம்பந்தித்தன்மையாம்; சமவாயமுடைமையோ பொதுமை முதலியவற்றின்கண் ணின்மையின். பொருட் பண்பு வினைகட்குச் சத்தையுடைமை யென்பது பொருள். பண்பு வினையின்றியதாந்தன்மை முதற்கணத்தே கடமுதலியவற்றின் மாட்டதிவியாத்தமாம், வினையின்றியதாந்தன்மையும் ககனதியிலதிவியாத்தமாம், ஆயினும், பண்பு பற்றுவதைப் பற்றுந்தர்மமுடைமையும், வினை விரவுவதை விரவாத பதார்த்தம் பகுக்கும் உபாதியுடைமையும், அவற்றின் பொருளாம். கடத்தன்மை முதலியவையேனும், பொருண்மைமுதலியவையேனும், பண்பு பற்றுவதைப்பற்றுததாதல், வினை விரவுவதை விரவாததாதலின்றாம்; மற்றோ, பண்புமை முதலியன அங்ஙனமாம். ஆகாசத்தன்மையாதியவோ, பதார்த்தம் பகுக்கும் உபாதியன்றாம். (9)

சாதி யாதிய சர்வஞ்சா மானியங்
காதி நின்றறு மென்று கருதுக
தாத பாரிமாண் டல்லிய பின்னங்கட்
கோது காரணப் பான்மை யுரைப்பரால். (10)

பொதுமைக்கு நிலைக்களமாகாமை பொதுமை முதலியவற்றிற் கென்பது பொருள்.

காரணத்த
பாரிமாண்டல்லியம், பரமாணுப் பரிமாணம்.
அணுபரி
ன்மை அதன்வேறாயவற்றிற் கென்பது பொருள்,
அதுவோ தன்னைப்பற்
மாணமோ எதற்கும் காரணமன்றாம்.
றித் தொடங்கும் பொருட் பரிமாணந் துவக்குவதாகும்.
அதுவோ சம்பவியாதாம், பரிமாணத்திற்குத் தனது சமான
ஜாதியையுடைய உயர்வாய பரிமாணம் பயக்குந்தன்மை நிய
மத்தான். மகத்தொடங்கியதற்கு மகத்தரத்தன்மை மதிப்ப
அணுப்பயந்ததற்கு அணுதரத்தன்மை யடைவுறல்வேண்டும்.
இவ்வாறு பரமமகற்பரிமாணம், புலப்படாப் பொதுமை, சிறப்
புக்களும் உணரத்தக்கனவாம். இதுவும்,யோகிகாட்சியில் விட
யத்திற்குக் காரணத்தன்மையின்றாம்,உணரப்பட்ட பொதுமை
சம்பந்தமன்றாம், உணரப்பட்ட குறி அனுமிதி கரணமன்றாம்,
என்னுங் கருத்தாற் றெரித்ததாமெனக. ஆன்ம மானதக்காட்
சியின்கண் ஆன்ம மகத்துவத்திற்குக் காரணத் தன்மையு
ண்மையின் பரம மகத்பரிமாணம் ஆகாசாதிகட் கறியத்தக்க
தாம். அதற்குங் காரணத்தன்மை யின்றெனபதாசிரியர் கரு
த்தாமென்பர் மற்றார், அஃதன்றாம், அறிவின் வேறாபதன்
பொருட்டே அகாரணத்தன்மையை யாசிரிய ரறைந்திரு (10)
த்தலின்.

அற்றேற் காரணத்தன்மை யாதெனக் கடாவின்
விடையளிக்கப் படுகின்றது :—

பிறிதுறு நெறியினாற் பெறப்படாததாய்
முறிவற நியதமாய் முன்னி னிற்பதே
யறிதரு காரணத் தகைமை யாகுமாற்
செறிதிரி விதமது செப்ப லாகுமே. (11)

அது, காரணம்.

ஒருசம வாயமு முளசம வாயமு
மிதுறு நிமித்தமு மாகுங் காரணத்
திரிவித மிதுவெனத் தெரித்து ளார்களா
லுரியநி யாயநூ லுணர்ந்து ளார்களே. (12)

எதின்சம வேதமா யெழும்புங் காரிய
மதுசம வாயியாஞ் சனக மாகுமா
லதிலிருந் தாக்குவ தசம வாயியாந்
திதியிவை தமிற்றிரு தீயம் வேறதே. (13)

சமவாயி காரணத்திற் சமவேதித்துக் காரணமாவது அசமவாயி காரணமாமென்பது பொருள். ஈண்டு, நாடா நூற்சையோகத்தின்கண் ஆடை யசமவாயி காரணத்தன்மை யாம், வேகமுதலியவற்றிற்கு அபிகாதாதி யசமவாயி காரணத்தன்மையாம், இங்ஙனம் ஞானமுதலியவற்றிற்கும் காமமுதலியவற்றின் அசமவாயி காரணத்தன்மையாம்; ஆயினும், ஆடை யசமவாயி காரண விலக்கணத்தே நாடா நூற்சையோகவயலாந் தன்மைகொடுக்கற் பாற்றும். நாடா நூற்சையோகமோ, நாடாவாடைச் சையோகப் பொருட்டு அசமவாயி காரணமாவதேயாம். இங்ஙனம் வேகமுதலியவையும், வேகம் இயக்கன் முதலியவற்றிற் கசமவாயி காரணமாவதே யாமென்க. அவ்வக்காரிய அசமவாயி காரணவிலக்கணத்தே ஆதனதனயலாந் தன்மை கொடுக்கற்பாற்றும். ஆன்மச் சிறப்புப் பண்புக்கட்கோ எவ்வுழியும் அசமவாயி காரணத் தன்மையின்று மாதலின் அதனயலாந் தன்மைபொது விலக்

கணத்தை கொடுக்கற் பாற்றேயாம். ஈண்டு சமவாயி காரணத் திருத்தல், காரிய வொருபொருட் சம்பந்தத்தானும், காரண வொருபொருட் சம்பந்தத்தானும் என இருபகுப்பாம். முதலாவ தெங்ஙனம்: கடமுதலியவற்றைக் குறித்துக் கபால விபைபுமுதலியவை அசமவாயி காரணம்; ஆண்டுக்காரியமாய கடத்தோடு காரணமாய கபாலவிபைபுக்கு ஒரு கபாலத்தின் கட் சம்பந்தமுளது. இரண்டாவது எங்ஙனம்: கட வுருவத்தைக்குறித்துக் கபாலவுருவம் அசமவாயிகாரணம்; ஆண்டுத் தற் கணுற்றவுருவ முதலியவற்றைக் குறித்துச் சமவாயி காரணம் குடமாம்; அதனோடு கபால வுருவத்திற்கு ஒரு கபாலத்தின்கட் சம்பந்தமுளது. அங்ஙனமாகவே,சிலபாற் சமவாய சம்பந்தத்தான், சிலபாற் றற்சமவாயி சமவேதத்தன்மைச் சம்பந்தத்தான் என்பது திரண்டபொருளாம். ஆகவே காரிய வொருபொருட் சம்பந்தத்தானுதல், காரண வொருபொருட் சம்பந்தத்தானுதல் சமவாயி காரணத்தை நிகழுங் காரணம், ஞானுதிபின்ன அசமவாயி காரணமென்பது பொதுவிலக்கண மெனத் துணியப்பட்டது. இவை தமின்,சமவாயிகாரண அசமவாயிகாரணங்களினும், வேறதையாய காரணம், திருதீயமாய, மூன்றுவதாய; நிமித்தகாரணமா மென்பதுபொருள்.

## இஞ்ஞான்று பிறிதோராற்றுற் பெறப்படுந் தன்மையே எத்துணையனவற்றிற்கா மெனக்கடாவ, விடையளிக்கப் படுகின்றது:—

இயற்றேதனி ரேடுமனமிருப்பதாங் காரணங்கொண் டேதற்குத்தானு, மயற்குறித்து முன்னிருத்த லறிந்தவழி யாதின்முன்

மை யறியலாகும், பயப்பதனைக் குறித்துமுன்மை யுணராதிங் கேதன்கவர்ச்சி பற்றலாகா, செயப்பெறுமிங் கேதுநியத வின்றி யொன்று முன்னுளதாற் சேவிதின்வேறே. (14)

எக்காரியங் குறித்துக் காரணத்திற்கு முன்னிற்றற்றன்மை எவ்வடிவத்தாற் கவரப்பெறலாமோ அக்காரியங்குறித்து அவ்வடிவம் பிறிதோராற்றுற் பெறப்படுவதா மென்பது பொருள், எங்ஙனம்: கடங்குறித்துத் தண்டத்தன்மை என்பது.

இரண்டாவது பிறிதோராற்றுற் பெறப்படுவது இயம்பப்படுகின்றது:—காரணவெண.

எதற்குத்தன்னுன் உடன்பாடெதிர்மறைக ளிலவாமோ, மற்றொன்று, காரணங்கொண்டே உடன்பாடெதிர்மறைகள் உணரலாமோ, அது பிறிதோராற்றுற் பெறப்படுவதாம். எங்ஙனம்: தண்டவுருவம்.

மூன்றுவது பிறிதோராற்றுற் பெறப்படுவது மொழியப்படுகின்றது:— அயற்குறித்தெண.

அயற்குறித்து முன்னிற்றற்றன்மை யறிந்தே எதற்கு எக்காரியங் குறித்து முன்னிற்றற்றன்மை யறியலாமோ அதற்கு அக்காரியங்குறித்துப் பிறிதோராற்றுற் பெறற் பெற்றியாம். எங்ஙனம்: கடமுதலியவற்றைக் குறித்துக் ககனத்திற்கு என்பது. அதற்கோ கடமுதலியவற்றைக் குறித்துக் காரணத்தன்மை ககனத்தன்மையானேயாம். ககனத்தன்மையோ சத்தசமவாயி காரணத்தன்மையாம். இவ்வாறாக அத

ற்குச் சத்தங்குறித்துச் சனகத்தன்மை யறிந்தே கடமுதலிய வற்றைக் குறித்துக் காரணத்தன்மை யறியலாகும்; ஆதலின், அது பிறிதோராற்றாற் பெறப்படுவது. அற்றேல், ஓசைக்குப் பற்றுக்கோடாந் தன்மையானே அதற்குக் காரணத்தன்மை யாயவழி எப்பிறிதோராற்றாற் பெறப்படலமையு மாலோ வெனின், ஐந்தாவதா மெனக்கொள்க. அற்றாயின், ஆகாசத்திற் குச் சத்தங்குறித்துச் சனகத்தன்மையாயவழி வரைந்துகொ ள்வது யாதெனக்கடாவின், கவ்வுடைமை முதலியவேனும் சிறப்புப் பதார்த்தமேனும் ஆமென விடைவிடுக்க.

நான்காவது பிறிதோராற்றாற் பெறப்படுவது நவிலப் பெறுகின்றது:—பயப்பதெின.

எக்காரியம் பயப்பது குறித்து முன்னிற்றற் றன்மை யுணர்ந்தே தற்கு எக்காரியங்குறித்து முன்னிற்றற்றன்மை யுணரலாமோ, அதற்கு அக்காரியங் குறித்துப் பிறிதோராற் றாற்பெறற் பெற்றியாம். எங்ஙனம்: குயவற் பயந்தோன்குடங் குறித்து என்பது. அவற்கோ குயவற்பயக்குந் தன்மையானே குடங்குறித்துப் பயக்குந்தன்மையேலாயின் பிறிதோராற்றாற் பெறப்படலேயாம். குலாலத்தன்மை வடிவத்தானே பயக்குந் தன்மையே லாயினோ, உடன்பாடாம்; குலால மாத்திரத்திற் குக் குடங்குறித்துப் பயக்குந்தன்மை யுண்மையின்.

ஐந்தாவது பிறிதோராற்றாற் பெறப்படுவது அறையப் படுகின்றது:—செயப்பேறுமெின.

இன்றியமையாது வேண்டற் பாலதாய நியத முன்னிற் றலினின்றே காரியங்கதுவுங்கால் அதனின் அயலாயது பிறி

தோராற்றாற் பெறப்படுவது என்பது பொருள். அதனானே, காட்சியின்; மகத்தன்மை காரணம். பல பொருண்மை பிறிதோராற்றாற் பெறப்படுவது. ஆண்டோ மகத்தன்மை இன்றியமையாது வேண்டற் பாலதாம், அதனாற் பலபொருண்மை பிறிதோராற்றாற் பெறப்படுவதாம். திரிபின் கண்ணே, பற்றிய பக்கம் நிறுவும் ஊகம்யாது கொல்லெனப் பகர்க, மகத்து வத்தன்மைப் பொதுமைக்குக் காரணத்தன்மையை வரைந்து கோடுந்தன்மையின்கண் நொய்திற்கோட லுண்மையினென்க.

எனுமிவைக ளைந்துமய லாற்றானே பெறுவவென்ப விவற்று ளாதி, யினமுறுந்தண் டத்தகைமை கடமுதலிற் றண்டவுரு விரண்டா மொன்றே, கனமதென்பவருங் குயவற் பயந்தவனே நான் காவன் கரமதாதி, பனுவவரைந்தென் றிவற்றுளின்றி யமையாத தீதுவாகும் பகரக் கேளாய். (19)

சிற்சில குடவடிவங் குறித்து வேசரிக்கு நியத முன்னித்தற்றன்மை யுளதாயினும் குடப்பொதுமை பற்றியவற்றைக் குறித்துத் துணியப்பெற்ற காரணத்தன்மையனவாய தண்ட முதலியவற்றானே அவ்வடிவமுங் கூடலின், வேசரி வேறோராற்றாற் பெறப்படுவதா மென்பது கருத்து. இவ்வைந்து பிறிதோராற்றாற் பெறப்படுவனவற்றின் நாப்பண், ஐந்தாவது பிறிதோராற்றாற் பெறப்படுவது இன்றியமையாததாம், அதனானே மற்றவற்றிற்கும் பயனுடைத்தாந்தன்மை யுண்மையின். அங்ஙனமன்றே:—இன்றியமையாது வேண்டற் பாலனவாய் நியதமாய் முன்னிற்பனவேயாய தண்டமுதலியவற்றானே காரியங் கதுவுங்கால், தண்டத்தன்மை முதலியன பிறிதோராற்றாற்

*பெறப்படுவனவாம். திரிபில், பற்றிய பக்கம் நிறுவும் ஊகம் யாது கொல்லெனப்பகாற்க; தண்டத்தன்மைக்குக் காரணத் தன்மையாங்கால் தண்டமடங்கிய பரம்பரைக்குச் சம்பந்தத் தன்மைக் கற்பனையாம், ஆயவழி, அரிதின்முடிக வுண்மை யின். இங்ஙனம் மற்றவற்றிற்கும் பயனுடைத்தாந் தன்மை இதனானே கூடுமெனக.*

சமவாயி காரணத்தின் றன்மைபொருட் கேயெனவே தரிப் பாய் நீய, சமவாயி காரணதை பண்புவினை மாத்திரத்தே தய ங்கு நீங்கா, வமைபொருள்க டமினயற்கட் பற்றிநிற்றற் பெற்றியிவ ணறைய லாகுங், கமைகிதியா தியாவக்கும் பொருண்மையோடும் பண்புடைமை கழற லாமே. (16)

*அசமவாயி காரணத்தன்மை, பண்புவினைகளின் வேறுய வற்றின் வைதர்மியமாம், பண்பு வினைகளின் சாதர்மியம் என் பதன்கண்ணே கருத்தன்றும். அல்லது அசமவாயி காரணத் தமரும் சத்தையின் வேறுய பொதுமையுடைமை யென்பது தன்பொருள்; அஃதனான் அறிவு முதலியவற்றிற்கு அசமவாயி காரணத் தன்மையின்றேனும் அவ்வியாத்தியின்றும். நித்தி யப் பொருள்களாய பரமாணு விண் முதலியவற்றை விடுத்துப் பற்றியிருக்கும் பான்மை சாதர்ம்ய மென்பது பொருள்.*

*பற்றியிருக்கும் பான்மையோ சமவாய முதலிய சம்பந் தத்தான் இருப்புடைமையாம், சிறப்பாக நித்தியங்களும் கா லமுதலியவற்றி லிருத்தலின்.*

*இப்போழ்து பொருட்கே சிறப்பித்துச் சா தர்மியம் சாற்றத் துவக்கப்படும்.*

கிதிசலந்தே யுப்பவன மனமைந்து முன்மைபின்மை கிளர்
மூர்த் தத்வங், திதிதொழில்வே காசிரய முறுங்காலங் கம்மான்மாத்
திசைகள் சார்வ, கதத்தகைமை பரமமகத் துறுங்கிதியா திப
வைந்துங் கதிபூ தங்கள், துதைபரிச முறுநான்கும் பொருட்டொட
ங்குந் தன்மையையுந் தொடர்வ வாமே. (17)

மண்ணீரெரிகான் மனங்கட்கு முன்மை பின்மை யுடைமையும், மூர்த்தத் தன்மையும், வேகமுடைமையும், கர்மமுடைமையும் சாதர்ம்யமாம். யாண்டுக்குட முதலியவற்றே முன்மையேனும் பின்மையேனும் உண்டாதலிலேயா ஆண்டு அவ்வியாத்தியாங் கொல்லென வறைபற்க. முன்மை முதலியவற்றின் சமான நிலைக்களப் பொருண்மை வியாப்பியப் பொதுமை யுடைமையை விளம்ப விழை விருத்தலின். மூர்த்தத்தன்மை, தாழ்ந்த பரிமாண முடைமை; அஃதோ, இவற்றிற்கேயாய்; ககனமுதலியவற்றின் பரிமாணத்திற்கு எவ்வுழியும் தாழ்மை யின்மையின். முற்போல, வினையுடைமை, வினைச்சமான நிலைக்களப் பொருண்மை வியாப்பியப் பொதுமையுடைமையும்; வேகமுடைமை, வேகமிருப்பதன்கண் ணிருக்கும் பொருண்மை வியாப்பியப் பொதுமை யுடைமையும்; ஆமெனவுணர்க. கால ககன ஆன்ம திசைகட்குச் சருவகதத் தன்மை, சருவமூர்த்த சையோகித்தன்மை; பரமமகத்துவமுமாம். பரமமகத்துவத்தன்மை, சாதிவிசேஷமாம்; தாழ்ந்ததைப்பற்றுப் பரிமாணத்தன்மை யேனுமாம்.

மண்ணீரெரிகான் மாதிரங்கட்குப் பூதத் தன்மையாம். அதுவும் புறப்பொறியாற் கவரப்படுஞ் சிறந்தகுண முடைமை

யாம். ஈண்டுக் கவரப்படுந் தன்மை, இலௌகிகக்காட்சி வடிவத்தகுதியென வுணர்க. அதனான், அறியப்பட்டது குடம் என்னுங் காட்சியின்கண், அறிவிற்கும் உபநீதபான (ஞான இலக்கண சம்பந்தத்தா லுண்டாய ஞான) விடயத்தன்மை யுண்மையின், அஃதுடையான்மாவின்கண் அதிவியாத்தியின்றாம். காட்சிக்குப் புலப்படா வுருவ முதலியவற்றை யுற்ற பரமாணு முதலியவற்றின் கண் அவ்வியாத்தியும் ஆகாதாம்; அதற்கும் வடிவத்தகுதி யுண்மையானும் மகத்துவ இலக்கண மற்றைய காரணம் முன்னிற்ற லின்மையானும் காட்சித்தன்மை யின்றாம். அல்லது, ஆன்மாவின்கண்ணிராத சிறந்த குண முடைமை, அத்தகைமையாம். மண்ணீ ரெரிகாற்கட்கு ஊறுடைமையும், பொருட் டொடங்குந் தன்மையுமாம். பொருட் டொடங்காக் குடமுதலியவற்றின்கண் அவ்வியாத்தியாகாதாம்; பொருட்சமவாயி காரணத்துற்ற பொருண்மை வியாப்பியப் பொதுமை யுடைமையை விளம்ப விழை விருத்தலின்.

விண்ணுயிர்க்கவ் யாப்யவிருத் திக்கணிக விசேடகுணம்
விரவ லாகு, மண்ணறநீக் குருவதிர வத்துவங்காட் சிப்படலும்
மருவு மண்ணீர், திண்ணதையோ டிரதமுற மண்டீயோ நயிமித்
திக திரவ மேவு, மெண்ணுயிர்பூ தமுஞ்சிறந்த குணமேயு மேது
புகன்றே மதன்சா தர்ம்யம். (18)

அயற்குவை தரும்ய மதுபரிசாதி யட்டமும் வேகமுங் காற்
காம், நயத்திர வதையு முருவமுந்தேயு நணுமிகக் குருச்சுவை

ஞேயம், பயக்குறு ஞேய மொழித்துமேன் மணத்தைப் பற்றுறுங் கிதி மதி முதலா, றியக்கற மறம்பா வினையெண்மு ஞன்கோன் றியை யுயிர்க் குறுவடன் ஞன்கே. (19)

ஆகாச ஆன்மாக்கட்கு அவ்வியாப்பிய விருத்தி கணிக விசேடகுண முடைமை சாதர்ம்யம் என்பது பொருள். ஆகாசத்திற்கு விசேடகுணம் ஓசை. அஃதும் அவ்வியாப்பிய விருத்தியாம். எஞ்ஞான்று ஒரு சிறிது வரைவான் ஓசையுற்பன்னமாமோ அஞ்ஞான்று வேறுவரைவான் அதனின்மையு மிருத்தலின். கணிகத் தன்மையும், மூன்ருவது கணத்திருக்கும் அழிவுபாட்டின் எதிர்மறைத் தன்மையாம். தகுதியாய விபுவின் விசேட குணங்கட்குத் தமது பின்னிருக்கும் விசேட குணத்தான் அழிவுபடுந் தன்மை யுண்மையின், முதலோசைக்கு இரண்டாவது ஓசையான் நாசமாம். இவ்வண்ணம் அறிவு முதலிய வற்றிற்குமாம். அறிவு முதலியவை எஞ்ஞான்று விபுவாய ஆன்மாவின்கண் ஆகவரைவான் உற்பத்தியாமோ, அஞ்ஞான்று குட முதலியவற்றின் வரைவான் அவற்றின் இன்மைகள் இருப்பனவேயாம். இங்ஙனம் அறிவுமுதலியவையும் இருகணம் இருப்பனவாம். இவ்வாருகவே அவ்வியாப்பிய விருத்தி விசேடகுண முடைமையும் கணிக விசேடகுண முடைமையும் ஆமென்பது பொருள். மண் முதலியவற்றின் கண் உருவமுதலிய சிறந்த குணங்கள் இருக்கின்றன என்பதினுன் அவ்வியாப்பிய விருத்தியெனக் கூறப்பட்டது. மண் முதலியவற்றின்கண் அவ்வியாப்பிய விருத்திகளாய சையோகாதிக ளிருக்கின்றன வென விசேட குணமெனக் கூறப்பட்

ட்டது. உருவ முதலியவற்றிற்கும் ஒருகால் மூன்றாவது கணத்தே அழிவு சம்பவித்தலின் கணிக விசேடகுண முடைமை மண் முதலியவற்றின் கண்ணே அதிவியாத்தமாமெனை அறையற்க. நான்காவது கணத்திருக்கும் உதயமாயவற்றின்கண்ணு முப்பொதுமையுறும் சிறந்த குணமுடைமை அதன் பொருளாதலின். அவாமதி முக்கணம் நிற்கும் நாற்கணமோ எவ்வெழுந்தஞான முதலியவையு மிராவாம். உருவத்தன்மை முதலியனவோ நாற்கண மிருப்பனவாய உருவ முதலியவற்றின் கண்ணும் இருக்கின்றனவென அவற்றது நீக்கமாம்.

கடவுண்ஞானத்திற்கு நாற்கண விருப்புண்மையின், ஞானத் தன்மைக்கு அதன் மாட் டிருப்புண்மையின் உதயமாயவென வுரைக்கப்பட்டது. ஆகாச ஜீவான்மாக்கட்குச் சாதர்ம்யமேல், அக்கால் உதயமாயவென ஈயாதொழிக; துவேடத்தன்மை முதலிய கொண்டு இலக்கணம் இனிது கூடலின். பரமமகத்துவத்திற்கு அத்தகைய குணத்தன்மை யுண்மையின், நான்காவதுகணத்தே இருமைமுதலவற்றிற்கு அழிவுடன்பாடுண்மையான் இருமை முதலவற்றிற்கும் அங்ஙனம் உண்மையின், அது நீக்குவான் சிறந்த வென்பதாம். முக்கணம் நிற்குந் தன்மையேனும் மொழிதற் பாலதாம், அவாத்தன்மைமுதலிய கொண்டு ஆன்மாவின்கண் இலக்கணம் கூடுமென்க.

நிலநீர்நெருப்புக்கட்கு உருவமுடைமையும், நெகிழ்ச்சியுடைமையும், காட்சிவிடயத் தன்மையும், ஆம் என்பது பொருள். விழி முதலிய வற்றிற்கும், காய்ந்த கபாலங் கதுவிய கனலழற்சிக்கும், உருவ முடைமையின்கண் அளவ்வையாது

கொல்லென வறையற்க. ஆண்டும் தேயுத்தன்மையானே உரு
வக்கருத லுண்மையின். இங்ஙனம், மாருதங் கொணர்ந்த
மண்ணுற லெரிப்பாகங்கட்கும், மண்மை முதலவற்றான் உரு
வக்கருத லுணரத்தக்கதாம். குடமுதலவற்றினும், நெகிழ்ந்த
பொன் முதலியவற்றின் வேறாய தேயுவினும், நெகிழ்ச்சியுடை
மை அவ்வியாத்தம் ஆமென அறையற்க. நெகிழ்ச்சி நின்ற
தன்கண்ணிற்கும் பொருண்மை வியாப்பியப்பொதுமை யுடை
மையை அறைய அவாவிருத்தலின். அவியரக்காதியவாய
மட்களின்மாட்டும், உதகங்களோடும், நெகிழ்ந்த மாழை முத
லிய தேயுக்களிடத்தும், நெகிழ்ச்சி யுண்மையின்; ஆண்டும்
மண்மை முதலன வுண்மையின் அவைகொண்டு யாண்டும்
இலக்கணம் இனிதுகூடும்.

காட்சி விடயத்தன்மை பரமாணு முதலியவற்றின்கண்
அவ்வியாத்தமாம், அதிவியாத்தமுமாம் உருவ முதலியவற்
றின் கண்ணென வுரையாடற்க. கட்புலனாய இலௌகிகக்
காட்சி விடயத்துற்ற பொருண்மை வியாப்பியப் பொதுமை
யுடைமையைப் புகலவேட்கை யிருத்தலின் ஆன்மாவின்கண்
அதிவியாத்தி யகற்றுவான் கட்புலனாலாய என்றதாம். திண்
மை யுடைமையும், சுவையுடைமையும், மண்ணீர்கட்காமென்ப
து பொருள். மணங்கவரும் பொறி முதலனவற்றிற்கும், மாரு
தங்கொணர்ந்த மண்முதலியவற்றின் பகுதிகட்கும் சுவைமு
தலன வுடைமையின்மாட்டளவை யாதுகொலாமாலோவென
வறையற்க. ஆண்டும், மண்மையாதியான் அது கருதப்பெறு
தலின். நிமித்தத்தானாய நெகிழ்ச்சி குடமுதலியவற்றினும்,

சுடர் முதலியவற்றினும், அவ்வியாத்தமாமென அறையற்க. நிமித்தத்தாருய நெகிழ்ச்சிச் சமான நிலைக்களப் பொருண்மை வியாப்பியப் பொதுமை யுடைமையைப் புகல விழைவிருத்தலின்.

நிலநீர் கனல் காற்ககன ஆன்மாக்கட்குச் சிறந்த குணமுடைமை யென்பது பொருள். ஞேயதை முதலவற்றை விடுத்து என வுணரற்பாற்றும், அவையோ எவற்றிற்கும் வைதர்ம்யமன்றும், கேவலாந்நு வயித்தன்மை யுண்மையின்.

சங்கையே முதல வைந்துறுஞ் சமயந் தசதிசை தமக்கருங் கமிற்கோ, இங்கவற்றோடு மோசையுமாகு மெண்முத லைந்திஞேடிச்சை, மங்கலவறிவு முயற்சியுங் கடவுண் மன்னுறு முன்மை பின்மைகளே, சங்கையே முதல வைந்தோடும் வேகந் தகுமனந் தனிலென வறியே. (20)

கம், ஆகாசம்.

சாதர்ம்ய வைதர்ம்யங்களைச் சாற்றி இஞ்ஞான்று தனித்தனி மண் முதலியவை சாற்றப் பெறுகின்றன:—

இசைய வற்றுட் கிதிமண வேதுவாம்
பசையு ருப்பல பற்றுறு மாஞ்சுவை
மிசைய றுவகை மேற்கோளு நாற்றமோ
அசையி ருவகை யாங்கறை வாரரோ. (21)

மணவேது வென்பது, மணசமவாயி காரணமெனப்பொருள்படும். மணமுடைமை மாத்திரம், மண்ணிற் இலக்கணமாய்

நன்னால் தகுதியாம், ஆயினும், மண்மைப் பொதுமையின்கண் அளவையறைவான் காரணத்தன்மை யறையப் பெற்றதாமெ ன்க. அங்ஙனமன்றே:—மண்மையோ, மணச்சமவாயிகாரண த்தன்மையை வரைந்து கொள்வதானே துணியப்பெறும். அன்றயினே, மணப்பான்மையான் வரைந்து கொண்டதற்கு நியதகாரண நியமமின்மை நேர்தலின். கன்முதலிய வற்றின் கண் மணமின்மையின் மணமுடைமை அவ்வியாப்தம் ஆங் கொலோவெனை அறையற்க. ஆண்டும் மணமுண்மையின், புலப்படாமையோ வெளிப் படாமையானுங் கூடுமாதலின். அன்றயினே, யாங்ஙனம் அதன்பொடியின் மணந்தோற்றல். பொடிக்கோ கல்லழிவு பாட்டாலுண்டாந் தன்மை யுண்மை யின், கல்லுபாதான உபாதேயத்தன்மை துணியப் பெறும். எப்பொருள் எப்பொருளழிவு பாட்டாலுண்டாமோ அது அதனுபாதான உபாதேயமென வியாத்தி யிருத்தலின். இஃ தைப் போரடை யழிவுபாடுபெற்ற சிற்றுடையின்கட் கண்டா மன்றே. இவ்வாறாகவே, கற்பரமாணுவிற்கு மண்மை யுண் மையின் அது பயந்தகற்கும் மண்மையாம்; ஆகவே, அதற்கும் மணமுடைமையின் கண் மறுப்பின்றாம். வெளுப்புக் கறுப்பு முதலிய வேறுபாட்டான் பலவகையாய உருவம் மண்ணின் கண்ணே நண்ணும். நீர் முதலியவற்றினே நிலவாதாம்; ஆண்டு வெளுப்பே யிருத்தலின். மண்ணின் கண்ணே தருமியொரு மை மருவினும் பாகவயத்தாற் பலவுருவங் கூடலின். யாண்டுப் பலவுருவ வுற்பவமின்றோ ஆண் டவ்வியாத்தியாமென வறைய ற்க. இருவுருவத்திருக்கும் பொருண்மை வியாப்பியப் பொது

மை யுடைமையை விளம்ப வேட்கை யிருத்தலின். உருவ நாச முற்ற தன் கண்ணுற்ற பொருண்மை வியாப்பியப் பொதுமையு டைமையையேனும் புகல விருப்பிருத்தலின். வைசேடிக மதத்தே மட்பரமாணுக்களின்கண் உருவ அழிவும் அயலுருவமும் இருத்தலின். நியாயமதத்தின் கண்ணே கடாதியின் கண்ணும், அஃதிருத்தலின், இலக்கணம் இனிது கூடுமென்க. மதுராமுத லிய பேதத்தான் எவ்வறுவகைச் சுவையுளவோ அவை மண்ணின் கண்ணே நண்ணும், நீரின்கண் மதுரச்சுவையேயாம், ஈண்டும் பூர்வம்போல இருசுவையுற்றதன் கண்ணுற்ற பொருண்மை வியாப்பியப் பொதுமையுடைமை இலக்கணப்பொருளெனத் துணிக. இருவகையென்றது வத்து நிலைமாத்திரம், இருவகை மணமுடைமை இலக்கணம் அன்றாம், இருவகைத் தாதற்குப் பயனின்மை யுண்மையின். இருவகைத்தாதலும் நறுநாற்றத் தீநாற்ற வேறுபாட்டால் என வுணரத்தக்கதாம்.

ஊறதற்கோ வெப்பதட்ப மொன்றுத பாகஜமாம் உரைத்த மண்ணுங், கூறுநித்த மநித்தமென விருவகையா மணுவடிவம் குறித்த நித்தம், கீறநித்த மதனயலாம் கிளரதுவே யவயவயோ கினியு மாகும், மாறதுமூ விதமாகு முடலினொடு பொறிவிடய வகையி னனே. (22)

அதற்கோ, மண்ணிற்கோ: வெப்பதட்பமில் ஊறுடைமை வளியின் கண்ணும் வயங்குகின்றதென வழங்கப்பட்டது பாகஜமென. இங்ஙனமாகவே, மண்ணிற்கு ஊறு—பரிசம், வெப்பதட்ப மில்லதென அறிவிக்கும் பொருட்டு அஃதறை யப்பட்டதாம்; உண்மையாயோ, பாகஜப்பரிச முடைமை மாத்

திரமே இலக்கணமாம், மிகுதிபயனின்றி நிற்றலின். பாகஜப் பரிசம் படமுதலவற்றே இன்றாமாயினும், பாகஜப்பரிசம் பற்றுவதைப்பற்றும் பொருண்மை வியாப்பியப் பொதுமையுடைமை பொருளாமெனவுணாற்பாற்றும். அம்மண் அழிவுறாததும் அழிவுறுவதும் என இருவகைத்தா மென்பதுபொருள். அணுவடிவம், பரமாணுரூபமண் அழிவுறாததாம். அதனயல், பரமாணுவின் வேறாயமண், துவியணுகம் முதலிய வடிவங்கள் யாவும் அழிவுறுவன வென்பது பொருளாம். அதுவே, அழிவுறும் மண்ணே; சினையுடை முதலாமென்பது பொருள். அற்றேற், சினைமுதற்கண்ணளவை யாதுகொல்? பரமாணுவீட்டத்தானே அது கூடலின். பரமாணுக்கள் புலப்படாமையின் கடாதிகளின் காட்சி கதுவாதெனக் கழறற்க. ஒரு பரமாணுவின் காட்சி யொவ்வாதேனும் அதனீட்டங் காட்சிப்படுதலிற் குறையின்றாம். ஒருகேசம் சேய்மையிற் காட்சிப்படாவிடினும் அதனீட்டங் காட்சிப்படுதலே போலும். ஒரு குடம் பெரிது என்னும் உணர்வு ஒல்லாதென உரையாடற்க. ஒரு பெருந்தானியக் குவாலென்பதொப்பவொல்லலின் இங்ஙனமின்றாம்; பரமாணு புலப்படாமையானே அதனீட்டமும் காட்சிப்படல் ஏலாமையின். சேய்மைக் கண்ணுற்ற கேசமோ புலப்படாததன்றாம், முற்பட்டவழி அதுவே காட்சிப்படுதலின். அஞ்ஞான்று திருசிய பரமாணுவீட்டம் உண்டாதலின் காட்சிப்படினும் முரணின்றாமென மொழியற்க. அதிருசியம் திருசிய வுபாதானமாகாமையின். அன்றாயினோ, கட்குடு முதலிய சந்ததி ஒருகாற் றிருசியமென வழங்கவேண்டும்.

மிகுதியா யமூன்ற எண்ணெய் முதலியவற்றின்கண் அதிருசிய
மாய அழற்சிச் சந்ததியினின்றும் திருசிய அழற்சியாதல்
யாங்ஙனமாங் கொல்லென அறையற்க. ஆண்டு அதனுட்பட்
ட திருசிய அழற்சிச் சினைகளாற் பேரழற்சியாதல் உடன்பாடா
தலின். அதிருசியமாய துவியணுகத்தாற் றிருசியமாய திரிச
ரேணுவினுதயம் யாங்ஙனமாங்கொல்லென வுரையாடற்க.
எதனாற் றிருசியத் தன்மையேனும் அதிருசியத் தன்மையே
னும் யாதாவதொன்றன் இயற்கையா லியம்பேமோ; மற்றிரு,
பெருமை வெளிப்பட்ட உருவம் முதலிய காரணக் குழுமல்
தழீஇயதற்குத் திருசியத்தன்மையாம்; அஃதின்றிய வழி
அதிருசியத் தன்மையாம். அங்ஙனமாகவே திரிசரேணு பெ
ருமையதாதலிற் காட்சிப்படும், துவியணுகம் முதலனவற்
றிற்கோ அஃதின்மையின் இன்றாமென்க. நின்மதத்தும் இஃ
தேலாதாம் பரமாணுவின் கண்ணே பெருமையின்மையின்.

இங்ஙனமாகவே சினைமுதற் றுணியப் பெற்றவழி அவற்
றின் பிறப்பிறப்புக்கள் காட்சியாற் றுணியப் பெறுதலின் அழி
வுறுவன வெனப்பெற்றாம். அவற்றின் சினையின் சினைத்தாரை
முடிபுறுதவழி வடகிரியுங் கடுகுமொக்குமென வழங்கல் வே
ண்டும். ஆகலின் யாண்டேனும் அமைதி அறைதல் வேண்டும்.
யாண்டு அமைதி பெறலாமோ அஃதழிவுறின் அசமவேதமா
ய்க் காரியமாதல் வேண்டுமாதலின், அஃதழிவுறாத தெனப்
பெற்றாம். மகற்பரிமாண ஏற்றத்தாழ்வுககணுதியின்கண் அமை
திபெற்றதாங்கு அணுப்பரிமாண ஏற்றத்தாழ்வும் யாண்டேனு
ம் அமைதிபெறவேண்டும், வேண்டவே அதுபரமாணுவெனப்

பெறுதும். திரிசரேணுவின் மாட்டே அமைதியாகுகவென வறைபற்க. திரிசரேணு, சினையணைவது, காட்சிப்பொருளா தலின்; கடங்கடுப்பமென்னுங் கருதலான். அதன்சினை பெற லாயவழி, திரிசரேணுவின் சினைகள். சினைகளணைவன, மகத் தொடங்கு வனவாதலின்; கபாலங் கடுப்பமென்னுங் கருதலா ன் அவற்றின் சினைப்பெறுதியாம். இஃதப் பிரயோஜகமென வறைபற்க, தாழ்ந்த மகத்துவங் குறித்துப் பல பொருண் மைக்குப் பிரயோஜகத் தன்மை யுண்மையின். இவ்வாறு முறையே அதன் சினைத்தாரையும் பெறுக வெனப் பேசற்க. வரம்பின்றியோடும் வெருவான் அது பெறுத லேலாமையின். அக்காரிய வடிவமண் மூவகைத்தா மென்பதுபொருள். உடற் பொறி விடய வேற்றுமையா னென்பது பொருள்.

## அவற்றுட்டேகம் அறையப் படுகின்றது:—

தேகமோ யோநி ஜாதியாம் பொறியோ திகழ்கிரா ணப்படி வமதாம், ஆகிரு வணுக மாதியாய்ப் பிரம வண்டம தந்தமாம் விடயம்,வாகற றனில்வெண் ணிறஞ்சுவை பரிச மதுரசீ தளமதா மவண்சி, நேகநன் னிகழ்ச்சி யோவியற் கையதா நித்திய தாதி முன் போன்றே. (23)

யோநிவாய்ப் பிறப்பனவும், யோநிவாய்ப் பிறவாதன வும் என்பதுபொருள். யோநிவாய்ப் பிறப்பனவும், பையிற் கட்டுப்பட்டுப் பிறப்பனவும், முட்டையிற் கட்டுப்பட்டுப்பிற ப்பனவுமென இருவகைத்தாம். மநுடர் முதலாயினோர் பையிற் கட்டுப்பட்டுப் பிறப்பவராம். பாம்பு முதலியவை முட்டையிற்

கட்டுப்பட்டுப் பிறப்பனவாம். யோனிவாய்ப்பிறவாதன
வேர்வையிற் பிறப்பனவும், பூப்பிளந்து பிறப்பனவு
மாம். வேர்வையிற் பிறப்பன, கிருமி கொசுகு முத
லாயினவாம். பூப்பிளந்து பிறப்பன : தரு, கொடி
முதலியனவாம். நிரயத்துள்ளா ராகங்களும் யோநி
வாய்ப் பிறவாதனவாம். மநுடர் முதலாயினாது
குரம்பைகள், மட்பற்றினவென்பதன்கண் மானம்
யாது கொல்லென வாதாடற்க; மண முதலியன வுடை
மையே மானமாதலின். தட்ப வெப்பமுதலியன தோற்
றலான், நீர்பற்றினா முதலனவாயும் நிகழுமென நிகழ்த்
தற்க; அங்ஙனமாயினோ, நீர்மை மண்மை முதலியவற்
றூற் சங்கரப்பிரசங்கமாதலின். ஆயின், நீர்பற்றற்பெற்றி
முதலனவே நிகழுக, மட்பற்றற்பெற்றி மருவாதொ
ழிகவென மன்றாடற்க; தட்பமுதலியன தனாரினும்
காயத்தன்மையானே பிரத்தியபிஞ்ஞை கூடாமையானும்,
மணமுதலியன புலப்படலானும், மண்மை துணியப்பெ
றுதலின். அதனான் மட்பற்றிய காயாதிகளின்கண் நீர்
முதலியவற்றிற்கு நிமித்தத்தன்மைமாத்திரம் உணரற்
பாற்றும். சரீரத்தன்மையோ சாதியன்றாம்; மண்மை
முதலியவற்றோடு சாங்கரியம்மருவலின். மற்றோ, சேட்
டைக்குப் பற்றுக்கோடாந்தன்மையாம்; தருமுதலிய
வற்றிற்கும் சேட்டையுண்மையின் அவ்வியாத்தியின்
றாம். தருமுதலியவற்றிற்குச்சரீரத்தன்மையுண்மையின்
மானம் யாதுகொல்லென வழங்கற்க; ஆத்தியான்மிக
வாயு சம்பந்தத்திற் களைவைத்தன்மை யுண்மையின்.

அதன் கண்ணேதான் யாதுகொல் லளவை யெனின்? வெடிப்புக்காயங்கள் கூடன் முதலியவற்றான் அது கருதப்படுதலின். கைமுதலியவற்றின்கட் காயவழக்குண்டாகாதாயின் அஞ்ஞான்று முடிபாயசினையுடைமையாற் சிறப்பிக்க. யாண்டு யாக்கையின்பாற் சேட்டை யுதியாதோ ஆண்டவ்வியாத்தியாமெனஅறையற்க; அத்தகையதில் அளவையின்மையின். அல்லது சேட்டையுடைய முடிபாய சினையுடையதன்கட் சிவணும் பொருண்மை வியாப்பியப்பொதுமை யுடைமையாதல், முடிபாயசினையுடையதன்கண் மாத்திரமிருக்கும் சேட்டையுடையதன்கட் செறியும் பொதுமையுடைமையாதல், அதுவாம். மாநுடத்தன்மை,சைத்திரத் தகைமை முதலிய பொதுமையைப்பற்றி இலக்கணம் இனிதுகூடும். நரஹரித்திருமேனியின்கண் இலக்கணம் இனிதாயிைபதல் யாங்ஙனம்? ஆண்டு நரஹரித்தகைமைக்கு ஒருவடிவூடிருத்தலானே சாதித்தன்மையின்மையான், நீர்பற்றிய தீப்பற்றிய தேகத்திருத்தலானே தேவதத்தன்மைக்கும் சாதித்தன்மையின்மையின் எனச்சாற்றற்க; கற்பபேதத்தான் நரஹரித்திருமேனிகள்பலவாதலின். நரஹரித்தன்மைப்பொதுமையான் இலக்கணம் இனிது இயைதலின். கிராணேந்திரியம் மட்பற்றியதென்பது பொருள். மட்பற்றற்பெற்றி யாங்ஙனமாலோவெனின், இங்ஙனமாம்:--கிராணேந்திரியம் மட்பற்றியது, உருவமுதலியவற்றின் நாப்பண் மணத்தையே மலர்விப்பதா

தலின், குங்கும மணத்தைக் குலவிக்கும் ஆனெய்போ லும். உபமானத்தே தன்பாலுற்ற உருவமுதலியவற் றை யிலக்கலின் அசித்தியாமெனை அறையற்க; பிறிதின் பாலுற்ற உருவமுதலியவற்றை யிலக்காமை அதன் பொருளாதலின். புதுப்பானை மணத்தைப் புலப்படுத் தும் நீரின்கண் அநைகாந்திகத் தன்மையாமென அறை யற்க; அது, மாச்சுவையை மலர்த்தலின். அல்லது பிறிதின்பாலுற்ற வெனக்கொடாதொழிக; மாருதங் கொணர்ந்த நறுமண அங்கிசம் உபமானமாதல் ஒவ் வலின். கிராணேந்திரிய சந்நிகருஷத்திற்கு மணமா த்திரத்தை மலர்வித்தற்றன்மை யுண்மையின் ஆண்டுப் பிறழ்ச்சியாம் என அறையற்க ; பொருண்மையுடன் பொருந்தியதாய் எனச்சிறப்பித்தலின். உபபோகசாத னம் விடயம். காரியக்குழு முழுதுமே அதிருஷ்ட அதீ னமாம். எக்காரியம் எவ்வதிருஷ்டாதீனமாமோ அஃ தத னுபபோகத்தை நேராகவேனும்,நிரையாகவேனும் உளதாக்கல் ஒருதலையேயாம். பீஜப்பிரயோஜனங்களா னன்றி யொன்ற னுற்பத்தியு மின்றாம். அதனாற் றுவிய ணுக முதல் பிரமாண்டம்வரை யாவுமே விடயமாகும். உடற்பொறிகட்கு விடயத்தன்மை யுளதாயினும் வே றோராற்றால் விளம்பியது மாணாக்கன் மதித்தெளிவின் பொருட்டாம்.

நீர் நிரூபிக்கப்படுகின்றது:—வாகற றனி லெனை.

நேயசமவாயிகாரணத் தன்மையை வரைந்து கொள்வதானே நீர்மைப்பொதுமை துணியப்பெறும்.

நேயத்தன்மை நித்தியாநித்தியத்திருத்தலினலேனே, காரி யத்தன்மையைவரைந்து கொள்வதாகாதாயினும், உண் டாய நேயத்தன்மை யன்னணமாமென வுணரற்பாற் றும். அற்றாயினும் பரமாணுவின்பால் நீர்மைபற்றாது ஆண்டுண்டாய நேயமின்மையின், நித்தியமாய அதற் கும் வடிவத்தகுதியாயின் பயன் இன்றியமையாது கை கூட லொருதலைபதாலின் எனின்? அற்றன்று; பயக் கப்படும் நேயத்தைப் பயக்குந்தன்மையை வரைந்து கொள்வதாய பயக்கப்பட்ட நீர்மைப்பொதுமை துணி யப் பெறலாயவழி அது வரைந்து கொண்ட பயக்குந் தன்மையை வரைந்து கொள்வதானே நீர்மைப் பொது மை நேரப்பெறுதலின்.

வெண்ணிறமே நீர்க்கென விளக்குவான் கூறப் பெற்றது:—வேண்ணிறமென. வெண்ணிற முடைமை யோ இலக்கணமன்றும். அல்லது நிமித்தத்தாலாய நெகிழ்ச்சி நின்றதி னில்லாததாய உருவமுற்றதன்கண் உற்ற பொருண்மையின் நேர்வியாப்பியப் பொதுமை யுடைமையாதல், விளங்கா வெண்ணிறவேறாய வுருவச் சமநிலைக்களமற்ற வுருவமுற்றதன்கண்ணுற்ற பொரு ண்மையின் நேர்வியாப்பியப் பொதுமையுடைமையா தல், அதன்பொருளாம். அதனான் வெண்பளிங்குமணி முதலியவற்றின்மாட் டதிவியாத்தியின்றும். நீர்க்குத் தித்திப்பே சுவையாம். சீதமே யூறும். துவர்ப்புச்சுவை துதைந்ததன்கட் டுதையாத் தித்திப்பிருப்பதன்கண்

ணிருக்கும் பொருண்மையின் நேர்வியாப்பியப் பொது மையுடைமை அதன்பொருளாம்; அதனாற் சர்க்கரை முதலியவற்றின்கண் அதிவியாத்தியின்றாம். சீத வடூறாற்றதன்கண்ணுரு ஆறுறுவதன்கண்ணுறும் பொருண்மையின் நேர்வியாப்பியப் பொதுமையுடைமை அதன்பொருளாம்; அற்றேல், வெண்ணிறமே என்பது யாங்ஙனம்? யமுனைநீர் முதலியவற்றுள் கருமை காணப்பெறுதலின் எனின்? அற்றன்று; கறுப்பைப் பயக்குந்தன்மையை வரைந்து கொள்ளும் மண்மைப் பொதுமை யின்மையினானே நீரின்கண்ணே நீலவுருவு நேராமையின். யமுனைநீரின்கட் கருமைத்தோற்றமோ பற்றுக்கோடாயிருக்கும் உபாதியாலாயதாம். இதனானே விண்ணின்கண்ணே விக்ஷேபமாயவழி வெண்மைத் தோற்றமாம்.

அற்றாயினும், நீரிற் றித்திப்புள தென்பதன்மாட்டளவை யாதுகொல்? காட்சியா லெச்சுவையும் ஆண்டனுபவிக்கப் பெற்றிலேம்; தேங்காய்நீர்முதலிய வற்றின்கண் இனிமை தோன்றுகின்றதே யன்றோ வெனவியம்பற்க; அதற்குப் பற்றுக்கோடாய உபாதியாலாயதாந் தன்மை யுண்மையின். அன்றாயினோ, எலுமிச்சைச் சுவை முதலியவற்றுட் புளிப்பு முதலியன புலப்படுதலின் புளிப்பு முதலிய வுடைமையுமா மெனின்? அற்றன்று; கடுக்காய் முதலியவற்றை யுண்ணற்கு நீர்ச்சுவை யிலக்கற்றன்மையுண்மையின். கடுக்காயின்கண்

ணே நீர்வெப்பச் சையோகத்தான் வேற்றுச்சுவை
தோற்றுமென விளம்பற்க; கற்பனைக் கவுரவமுண்
மையின். மண்மைக்குப் புளிப்பு முதலியவற்றின் சனக
த்தன்மையை வரைந்துகொள்வதாந்தன்மை யுண்மையி
னானும் நீரிற் புளிப்புமுதலியனவின்றாம். எலுமிச்சைச்
சுவை முதலியவற்றின்கண்ணே பற்றுக்கோடாய உபா
தியாலாயது அங்ஙனம் புலப்படும். இன்னணம், உதி
த்த சீதவூற்றின் சனகத்தன்மையை வரைந்துகொள்
வதுஉதித்த நீர்ப்பான்மை; அதனால் வரைந்துகொண்ட
சனகத்தன்மையை வரைந்துகொள்வது அறற்பான்
மையென அறியத்தக்கதாம். இழைத்த சந்தன முதலி
யவற்றின்கண் இன்குளிர்ச்சி யிலங்கலோ சந்தனத்துட்
சார்ந்த அதிசீதள அறற்கேயாம். தேயுவின் சையோக
த்தான் நீரில் வெப்பம் நிலவல் உபாதியாலாயதென்பது
வெளிப்படையேயாம்; ஆண்டுப் பாகங் கூடாமை
யின், அவிமுதலியவற்றின்கண்ணும் அதனுள்ளமரும்
அறற்கே நேயமாம். நீர்க்கு நேயசமவாயிகாரணத்தன்
மை யுண்மையின். அதனான் நீரின்கண்ணே நேயமென
நினைத்தற்பாற்றன்று. இயல்பாய நெகிழ்ச்சித்தன்மை
சாதிவிசேடமாம்; காட்சியாற் றுணியப்பெற்றதாம்;
அதனால் வரைந்துகொண்ட காரணத் தன்மையை வரை
ந்து கொள்வதூஉம் அஃதேயா மென்பதுகருத்தாம்.
எண்ணெய் முதலியவற்றின்கண்ணும் நீர்க்கே நெகிழ்
ச்சியாம்; நேயமுதிர்ச்சியானும் அழற்றற்கநுகூலப்
படலாமென்பது மேற்றெரிக்கப்பெறும். மட்கேபோ

லென்பதுபொருள். அங்ஙனமன்றே, நித்தியம் அநித்தியமென் றீரிருவகைத்தாம். பரமாணுவடிவம் நித்தியம்; துவியணுக முதலியன யாவும் அநித்திய மும், அவயவசமவேதமுமாம். அநித்தியமும், உடற் பொறி விடய வேறுபாட்டான் மூவகைத்தாம். 23

பண்ணினும் யாது சிறப்போ அஃதறையப் படுகின்றது மற்றேவென.

24. மற்றே வுடல யோநிஜமா மருவும் பொறியோ ரசனமதாம், வற்றுக் கடலு மிமமாதி வயங்கும் விடய மேரிப்பூறு, நற்றீக் குருவ மொளிர்வெளுமை நயிமித் திகமா நெகிழ்ச்சியதோ, முற்றுன் போணித் யதைபொறி கண் முதிரு மேரிபோன் முதல்விடயம்.

உட லயோநிஜம்; அயோநிஜமேயாமென்பது பொருள். நீர்பற்றியதேகம் வருணலோகத்தே வெளிப் படையாம்; நீர்பற்றியதென்பதுபொருள். அங்ஙன மன்றே, இரசனம் நீர்பற்றியது, மணமுதலியவற்றை மலர்த்தாது இரசத்தையிலக்கலின், மாச்சுவையை மலர்த்தும் புனல்போலும். இரசன விந்திரிய வியைபின் கட் பிறழ்ச்சி நீக்குவான் பொருண்மை கொடுக்கற்பா ற்றும்.

விடயந் தரிசிப்பிக்கப்படுகின்றது:—வற்றுக் கடலு மென.

கடல், சிந்து; இமம், துஷாரம், பனி; ஆதி யென் னும் பதத்தான் யாற்றுடை ஆலாங்கட்டி முதலிய யா

வற்றையுங் கவர்ந்து கொள்க. இமகாகங்கட்குக் கடின தை புண்மையின் மண்மையாமெனவாதாடற்க; வெப்ப த்தால் விலீனமானவதற்கு நீர்மை காட்சியான் வெளி ப்படையா யிருத்தலின். எப்பொருள் எப்பொருளின் அழிவுபாட்டாலுண்டாமோ என்னும் வியாத்தியான் நிருபாதான உபாதேயத்தன்மை துணியப்பெறுதலின். அதிருஷ்டச் சிறப்பான் நெகிழ்ச்சி தடைப்படுதலின் காகாதிகளின் காடின்னிய வுணர்விற்கு மயற்றன்மை யுண்மையின்.

தேயுத்தெரிக்கப்பெறுகின்றது:—எரிப்பூறு மென்ப தாதியான்.

வெம்மை ஊறிலுறுஞ் சாதிவிசேடமாம்; காட்சி யாற் றுணியப் பெற்றதாம். இங்ஙனமாகவே, உற்பவ மாய வெப்பவூற்றின் சமவாயிகாரணத் தன்மையை வரைந்து கொள்வது தேயுத்தன்மைச்சாதி விசேட மாம். அதற்குப் பரமாணுவிலிருக்குந் தன்மையோ நீர்மைக்கென்ன நினைத்தற்பாற்றும். வெப்பவூறுடை மை மதிக்கிரணமுதலியவற்றிலவ்வியாத்தமெனஅறை யற்க; ஆண்டும், வெம்மையுண்மையின். மற்றோ, அத னுட்பொதிந்த புனலூற்றான் மறைபடுதலின் கவரப்பெ றுதென்க. இவ்வாறே அரதன கிரணத்தின்கண் மட் பற்றிய பரிசத்தான் மறைபடுதலின் விழிமுதலியவற் றின்கண்ணும் வெளிப்படாமையின் கவரப்பெற வின் றெனக் காண்க. வைசுவாநரனிடத்தும், மாகத கிரணதி

யின் மாட்டும், மட்பற்றிய வுருவத்தான் மறைபடு தலின் வெண்ணிறம் விளங்காததாம். அற்றேல், அவ் வுருவம் விளங்காதவழி தருமியுங்காட்சிப்படல் அடா தெனின்? அற்றன்று; பித்த மஞ்சளாற் சங்கிற் கொப்ப அயலதனுருவத்தானும் தருமியின் கவர்ச்சி சம்பவி த்தலின். கனற்கோ வெண்ணிறம் மறைபடலின்றாம்; மற்றோ, அதனது வெண்மை மறைபட்டுளதென்பர் மற்றார். பொன்முதலியவடிவத் தேயுவின்கண் அஃ துண்மையின். நிமித்தத்தானாய நெகிழ்ச்சி அனலாதியி லவ்வியாத்தமும், அவியாதியி லதிவியாத்தமும் ஆமென அறையற்க; மண்ணினண்ணு நிமித்தத்தானாயநெகிழ்ச்சி நின்றதன்கண் ணின்றபொருண்மையின் நேர்வியாப் பியப் பொதுமையுடைமையைப் புகல வேட்கையிரு த்தலின். நீர்க்கே நிகர்ப்ப வென்பது பொருள். அங் ஙனமன்றோ, அது நித்தியமும், அநித்தியமும் என இருவகைத்தாம். நித்தியம் பரமாணுவடிவமாம்; அத னய லநித்தியமும், அவயவியுமாம். அதுவும், உடற் பொறி விடயவேறுபாட்டான் மூவகைத்தாம். ஆகம் அயோநிஜமேயாம். அதுவும், சூரியலோகாதியின் கண்ணே வெளிப்படையாம்.

ஈண்டி யாதுசிறப்போ அஃதியம்பப் படுகின்றது:— பொறியென.

அற்றேல், கண்ணின் றேயுவாலாயதாந்தன்மை யின்கண் அளவை யாதுகொலாமாலோவெனின்? நுக

னுதும்; விழி தேயுவாலாயது, பிறிதின் பரிசத்தை யிலக்காது பிறிதின் உருவத்தையிலக்கலின்; பொலிவிள க்கேபோலும். பொலிவிளக்கிற்குத் தனது ஊற்றை யில க்குந்தன்மை யுண்மையின். ஈண்டுபமானத்தே அவ் வியாத்தி யகற்றுவான் முதலாவதுபிறிதின் என்பதாம். குடமுதலியவற்றிற்குத் தனதுருவத்தை யிலக்குந் தன்மை யுண்மையின் பிறழ்ச்சியை யொழிப்பான் இரா ண்டாவது பிறிதின் என்பதாம். அல்லது, ஒளிக் குபமானத் தன்மையொவ்வவின் முதலாவது பிறிதின் என்பதைக் கொடாதொழிக. கண்ணியையின்கட் பிற ழ்ச்சி கழிப்பான் பொருண்மை கொடுக்கற்பாற்றும்.

விடயந் தரிசிப்பிக்கப் படுகின்றது:—எரிபொன் னென.

அற்றேற் கனகத்தின் றேயுவாலாயதாந் தன்மை யின்கண் அளவை யாதுகொலாமாலோவெனின்? நவி லு தும்; கனகம் தேயுவின் கூறு, தடையின்றியதாகவே தழ விளிதுகூடியவழியும் கெடாதநெகிழ்ச்சிக் கிடனு யிருத்தலின்; எஃதிங்ஙனமின்றே அஃதங்ஙனமன்று; மண் மண்மானவென. அப்பிரயோஜகமெனவறைபற்க; மண் ணெகிழ்ச்சிக்கும், உதித்தநீர் நெகிழ்ச்சிக்கும், போழற் கூட்டத்தான் அழிவுபடுந்தன்மை யுண்மையின். அற் றேல், மஞ்சட்டின்மைக்குப் பற்றுக்கோடாய மட்பற் றியதும் அஞ்ஞான்று நெகிழும்; நெகிழவே, பிறழ்ச்சி யாமாலெனின் ? அற்றன்று; நீரிடைநின்ற மைத்தூட்

*போன்று அதற்குநெகிழ்ச்சியின்மையின். மற்றையரோ, மஞ்சட் பற்றுக்கோடாயதற்கு எரிதழ லினிதுகூடிய வழியும் முன்னுருவ அயலிராமை காண்டலின், அதன் றடையாக வேற்றுச்சாதியுற்ற நெகிழ்ச்சிப்பொருள் கற்பிக்கப்பெறுமென்ப. அங்ஙனமன்றோ, முற்றினும் நற்றீப்பற்றிய மஞ்சட் டிண்மைகட்குப் பற்றுக்கோடா யது, வேற்றுச்சாதியுற்ற வுருவத்தடையாயநெகிழ்ச்சிப் பொருளோடு கூடியதாம்; முற்றினும் நற்றீப்பற்றிய வழியும் முன்னுருவ அயற் சாதியதாய வுருவநிலைக்கள மாகாமையின், நீரிடைநின்ற பீதப்புடைவைபோலும். நில நீரினும் வேறாய அதற்கும் நெருப்புத்தன்மை நியமத் தான்.* **24**

## வாயு வழங்கப் படுகின்றது.

25. பாகஜவீன வெம்மைதண் மையவில் பரிச மாம் பவனத்துட் குறுக்கே, யேகுதலுடைய திதுபரி சாதி யிலிங்கம தாலிலங் குறுமா, லாகுநித் தியதை யாதி முன் போல வாகமே நிறைபொறி துவக்கா, மாகமன் னுயிர்ப்ப தாதிமா வாயு வவதியோ விடயமா யிடுமே.

*வெப்பந் தட்பமற்ற பரிசம் மண்ணின் கண்ணும் உண்மையின் உரைக்கப்பட்டது:—*பாகஜவீனவென.

*பாகத்தாலாகாதபரிசம் நீரின்கண்ணும் உண்மை யின் உரைக்கப்பட்டது:—*வெம்மை தண்மைய **வில்** லென.

அதனாற் காற்றுப்பற்றிய வேற்றுச் சாதிப் பரிசந் தரிசிப்பிக்கப் பட்டது. அதனைப் பயக்குந் தன்மையை வரைந்து கொள்வது வாயுத் தன்மையென்பது கருத்து. இவ்வாயு ஊறுமுதலிய குறியுடையதாம். வாயுவோ, ஊறோசை நிலையசைவுகளானே கருதப் பெறும். வேற்றுச்சாதி யூற்றானும், விலக்கணவோசையானும், புன்முதலியவற்றின் நிலையானும், சாகை முதலியவற்றின் சலிப்பானும், காற்றைக் கருதல் கூடலின். எங்ஙனம் வங்கூழின் காட்சி யேலாதோ அங்ஙனம் மேன்மிழற்றப் பெறும். நித்தியமும் அநித்தியமுமென மருத் திருவிதத்ததாம். பரமாணு வடிவம் நித்தியமாம்; அதனயல் அநித்தியமும், அவயவ சமவேதமுமாம். அஃதுவும் உடற்பொறி விடய வேறுபட்டால் மூவகைத்தாம். அவற்றுள், காயமயோநிஜம், கழுது முதலியனபோலவாம். ஆனால், தோய தேயு வாயுப் பற்றிய சரீரங்கட்கு மட்பற்றிய கூற்றை மரீஇ நிற்றலின் உபபோகவாற்ற லொல்லும். நீர்முதலியவை முக்கியமாயிருத்தலின் நீர்பற்றியதாந் தன்மை முதலியனவா மென்க.

ஈண்டு யாது சிறப்போ அஃதனையப் படிகின்றது:— ஆகமே நிறையென.

உடலெங்கும் நிறைந்து ஊற்றைக் கவரும் பொறி துவக்காம். அதுவும், வாயுவைமேயதாம். உருவ முதலியவற்றின் இடையே ஊற்றையே இனிதிலக்

கலின், காயமேப தோய சைத்தியத்தைக் காட்டும்; பீலிக்காலேபோலும்.

விடயம் விளக்கப் படுகின்றது:—உயிர்ப்பதாதியேன.

அழிவுறு மநிலம் நான்கு விதமாம். அதன் நான்காவதுவிதம் பிராணன்முதலியனவென ஆகரத்தே அறையப்பட்டுளது; ஆயினுந், தொகுத்தே ஈண்டு மூவிதமாக மொழியப்பெற்றது. பிராணனே ஒன்றே. இருதயமுதலிய நானுத் தான வயத்தானும் முகவாயிலாய் வெளிப்போதரன் முதலிய பலவினை வேற்றுமையானும் பல பெயரைப் பற்றுமென வாயு முடிவு பெறும். 25

ஆகாசம் அறையப்படுகின்றது:—

26. விண்ணினுக் கோலிவை சேடிககுணமா விரி போறி செவியதோன் றேனுங், கண்ணுபா தியினு லுதிப்பதின் சனகங் காலமிவ் வுலகினு சிரய, மேண்ணு முன் மைபின்மை களின்மதி யேது வெழிற்கண முத லுபா தியினு, லோண்ணுது ராந்தி காதிதீ யேத தோன் றுநித் தியந்திசை யாமே.

கங்காலதிசைகள் ஒவ்வொரு வடிவமாயிருத்தலின் ககனத்தன்மை முதலியன ஜாதியன்றும்; மற்றே, ஆகாசத்தன்மை ஓசையாசிரயத் தன்மையாம். வை சேடிகமென்னுங் கூற்றோ வேறு விசேடகுணவிலக் கற் பொருட்டாம். இதனுன் அளவையுங் காட்டப் பட்ட

தாம். அங்ஙனமன்றே, ஓசை, சிறப்புப்பண்பு, விழியாற் கவரத்தகாத புறப்பொறியாற் கவரும் பொதுமையுடைமையின், ஊறுப்ப. ஓசை, பொருட்சமவேதமாயது, பண்புடைமையின், சையோகங்கடுப்ப. என்னுங்கருதலான், ஓசைக்குப் பொருட்சமவேதத்தன்மை துணியப் பெறலாயவழி, ஓசை ஊறுடையதன் சிறந்த குணமன்றும், அனற்சையோக அசமவாயிகாரணமுடைமை யின்மையோடு அகாரண குணவாயிலாய்க் காட்சிப்படுதலின், இன்பம் போலும். பாகத்தாலாய உருவமுதலியவற்றின்கட்பிறழ்ச்சி நீக்குவான் ஓடுவரை உரைக்கப்பெற்றது. ஆடையுருவ முதலியவற்றின்கட் பிறழ்ச்சி நீக்குவான் அகாரணகுணவாயிலாய் என அறையப்பெற்றது. அறற்பரமாணுருவமுதலியவற்றின்கட் பிறழ்ச்சி நீக்குவான் காட்சி யெனக் கழறப்பெற்றது. ஓசை, திக்குக்காலமனங்களின் குணமன்றும், சிறந்தகுணமாயிருத்தலின், உருவமொக்க. ஆன்மாவின் சிறந்த குணமன்றும், புறப்பொறிக் கருகமாதலின், உருவமொக்க. இவ்வாறாகவே, ஓசைக்கிடம் ஒன்பதாவது பொருள் ககனவடிவமெனத் துணியப் பெறும். காற்சினைகளின்கண் நொய்தோசை முறையே காற்கட் காரணகுணவாயிலாய் ஓசையுண்டாகுக வென வுரையாடற்க; பொருளிருக்கும் வரையிராத்தன்மையானே வாயு விசேட குணத்தன்மையின்மையின். ஆண்டோ உடலும் விடயமும் இன்மையின் பொறி தரிசிப்பிக்கப் பெறுகின்றது:—விரிபோழியென.

அற்றேலாகாசம் எளிதிற்கோடலான் ஒன்றெனத் துணிதும். அற்றாயினும், செவிப்புலனே புருடவேற்றுமையான் வேறாமாதலின் யாங்ஙன மாகாசமாமெனின்? ஆண்டறையப் பெறுகின்றது—ஒன்றேனுமென.

விண்ணொன்றாகவே யிருப்பினும், செவித்துளையுபாதி வேற்றுமையான் வேறாய செவிப்புலன் வடிவமா மென்பது பொருள்.

காலங் கழறப் பெறுகின்றது—எழுவதினென.

ஆண்டளவை யறிவிப்பா னறையப்படுகின்றது—உலகினென.

அங்ஙனமன்றோ, 'இவ்வுழிகுடம்' என்றற்றொடக்கத்துத் தோற்றம் அருக்கனதினிது நடத்தன் முதலியவற்றை யெவ்வுழி விடயீகரிக்கின்றதோ அவ்வுழிஅருக்கனதினிது நடத்தன் முதலியவற்றொடு கடாதிகட்குச் சம்பந்தங் கழறற் பாலதாம். அச்சம்பந்தமும் சையோகாதிகள் சம்பவியாவெனக்காலமே அச்சம்பந்தத்தடங்குமெனக் கற்பிக்கப்படும். இங்ஙனமாகவே, அதனதாசிரயத் தன்மையே நலமுடைத்தாமென்க. அயலளவை யறிவிக்கப் பெறுகின்றது—முன்மைபின்மையென.

முன்மை பின்மை மதியின் சிறந்த நிமித்தங் காலமேயாம். முன்மை பின்மைகளின் அசமவாயிகாரணசையோகத்திற்குப் பற்றுக்கோடு நொய்திற் கோட

லான் அபலாயகாலமே கற்பிக்கப்பெறும் என்பது கருத்தாம். அற்றேல் ஒன்றாய காலத்தின் பெறுநிபாயவழியும், கண தின மாத வருடமுதலிய சமயபேதமுண்டாகாதாமெனக் கடாவ விடையளிக்கப்படுகின்றது.—கணமுதலென.

காலமோ வொன்றாயினும்உபாதிபேதத்தாற் கணமுதலிய வழக்கின் விடயமாம். உபாதியோ, தன்னுற் சன்னியப்பிரிவின் முன்னின்மை வரைந்துகொண்ட வினையேனும், முற்கூட்டம் வரைந்துகொண்ட பிரிவேனும், முற்கூட்டவழிவு வரைந்துகொண்ட பிற்கூட்ட முன்னின்மையேனும், பிற்கூட்டம் வரைந்து கொண்ட வினையேனுமாம். பிற்கூட்டத்தின் பின்னர் கணவழக்குண்டாகா தொழியுமாலோவென ஓதற்க; வேறு வினையு முண்மையின். பெரும்பிரளயத்தே கணவழக்குளதாமாயின் அழிவுபாட்டபாவத்தானே அறையத் தக்கதாம். தினமுதலிய வழக்கோ அவ்வக்கணக் கூட்டத்தானேயாம்.

திசை செப்பப் படுகின்றது—தூராந்திகாதியேன.

சேய்மையும் அண்மையும் தேசத்தாலாய முன்மை பின்மையென வுணரற்பாற்றாம். அம்மதிக்குச் சிறந்தகாரணம் திக்கேயாம். தேசத்தாலாய முன்மை பின்மைகளின் அசமவாயிகாரண சையோகத்திற்குப் பற்றுக் கோடாதலானே எளிதிற் கோடலான் ஒருதிசை துணியப்பெறுமென்பது கருத்தாம்.

[ஒரே திசையாயின் கிழக்கு மேற்கு முதலிய வழக்கு யாங்ஙனங் கூடியாமோவெனக் கடாவ விடையளிக்கப்படுகின்றது—]

27. ஒன்றதே யெனினு முபாதியின் பிரிவா லுறுங் கிழக் காதியா யுரைப்பார், கன்றுயிர் பொறியா தியவதிட் டாதாக் கரணமோ கருத்திரு வுடைத்தாம், பொன்றுட றமிலே பிறழ்தலினுடற்குப் போதமின் றத்திறன்பொறி கட், கென்றிடி லேவணம் பொன்றிடி லெழுவ தெழி னினை வென்றறி குதியே.

எப்புருடனுக் குதயகிரியையண்மிய எத்திக்குள தோ அஃதவனுக்குக் கிழக்காம். இங்ஙனம் உதயகிரியை யண்மியா எத்திக்குளதோ அது மேற்காம். இவ்வாறு எப்புருடனுக்கு மேருவையண்மிய எத்திக்குள தோ அது வடக்காம். அதனை யண்மியாதோ தெற்காம். "வருடங்களெல்லாவற்றினும்மே வடக்கினின் மேரு வயங்கி நிலைபெறும்" என்னும் நியமத்தான்.

ஆன்மா அறையப்பெறுகின்றது—கன்றுயிரேன.

ஆன்மத்தன்மைப் பொதுமையோ, இன்பத்துன்ப முதலியவற்றின் சமவாயிகாரணத்தன்மையை வரைந்து கொள்வதானே துணியப்பெறும். கடவுளிடத்தும் அப்பொதுமை யுளதேயாம். அதிருஷ்டாதி வடிவ காரணமின்மையின் இன்பத்துன்ப முதலியவற்றினுதயமின்றாம். வடிவத்தகுதி வாய்ந்த நித்தியத்திற்கு

இன்றியமையாது பயனைப்பயக்கும் பான்மையாமென் பதற் கப்பிரயோஜகத்தன்மை யுண்மையின். மற்றைய ரோ கடவுளிடத்தே மானமின்மையின், அப்பொது மை இலதேயாம்; பத்தாம் பொருண்மையின் பற்றின் றும், அறிவுடைமையானே பகுக்கப்படுதலின் எனப் பகராநிற்பர். பொறிகட்கும் புற்கலத்திற்கும் பாம்ப ரையாய்ச் சைதன்னியந்தருவிப்பது. ஆன்மாவின்கண் "யானுணர்ந்தேன் - யான்சுகி" என்பனவாதி காட்சி விடயத்தன்மை யுளதேயாமாயினும்; ஐயமுற்றுனைக் குறித்தாதியிலேயே ஆகமுதலியவற்றினின்றும் அப லாம் அத்தோற்ற விடயமென அறைவதற்காற்றலின் றென்பதனுல் அயலளவை அறையப்பெறுகின்றது:—

**கரணமோவென.**

சேதிக்குங் கரணமாய வாச்சி முதலியவற்றிற்குக் கர்த்தாவன்றிப் பயன் பயவாமைக்ண்டா மன்றே? அவ் வாறே அறிவின் கரணங்களாய கட்புலன்முதலிய வற் றிற்குப் பயன்பயக்கும் பான்மையும் கர்த்தாவின்றிக் கதுவாதெனக் கர்த்தா வேறு கற்பிக்கப்பெறும். அற் றேல், காயத்திற்கே கர்த்திருத்தகைமை கதுவுகவெ னக் கடாவ விடையளிக்கப் படுகின்றது—உடற்கென.

அற்றேற் சைதன்யம் அறிவு முதலியவற்றின் அதி கரணத்தன்மையேயாம். ஆகவே முக்தவடிவினர்க்கு நின்மதத்தே நிகர்ப்ப மரித்தசரீரங்கட்கும் அவையில வாயின் யாது கோதாம். உயிரின்மையானே யுணர்

வின்மையின் பெறுதியாதலினெனின் ? அற்றன்று; உடம்பிற்குச் சைதன்யமுடன்படின் பாலப்பருவத்தே பார்த்ததன் நினைவு விருத்தப்பருவத்தே கூடாமையின், குரம்பைகட் கவயவக் குறைவு மிகுதிகளான் மாற்றமுந் தோற்றமு முடைமையின். முற்சரீரத்துதித்த சமக்காரத்தாற் பிற்சரீரத்திற் சமக்காரங்கூடுமெனப் பேசற்க; அளவறு சமக்கார மாற்றின் அரிதின் முடிதலாதலின். இங்ஙனம் சரீரத்திற்குச் சைதன்யமொப்பிடிற் பாலகனுக்குத் தனபானத்தே முயல்வாகாதாம். இட்டசாதனத்தன்மைஞானம் அதனேதுவாதலின், அஞ்ஞான்றிட்டசாதனத் தன்மையை நினைப்பிப்ப தின்மையின். எம்மதத்தோ, முற்பிறப்பிலனுபவித்த இஷ்டசாதனத் தன்மையின் நினைவினுனே அஞ்ஞான்று முயல்வாம். முற்பிறப்பி லனுபவித்த மற்றவற்றையும் நினைகவென நிகழ்த்தற்க; வெளிப்படுத்துவதின்மையின். ஈண்டோ, நீட்சியின்மையான்உயிர்ப்பிக்கும் அதிருஷ்டமே வெளிப்படுத்துவதெனக் கற்பிக்கப்பெறும். இவ்வாறுகச் சமக்காரம் அநாதியாதலினுனே ஆன்மாவிற் கநாதித் தன்மை பெற்றவழி, அநாதிபாவத்திற் கழிவணுகாமையின் நித்தியத் தன்மைச் சித்தியாமென நினைதற்பாற்றும். அற்றேல், விழி முதலியவற்றிற்கே அறிவு முதலியவற்றைக் குறித்துக் கரணத்தன்மையும் கர்த்திருத்தன்மையும் உளவாகுக, முரணுறுவதிற் சாதகமின்மையின் எனக்கடாவ விடையளிக்கப்படுகின்றது:—அத்திறனென.

சைதன்யமென்பது பொருள். பொன்றிடில், நாசமாங்கால்; பொருளான், விழி முதலியவற்றிற்கே; யாங்ஙனம் மிருதியாம்? முன்னர் விழியாற் கவரப்பட்டவற்றின் நினைவு விழியின்மையின் நிகழாதாம்; கவர்வதின்மையின். மற்றொன்று கவர்ந்ததை நினைதல் மற்றொன்றாலேலாமையின் அநுபவமிருதிகளின் சமான நிலைக்களத்தன்மையானே காரிய காரணபாவமாதலின் என்பது கருத்தாம். 27

**அற்றேல் விழிகட்குச் சைதன்யம் உளதாகதொழிக, நித்தியமாய மனதிற்கோ சைதன்யம் உளதாகுகவெனக் கடாவ விடையளிக்கப்படுகின்றது.**

28. மனமு மன்னண மன்னுரு வுணர்வதா தியதா
மினிய காட்சிய திற்றதா யிடுமேந்த ஞான்றே
மனுவன் புண்ணிய பாவத்தை மலருமத் தியக்கன்
பனுவி சேடாற் குணத்தின்சம் பந்தத்தி னானே.

அன்னண மன்னுரு, சேதனமாகாதாம். ஞானதிகளின் அப்பிரத்தியக்ஷம் அஞ்ஞான்றுண்டாம், மனத்திற் கணுத்தன்மையுண்மையின்; பிரத்தியக்ஷத்திற்கு மகத்துவத்திற் கேதுத்தன்மை யுண்மையின்; மனத்தின் மாட்டறிவு இன்ப முதலியவை யிருப்பின் அவற்றின் காட்சி கூடாமையின் என்பது பொருள். மனத்திற் கணுத்தன்மையாமாறு மேன்மிழற்றப் பெறும்.

அற்றேல், விஞ்ஞானமே ஆன்மாவாகுக; அதற்குத் தன்னொளிரும் வடிவத்தன்மை யுண்மையின் சேதனத் தன்மையாம். அறிவு இன்ப முதலியனவோ அதனதாகாரச் சிறப்பேயாம். அதற்கும் உண்மையானே கணிகத்தன்மை. முன் முன் விஞ்ஞானத்திற்குப் பின் பின் விஞ்ஞானத்தின்கண் ஏதுத்தன்மை யுண்மையின், துயிலின்கண்ணும் ஆலய விஞ்ஞான தாரை மறுக்கப்படாததேயாம். மான்மத வாசனை வாசிக்கப்பெற்ற வசனம் மானும், முன் முன் விஞ்ஞானத்தாலுண்டாய சமக்காரங்கள் பின் பின் விஞ்ஞானத்தின்கண் விரவி நிற்றலின் மிருதி முதலியவற்றின் கூடாமையின்றாமெனின், அற்றன்று; அதற்கு அகிலவிடய முடைமையேலாயின் முற்றறிவுண்மையினடைவாம். அற்பவிடயமுடைமையேலாயினோ, பற்றிய பக்கம் நிறுவும் ஊகமின்றாம். துயிலின்கண்ணும் விடய விளக்கமுண்டாதல் வேண்டுதலினானும், ஞானத்திற்கு விடயமுடையதன்மையுண்மையின். அஞ்ஞான்று விடய மற்ற விஞ்ஞான சந்ததி தொடர்ந்து நிற்குமெனின், அற்றன்று; அதற்கு ஞானத்தன்மை யுண்மையின்கண் மானமின்மையின்; அன்றாயினோ, கடாதிகட்கும், ஞானத்தன்மையினடைவாம். விஞ்ஞானத்திற்கு வேறாய பொருள்களின்மையின் உடன்பாடாமெனவுரையாடற்க; அநுபவிக்கப்பெற்ற கடமுதலியவற்றை நீக்கவேலாமையின். இது விஞ்ஞானத்தின் வடிவ விசேடமேயாமெனின், இவ்வடிவமென் விஞ்ஞானத்திலும்

வேறுமா? ஆயின், விஞ்ஞானத்தினும் வேறு யினிது வந்தன. வேறகாதென்னைபேயலாயின், ஒருங்குணரு முணர்வின்கண் நீலவடிவமும், பீதவடிவமாம்; வடிவத்தான் விஞ்ஞானத்திற்குச் சிறப்பின்மையின். நீலமல்லாததை நீக்கும் வடிவ நீலத்தன்மை முதலியன விஞ்ஞான தர்மங்களெனின்? அற்றன்று; முரண்பட்டனவாய நீலத்தன்மை முதலியவற்றிற்கு ஒன்றன்கட் புகுதல் ஒவ்வாமையின்; வேறுயினோ, முரணுறு திறத்தை மொழிதலே கூடாமையின். வாசனை விரவலுங் கூடாதாம், தாய் தனையர்கட்கும் வாசனை விரவலுண்டாக வேண்டலின், உபாதானவுபாதேயபாவம் நியாமகமாமென வுரையாடற்க; வாசனைவிரவல் கூடாமையின்; பின்னதன்கண் ணுற்பத்தியே விரவலெனின்? அற்றன்று; அதனை யுதிப்பிப்பதின்மையின்; ஞானங்கட்கே யுதிப்பிக்குந் தன்மையாமேல், சமக்காரங்கள் அளவறுமென்னும் வழக்காதல் வேண்டும். கணிக விஞ்ஞானங்களின்கண்ணே, அதிசயச்சிறப்பாய ஆற்றற் சிறப்புக் கற்பிக்கப்படுமெனின், அற்றன்று; மானமின்மையின் கற்பனைக் கவுரவமாதலின். இதனுன், கணிக காயங்களின்கண்ணே சைதன்யம் மறுக்கப்பெற்றது; கவுரவத்தானும், அதிசயத்தின்மாட்டுமானமின்மையானும். விரை முதலியவற்றின் கண்ணும் சககாரியினிதுசேரல் சேராமைகளானே பொருந்தலின், பபக்கு முருவத்தன்மைக் கற்பனை பற்றுமையானுமென்க. கணிக விஞ்ஞா

னத்தின்கண் அரிதின் முடிதலுண்மையேலாயின், ஆன்மா நித்திய விஞ்ஞானமாகவே நிலைபெறுக, "அரே யிவ்வான்மா அவிநாசியன்றியும், அபாதிதம் ஞானம் அநந்தமாம் பிரமம்" என்பது முதலிய சுருதி யுண்மையினெனின்? அற்றன்று; அதற்கு விடயமுடை மை சம்பவியாமை காண்பித்திருத்தலின், விடயமில்ல தற்கு ஞானத்தன்மையின் மானமின்மையின். விடய முடைமையும் அநுபவிக்கவாராமையின்; ஆதலின் விஞ்ஞானுதியின் வேறாய் நித்திய ஆன்மாவெனச் சித் தமாம். சத்தியம் ஞானம் என்பதூஉம் பிரமபரமாம், சீவனிடத்தோ சிவனுதாம். ஞானம், அஞ்ஞானம், சுகித்தன்மை, துக்கித்தன்மை முதலியவற்றான் உயிர் கட்கு வேற்றுமை துணியப் பெறலாயவழி, ஒருதலை யேயாம் உயர் கடவுள்வேற்றுமை. அயலாயினே, பந்த வீட்டின் பகுப்புப் பற்றாதாம். கடவுளபேதத்தையுணர் த்தும் கதிர்மறையும் அதனபேதத்தான் அதனதாந் தன்மையை அறைந்து துதிக்கின்றது. அபேத பாவனை யானேயும் முயலத்தக்கதாமென மொழிகின்றது. இத னுனே "சருவவான்மாக்களுஞ் சமர்ப்பிதாமே" எனக் கேட்கப் பெறுகின்றது. வீடடையுந் தசையில் அஞ்ஞானம் வீடலாயவழி அபேதமுண்டாமென்பது மின்றும், பேதம் நித்தியமாயவிடத் தழிவுகூடாமை யின், பேதமழிவுற்ற வழியும் இருவடிவங்கள் இன்னிலை பெறுவனவே யாம். இருமையும் கரையுமென வியம்

பற்க. நினது தருமமற்றதாப பிரஹ்மத்திடத்தே சத்தி யத் தகைமையிலதேனும் சத்திய வடிவம் அஃதென் பதேபோல, இருமையிலதேனும் இருவடிவ வடிவின அவையென வியம்பற் கெளிதாதலின். பொய்ம்மையி னபாவம் நிலைக்களவடிவமாம், ஆண்டுச் சத்தியத் தகைமையெனின்? ஒருமையி னபாவம் இருவடிவ வடிவ இருமையுமென வியம்பத் தக்கதாம். தனித்தனி பொருமையிருப்பினும், மண்ணீர்களின்கண் மணமின் றெனன்மான உபயமொன்றன்றென்பதை யுலகரெவ ருந் துணிந்திருத்தலின். அஞ்ஞான்றபேத மறைவுறு மருமறையும் துன்பமின்மை முதலியவற்றுன் ஒப்புமை யுரைக்கின்றது; அதிக சம்பத்துளதாயவழி இப்புரோ கிதன் மன்னவனுயினன் என்பதேபோலுமென்க. இத னுனே "நிரஞ்சனன் பரமசாமியத்தைப் பெறுவன்" எனக்கேட்கப் பெறுகின்றது. கடவுளும் அறிவின்ப வடி வமன்றும்,மற்றே அறிவு முதலியவற்றின் பற்றுக் கோ டாம். "நித்தியம் விஞ்ஞானம் ஆனந்தம் பிரஹ்மம்" என்றற் றொடக்கத்தனவற்றுண்ணிகழும் விஞ்ஞான பதத்தால் அறிவின் பற்றுக்கோடே யறையப் பெற்ற தாம். "யாவன் முற்றறிவன் முழுது முணர்வோன்" என்றற்றொடக்கத்தனவற்றைப் பின்பற்றியதாமென்க. ஆனந்தமென்பதற்கும், ஆனந்தமுடையதென்பது பொ ருளாம். "அர்ஸாதி"த் தன்மையான் மதுவர்த்தத் தைத்தரும் "அச்" விகுதியாதலின்; அன்றுயினே,

ஆண்பாற்றன்மையடைவாம். இன்பமும், துன்பவின்மையின்கண் ணுபசரிக்கப்பெறும், சுமை முதலியன தணருங்காற் "சுகியாயினேன் யான்" எனல்போலத் துன்பமின்மையான் இன்பமுடைமை யுணர்வாதலின். இருக்குகதான் அதன் கண்ணின்பம், அஃதோவின்பமாகாதாம் 'அசுகம்' என்னும் அருமறையானென்க. இன்றிருப்பதின்ப மெதற்கென வேன்பொருள்படாதெனின்? அற்றன்று, கட்ட கற்பனை கதுவலினானும், பிரகரண முரணலினானும், ஆனந்தமென்பதன்கண் மதுவர்த்தத்தைத் தரும் அச்விகுதி முரணலினானும், "பிரமத்தினின்மைப் பெரியோனறிந்தே பீதியையாண்டும் பெற்றிலனவன்" என்பதன் கண்ணே பேதத்திற்கு வெளிப்படை யுண்மையானுமென்க. என்பது சுருக்கமாம்.

இதனல், "பகுதிகருத்தா, புருடனோபுட்கரபலாசம்போலப் பற்றிலனவன்; மற்ரூ சேதனன், காரிய காரணங்கட் கபேத முண்மையின் காரிய வழி வெய்திய வழி காரியவுருவத்தர்னே அதனழிவாகா தொழிக வென அவனுக்ககாரணத் தன்மையாம். மதிமாட்டுற்ற சைதன்யாபிமானம் அயலாற்ரூ லணுகாமையின் அதன் கற்பனமாம். மதியும் பகுதியின் பரிணமமாம்; அதுவே மகதத்துவமெனவும், அந்தக்கரணமெனவும் அறையப்பெறும். அதனுண்மை யின்மைகளான் புருடனுக்குப் பந்தமுத்திகளாம். அதற்கே பொறிவாயி

லாய் ஞானவடிவப் பரிணதியாம்; கடாதியோடு சம்பந்தமாம். புருடனிடத்தே கருத்திருத்துவ அபிமானமும், புத்தியின்கட் சைதன்னிய அபிமானமும் பேதங்கவராமையினும். "எனக்கிது செய்யற்பாலது" என்னும் எனதங்கிசம் புருடசம்பந்தமாம். மதிக்குத் தெளிவுண்மையானே சேதனப்பதிவிம்பத்தான் உண்மையன்றும்; ஆடிக்கானனச் சம்பந்தம்போலும். இதுவென்றது விடயசம்பந்தம், பொறிவாயிலாய்ப் பரிணதிபேதமுண்மையாம்; நிசுவாசத்தா லாக்கப்பெற்ற மலினிமை ஆடிக்கேபோலும். செய்யற்பாலதென்றது வியாபார அங்கிசமாம். அதனான் மூவங்கிசமுடையது புத்தியாம். அதன் பரிணாமஞானத்தான் உண்மையற்ற சம்பந்தம் புருடனுக்காம்; ஆடியின் மலினிமையான் ஆனனத்திற்கேபோலும். அஃதுபலப்தியென அறையப்பெறும். ஞானதிபோல இன்பத்துன்பம், இச்சை, துவேடம், முயற்சி, அறம், பாவங்களும் புத்திக்கேயாம். முயற்சிச் சமானநிலேக்களத் தன்மையானே புலப்படுதலின். மதி சேதனமன்றும்; பரிணாமிப்பான்மையான்" என்னும் மதம் எள்ளப்பெற்றதாம். முயல்வதிர்ஷ்ட போகங்கட்கே போலச் சைதன்னியத்திற்கும் சமான நிலேக்களத்தன்மை புலப்படுதலினானும், அதனினயலென்பதன்கண் ணளவையின்மையானு மென்க. சேதனன் யான் செய்கின்றேன் என்னுந்தோற்றம் சைதன்யாங்கிசத்தே மயலுடைத்தாமெனின்? முயல்வங்கிசத்

தும் உடன்படாததென்னோ? அன்றாயினோ புத்திக்கு நித்தியத் தன்மைபொருந்தின் முத்தியின்றாம்; அநித்தியத்தன்மை யணுகின் அதன்முன் னசம்சார வடைவாம்.

அற்றேல், அசேதனமாய பகுதியின் காரியப்பான்மையாற் புத்திக்கசைதன்ய வடைவாம். காரியகாரணங்கட்குத் தாதான்மிய முண்மையினெனின்? அற்றன்று; அசித்தியாதலின். கருத்தாவின் சன்னியத்தன்மையின் மானமின்மையின், இராகமின்றிப் பிறப்புக் காணாமை யின் அநாதித்தன்மையாம். அநாதிபாவத்திற் கழிவணுகாமையின் நித்தியத் தன்மையாம். ஆதலிற் பகுதி முதலியவற்றின் கற்பனையால் யாதுபயன்கொல்! "பகுதியின் குணங்களாற் பலவிதத்தினும், வகையுறு கருமங்கள் வினையப்பட்டன; அகங்காரமதனினா லறிவிலாதவன், அகங்கருத்தாவென வகத்தி லுன்னுவான்" என்பதனோடு முரணுறுமென மொழியற்க, பகுதியின், அதிர்ஷ்டத்தின்; குணங்களால், அதிர்ஷ்டம் பயந்த இச்சை முதலியவற்றால்; அகங்கருத்தா யானே என்பததன் பொருளாகலின். "அவணிவ் வகையுறக் கேவலமேயாம், ஆன்மாவைக் கர்த்தாவென யாவன்" என்பது முதலிய திருவாய்மலர்ந்தருளும் ஸ்ரீ பகவானால் மேலித்திருக்கருத்து வெளிப்படுத்தப் பட்டிருத்தலின் என்பது சுருக்கமாம். ஆன்மாவென வொட்டியுணர்க. ஆகம் அதனது பற்றுக்

கோடாமாயின் அயலாகத்தாலாற்றிய வினைகட்கு அயலாகத்தே போகங்கூடாமையின். தகுதியாய சிறந்த பண்புகளாய அறிவு இன்பம் முதலியவற்றின் சம்பந்தத்தான் ஆன்மாவின் காட்சி சம்பவிக்கும், அயலாற்றலோ வன்றாம். யானறிந்தேன் யான் செய்கின்றனன் என்றற்றொடக்கத்தன புலப்படுதலின். 28

29 செல்ல லாதி யனுமேய மீது தேரின் கதியாற்போ, லல்லில் சார தியிஃதே யகங்கா ரத்தி ஞசிரயம், நல்ல மனமாத் திரத்தின்கோ சரம தாகு நவில் விபுவாஞ், சோல்லு மதியா தியகுணவான் றுதையம் மதியு மிருவிதமே.

இவ்வான்மா அயற்காய முதலியவற்றே, செல்லன் முதலியவற்றாற் கருதப்பெறும். செல்லலீண்டு சேட்டையாம். அறிவு, இச்சை, முயல்வு முதலியவற்றினின்மையை யாகத்தே அறைந்து வந்தமையினானும். சேட்டையும் முயல்விற்சாதிக்கற்பாலதாதலினானும், சேட்டையான் முயல்வுடை யான்மாவும் கருதப்பெறுமென்பது கருத்தாம். ஈண்டு திருட்டாந்த மியம்பப்படுகின்றது:—தேரினென,

தேர்த்தொழில் சேட்டையாகாதாமாயினும், அத்தொழிலாற் சாரதி கருதப்பெறுவதேபோலச் சேட்டையாதிய தொழிலான் அயலான்மாவுமென்பது கருத்தாம். அகங்காரம், யானென்னும் ஞானம்; அதற்காசிரயம், விஷயம்; ஆன்மாவாம், ஆகம் முதலியனவன்றாம். மனத்தின் வேறாயபொறி பயந்த காட்சிக் கவிட

யமும், மானதக் காட்சிவிடயமும் ஆமென்பது பொருள். உருவமுதலியவை யின்மையினுனே அயற்பொறிக் கயோக்கியமாதலினென்க. விபுத்தன்மை, பரமமகத்தன்மையாம். அஃதும் முன்மொழிந்திருப்பினும் வெளிப்படையாவான் விளம்பப்பட்டது. அறிவு இன்பத் துன்ப மிச்சை முதலிய பதினுன்கு பண்புகள் முன்மொழிந்தன உணரத்தக்கனவாம். ஈண்டே பிரசங்கத்தாற் புத்தியின் சில பலவிசாலம் காட்டப்படுகின்றது:—மதியுமேன. 29

30. திகழு மனுபூ தியுமிருதி செறிநான்கனுபூ தியுங் காட்சி, தகனு மிதியோ டேமிதியோண் சத்த ஞானங் கிராணஜமுன், னகலும் பிரிவாற் பிரத்தியக்க மாறுவிதமாங் கிராணமதன், மகிழும் விடயம் மணமணத்தின் பான்மை யாதி களுமாமே.

இருவிதந் தெரிவிக்கப் பெறுகின்றது:—அனுபூதியேன.

இந்நான்கின் கரணங்கள் நான்காம், "காட்சி கருத லுவமை யுரை யளவைகள்" எனச் சூத்திரத்துட் சொற்றனவெனத் தெற்றெனத் தெரிதற்பாற்றும்.

பொறிபயந்த வுணர்வு காட்சியாம். மனமாகிய பொறி பயந்தன எல்லா ஞானங்களுமே யாமாயினும் பொறித்தன்மை வடிவத்தானே பொறிகட்கு யாண்டுணர்வின்கட்கரணத்தன்மையாமோ அது காட்சியென

அறைய வவா வாம். ஈசுரக்காட்சியோ இலக்கியமன்று ம். "பொறிபொருட் சம்பந்தத்துதித்ததாய்ப் பிறழ்ச்சி யற்ற வுணர்வாய் பதவாச்சியத் தன்மையும் ஓசைப்பிர யோகமு மற்றதாய் வியவசாய வடிவமாயிருப்பது காட் சி" என்று சூத்திரத்தே அவ்வகையே கூறியிருத்தலின். அல்லது ஞானங்கரண மல்லாததாயஞானம் காட்சியாம். அனுமிதியின்கண்ணே வியாத்திஞானத்திற்கும், உப மிதியின்கண் ஒப்புமையுணர்விற்கும், சாப்தபோதத்தே பதவறிவிற்கும், நினைவின் கண்ணே யனுபவத்திற்கும், கரணத்தன்மை யுண்மையின் ஆண்டாண்டதிவியாத்தி யின்றும். இவ்விலக்கணம் ஈசுரக்காட்சிப் பொதுவாம். ஆராய்ச்சியாக்கிய வறிவு அனுமிதியாம். ஆராய்ச்சிக் காட்சி முதலியன ஆராய்ச்சியா லாக்கப் பட்டனவாயி னும், ஆராய்ச்சியா லாக்கப்பெற்றதாய் ஹேதுவை விடயமாக வுடையதாகாத அறிவியாதோ அஃதனு மிதியாம். ஒவ்வொருகா லேதுவை விடயமாகவுடைய அனுமிதியின்கண் ணவ்வியாத்தியாமென அறையற்க. அத்தகைய வறிவின்கண்ணமரும் அனுபவத் தன்மை வியாப்பியப் பொதுமை யுடைமையைப் புகல விருப் பிருத்தலின். அல்லது வியாத்திஞானகரணத்தையுடைய ஞானமனுமிதி. இங்ஙனம், ஒப்புமையுணர்வைக் கரண மாயுற்ற வுணர்வுபமிதி. பதவறிவைக் காணமாய்ப் பற் றிய வறிவு சாத்தபோதம். உண்மையாக யாதாவதோ ரநுமிதி வடிவங்கொண்டு, அவ்வடிவத்தமர்ந்து காட்

சியிற் கதுவாப் பொதுமையுடைமை யநுமிதித்தகை மையாம். இங்ஙனம், ஒரு சிறிது காட்சி முதலியவற் றைக்கொண்டு அவ்வடிவத்தமர்ந் தநுமிதிக்கண்ணம ராப் பொதுமையுடைமை, காட்சித்தன்மை முதலியன வெனச் சாற்றத் தக்கதாம். பயக்கப்பட்ட காட்சி பகுக்கப் படுகின்றது:—**கிராணஜமுன்னென**. கிராண ஜம், இராசனம், சாக்ஷுஷம், ஸ்பார்ஸனம், சிரவுத் திரம், மானஸம் என ஆறுவிதங் காட்சியாம். கட வுட் காட்சியைப் பகுக்காமையின் குறைவாமெனக் கழ றற்க? சன்னியக்காட்சியே சாற்றவேண்டற்பாலதா மாதலினானும், அறைந்த சூத்திரக்கூற்றி னநுசாரமாத லினானுமெனக. விடயமென்றது, கிராகியமெனப் பொ ருள்படும். ஆதிபதத்தான் நறு நாற்றத்தன்மை தீநாற் றத்தன்மையுங் கவர்க. மனத்திற்குக் காட்சித் தன் மை யுண்மையின், அதன்பாலுற்ற பொதுமையுங் காட் சியாம். மனப்பற்றுக் கோட்டைக் கவர்வதின்கண் ணே, கிராணத்திற் காற்றலின்றெனவுணரற்பாற்றும்.

இரசத்தன்மை முதலியவற்றேடென்பது பொரு ள். அங்ஙனம், ஓசையும், ஓசைத்தன்மை முதலியவற் றேடாம். மனமுமிரதமும் உற்பூதமெனவுணரற்பாற் றும். 30

31. உரைவகை யிரச மிரசனையதற்காமோசையுஞ் சே விக்கோளி ருருவ, மருவிழி விடய மஃதுறும் பொருள்களை யன்மையொண் பிரிவுசையோகம், பரவபரதையு நேயமு

நெகிழ்ச்சி பரிமிதி வினைபோது மையுமே,யொருதகுதியின் கண் ணுறைவதோற் றுமையு முரைத்தவத் தகைய தென்றுணரே.''

கோடைச்சூடாதிகளில் வெளிப்படா உருவமென அவை காட்சிப்படா, அஃதுறும் உற்பூத வுருவமுறும், அயன்மைபாதியவற்றையுந் தக்கவடிவத் திருப்பன வாக வறிந்துகொள்க. அத்தகையது, தக்கவடிவத் திருப்பதென்பது பொருள். 31

32. ஒளிவெளி யுருவ சம்பந்த மதனு ணெண்விழி கவருமுற் பூத, வளிதரும் பரிச முறும்பொருள் விடயம் வயங்கதுந் துவக்கினுக் குருவக், களியயல் விழிக்குத் தகுதியா முருவங் காரண மீண்டுமே பொருடான், வெளி யுறத் துவக்கு மனத்தோடு கூடல் விளம்புறு ஞானகார ணமே.''

விழிக்குத் தகுதியாதலே யாங்ஙனமெனின்? அஃதறையப் பெறுகின்றது:—ஒளியென. ஒளிக்கூட் டமும் உத்பூதவுருவமும் கட்புலக் காட்சியிற்காரண மாம். ஆண்டு பொருட்காட்சியைக் குறித்து அவற் றிற்குச் சமவாய சம்பந்தத்தாற் காரணத்தன்மையாம்; பொருட்சமவேத உருவமுதலியவற்றின் காட்சியின் கண்ணே, தனதாசிரய சமவாய சம்பந்தத்தானும். பொ ருட் சமவேதச் சமவேதமாய வுருவத்தன்மை முதலிய வற்றின் காட்சியின்கண்ணே தனதாசிரய சமவேத சமவாய சம்பந்தத்தானும். உற்பூதவூறுறும் பொருள் துவக்குக் கவர்வதாம். அதுவும், உத்பூதவூறும்

ஊற்றின்பெற்றி முதலியவற்றோடு மென்பதாம். உருவ வயல், உருவத்தன்மை முதலியவற்றினுமயல், என்னு மவை விழிக்குத் தகுதியாயினவோ, அவை துவக்குப் பொறிக்கும் விடயங்களாம். அங்ஙனமாகவே, வேற் றுமை, எண் முதலிய விழியாற் கவரற்பாலனவாய்ப் பகர்ந்த பண்புகளும், தக்கதினிற்கும் வினை பொது மைகளும் துவக்காற் கவரற்பாலனவா மென்பது பொ ருள். ஈண்டும், துவக்கிந்திரியம் பயந்த பொருட் காட்சியின்கண்ணு முருவங் காரணமாம். அங்ஙனமாக வே, வெளிப்பொறி பயந்த பொருட்காட்சியின்கண் உருவங்காரணமென்பதாம். நவீனரோ ! வெளிப்பொறி பயந்த பொருட்காட்சி மாத்திரத்தே உருவங்காரண மன்றாம்; மானமின்மையின். மற்றோ, சாக்ஷுஷக் காட்சியிலுருவமும், ஸ்பார்ஶனக் காட்சியில் பரிசமும் காரணமாம்; உடன்பாடெதிர்மறை யுண்மையின். வெளிப்பொறி பயந்த பொருட்காட்சிமாத்திரத்தே யாது காரணமெனின்? ஒன்றுமின்றாமென்க; ஆன்மாவி லமரா வோசைக்கயலாய சிறந்த குணமுடைமை யேனும் சாதகமாகும். உருவத்திற்குக் காரணத் தன்மையொப்பின் றொய்திற் கோடலாமெனின்? அடா தாம்; வாயு, துவக்கிந்திரியத்தாற் கவரப்பெறுதென வழக்குண்டா மாதலின். உடன்பாடா மெனின் ? உற் பூதவூறே யெளிதிற் கோடலாற் காரணமாகுக. பிரபை யின் காட்சியின்மையின் கண்ணும் உடன்பாடே

யாமென வுடன்படாத தென்னைகொல்? ஆதலின், பிரபையைக் காண்கின்றே னென்பதுபோல, வாயுவைப் பரிசிக்கின்றே னென்னும் உணர்வு கூடலின் வாயுவுங் காட்சிப்படலே கூடுமென்க. வெளிப்பொறி பயந்த பொருட் காட்சி மாத்திரத்தே உருவத்திற் கேனும், ஊற்றிற்கேனும் ஹேதுத் தன்மையின்றாம். வாயுப் பிரபைகளின் ஒருமை கவரவே பெறுகின்றது. சிலபாலிருமை முதலனவுமாம், சிலபாலெண்ணளவு முதலியவற்றின் கவர்வின்மையாம்; கசடுறலாமெனக் கழறு நிற்பர். துவக்குளச்சையோகம் ஞானசாமானியத்தே காரணமென்பது பொருள். இயாததன்கண்மானம், துயிலுங்காலையிற் றோலைவிடுத்துப்புரீதந்நாடியின்கண்ணிகழும் மனத்தால் உணர்வுதிபாமென்றுணர்க.

அற்றேல், துயிலுங்காலையி லென்னுணர்வுண்டாம்? அநுபவ வடிவமா? நினைவுவடிவமா? ஆதியதன்று, அநுபவ சாமக்கிரியின்மையின். அங்ஙனமன்றே, காட்சியில், விழிமுதலியவற்றோடு மனச்சையோகத்திற் கேதுத்தன்மை யுண்மையின், அஃதின்மையானே சாக்ஷாத்க் காட்சியின்றாம். அறிவுமுதலியவற்றினின்மையானே மானசக் காட்சியின்றாம். அறிவு முதலியவை யின்மையானே ஆன்மாவுங் காட்சிப்படலடாதாம். இங்ஙனம் வியாத்தியுணர்வின்மையானே அநுமிதியுமின்றாம். ஒப்புமை யுணர்வின்மையின், உபமிதியுமின்

ரும். பதவுணர் வின்மையானே, சாத்தவுணர்வு மின்ரும். என அநுபவ சாமக்கிரியின்மையின் அநுபவமு மன்ரும். வெளிக்கிளப்புவ தின்மையின்நினைவுமன்ரும்.

இங்ஙனமியம்பற்க. துயிற்குமுற்போ துித்த இச்சையாதி (ஞான)வடிவும் அதன்சம்பந்தத்தால் ஆன்மாவுங்காட்சிப்படல்வேண்டும். அஃததீந்திரிய மென்பதன்கண் மான மின்மையின், துயிற்கு முற்போது நிருவிகற்பகமே நியமமா யுண்டாமென்பதன்கண் ணும் மானமின்மையின். இனி ஞானமாத்திரத்தே துவக்குளச்சையோகத்திற்குக் காரணத்தன்மை யாமாயின், இராசனச்சாக்ஷுஷாதிக் காட்சிக்காலத்தே துவாசக்காட்சியாம். விடயதுவக்குச்சையோகமும், துவக் குளச்சையோகமும் உண்மையின்; ஒன்றற்கொன்று தடைப்படுதலின் ஒன்றேனு முண்டாகாதாம். ஈண்டு, சிலர் முன்மொழிந்த யுக்தியால், துவக்குளச்சையோகத்திற்கு ஞானஹேதுத் தன்மை துணியப் பெற்றவழி, சாக்ஷுஷாதி சாமக்கிரிக்கு ஸ்பார்ஸனதிப் பிரதிபந்தகத்தன்மை அநுபவமொட்டிக் கற்பிக்கப் பெறுமென்பர். மற்றையரோ, துயிலையொட்டிச் சருமமனச்சையோகத்திற்கு ஞானஹேதுத்தன்மை கற்பிக்கப்பெறும்; சாக்ஷுஷாதிக் காட்சிக்காலத்தே துவக்குளச் சையோகமின்மையின் ஸ்பார்ஸனக் காட்சியின்று மென்பர்.

33. இன்பமுந் துன்பமு மிச்சையுந் துவேடமு
முன்புதி மதியது முயற்சியூ உம்கொளுந்
தின்பகை மனமதீந் திரிய மாகுமா
மன்பநிர் விகற்பமா மறிவேன் றேதுப.

மனம் பயந்தகாட்சி விடயமென்பது பொருள், மதி ஞானம், முயற்சி; கிருதி - பிரயத்தனம். இவ்வண்ணம் இன்பத்தன்மை முதலியனவும் மனோவிடயங்களாம். இவ்வாறு, ஆன்மாவும் மனோகிராகியமாம். ஆனல் மனமாத்திரத்தின் கோசரமதாகும் என்பதனால், முன் மொழியப் பெற்றிருத்தலின் ஈண்டு கூறப்படவில்லை. விழிச்சையோக முதலியவற்றின் பின்னர்க் குடம் என்னும் வடிவிற்றாயகுடத்தன்மை முதலிய அடையடுத்த வுணர்வு கூடாதாம். முன்னர் அடையாய குடத்தன்மை முதலியவற்றின் ஞானமின்மையின், அடையடுத்த வுணர்வின்கண் அடையினுணர்வு காரணமாகலின் ; அங்ஙனமாகவே, முதலில் குடம் குடத்தன்மைகளின் அடையடுத்ததையுடையதைக் கவராத வுணர்வேயுண்டாம்; அஃதே நிர்விகற்பகமாம்; அஃதுங் காட்சியன்றாம். அங்ஙனமன்றேல்:—அடையடுத்ததையுடையதைக் கவராதவுணர்வு காட்சிப்படாது;கடத்தை யானுணர்கின்றேன் எனவுணர்வுண்டாதலின், ஆண்டு ஆன்மாவின்கண் உணர்வு பிரகாரமாயிருந்திலங்கும். உணர்விற்குடம் ஆண்டு குடத்தன்மை, யாதுபிரகாரம், அஃதேயடையெனை அறையப்பெறும். அடையின்மாட்டெவ்வடையுளதோ அஃது அடைத்தன்மையை வரை

*ந்து கொள்வதென்று வழங்கப்பெறும். அடைத்தன்மையை வரைந்து கொள்வதைப் பிரகாரகமாயுற்ற வுணர்வு அடைபடுத்த அடையடுத்ததையுடையவுணர் விற் காரணமாம், நிர்விகற்பகத்தின் கண்ணே, குடத் தன்மை முதலியன அடையன்றாம்; அதனான், குடத் தன்மை முதலிய அடையடுத்த குடமுதலியவற்றின் அடையடுத்ததை யுடையதின் பானம் ஞானத்திற் சம்பவியாதாம். குடத்தன்மை முதலிய பிரகாரக மற்ற தாயோகுடமுதலிய அடையடுத்த வுணர்வு சம்பவியா தாம்; சாதி அகண்டோபாதிகளின் வேறாய பதார்த்த வுணர்விற்கு ஒரு தருமப் பிரகாரகத்தன்மை நியம மிருத்தலின்.* 33

34. பெருமையு மாறு பிரிவினி லேது பினும் பொறி கரணமக் கரணம், பொருளொடு கூடல் வியாபா மதுவும் புகலறு விதஞ்சையோ கமதாற், பொருள்கொளல் சயுக்த சமவய மதனாற் பொருட்சம வேதங்க ளதன் றன், றிரசம வாய மதனினு லாண்டுந் திகழ்சம வேதங்க ளாமே.

சத்தமதுஞ் சமவாய மதனானே யதன்பாற் சார்பவைகள் சமவேத சமவாய மதனால், வித்தமுறுஞ் சமவாயக் காட்சிவிசே ஷணதை மேவலினு மதுபோல விசேஷணதை யானே, மெத்துமபா வங்களின்றன் கவர்ச்சியுறு லாகு மிழற்றுவையே லுளதெனநீ மேலோயே யதுதான், சுத்தமதாய்த் தோற்றுறுக வென்னவிந்த வணர்ந்தான் றொடர்பாகப் பொருந்தலுறு மெந்தவிடந் தனினே.

பொருட் காட்சியின்கண் மகத்துவம் சமவாய சம்பந்தத்தாற் காரணமாம். பொருட் சமவேதங்களாய பண்பு, வினை, பொதுமைகளின் காட்சியின் கண்ணே தன்னாசிரய சமவாய சம்பந்தத்தானும், பொருட் சமவேத சமவேதங்களாய பண்புமை, தொழின்மை முதலியவற்றின் காட்சியின் கண்ணே தன்னாசிரய சமவேத சமவாய சம்பந்தத்தானுங் காரணமாமென்க. ஈண்டும் ஆறுவகை யென்பது தொடரும். பொறித்தகைமையோ, பொதுமையன்றாம்; மண்மை முதலியவற்றோடு சாங்கரியம் மருவலின்; மற்றோ, ஓசையி னயலா முற்பூதச் சிறந்த பண்புப் பற்றுக் கோடன்மையொடு, உணர்வின் காரணவுளக் கூட்டப் பற்றுக்கோடுண்மையாம். ஆன்மாதி நீக்குவான், 'ஓடுவரை'. உற்பூதச் சிறந்த பண்பாய வோசை, செவிப் புலனி லுண்மையின், 'ஓசையினயலா' யெனப் பட்டது. சிறந்த பண்புகளாய வுருவ முதலியவை கட்புலன் முதலியவற்றின் கண்ணும் உண்மையின் 'உற்பூத' வெனப்பட்டது. உற்பூதத் தன்மை பொதுமை யன்றாம்; வெண்மை யாதியொடு சாங்கரியம் விரவலின். வெண்மையாதி வியாப்பியம் பலவே யுற்பூதத் தன்மையென விளம்பற்க. உற்பூத வுருவத் தன்மை முதலியவற்றாற் சாக்ஷாத் ஷாதியிற் சனகத் தன்மை கூடாமையின்; மற்றோ, வெண்மையாதி வியாப்பியம் பலவே யநுற்பூதத் தன்மை, அதனின்மைக் கூட்டமோ, உற்பூதத்

தன்மையாம். அதுவும், சையோகாதியின் கண்ணு முளதாம். உளதாகவே, ஓசையினயலா முற்பூதப் பண்புகளாய சையோகாதிகள் கட்புலனுதியின் கண்ணும் உளவாதலின், 'சிறந்த' வெனப்பட்டது. காலாதியை நீக்குவான், விசேடப் பகுதியாம். இந்திரியாவயவ விடய சையோகமும், புராதனர் மதத்தே காட்சி பயப்பதாதலின், இந்திரியாவயவ நீக்கப்பொருட்டும், நவீனர் மதத்தே காலாதிகளில் உருவவின்மைக் காட்சியாயிற் சம்பந்தத்தடங்குதலானே, காரணீபூத சக்ஷு சையோகப் பற்றுக்கோடாய காலாதி நீக்கப்பொருட்டும் 'உளம்' என்னும் பதமாம். உணர்வின் சாரண மென்றதூஉம், அதன் பொருட்டாம். அசாதாரண காரணம் கரணம்; அசாதாரணத் தன்மைவியாபார முடைமையாம். வியாபாரஞ் சம்பந்தமாம். ஆறுவித சம்பந்தமும் உதாஹரண வாயிலாய்க் காண்பிக்கப்படுகின்றன :—பொருள்கோளலெனை. பொருட்காட்சி பொருட்சையோக ஜன்னியமாம். பொருட் சமவேதக் காட்சி பொறிச் சையுக்த சமவாய ஜன்னியமாம்; இன்னணமேலும். உண்மையாயோ பொருட் காட்சியின் பொருட்டு விழிச் சையோகங் காரணமாம். பொருட் சமவேதக் காட்சியின் பொருட்டு விழிச்சையுக்த சமவாயங் காரணமாம். பொருட் சமவேதச் சமவேதக் காட்சியின் பொருட்டு விழிச் சையுக்த சமவேத சமவாயமாம். இங்ஙனம், பிறவிடத்தும் சிறப்பித்தே காரிய காரண பாவமாம். ஆனல், மட்பரமாணு

நீலத்தை நீலப்பான்மையும், மண்மையுங் கட்புலனாற் கவராத தெங்ஙனம்? ஆண்டுப் பரம்பரையாய் உற்பூத வுருவ சம்பந்தமும், மகத்துவ சம்பந்தமு முண்மை யின். அங்ஙனமன்றோ, நீலத்தன்மைச் சாதி யொன்றே, குடநீலத்தும், பரமாணு நீலத்துமுளதாம்; உளதாகவே, மஹத்வ சம்பந்தம் குடநீலங் கொண்டு குலவுகின்றது. உத்பூத வுருவ சம்பந்தமோ, உபயங் கொண்டே யொளிர்கின்றது. இவ்வண்ணம் மண்மை யினும் கடாதிகள் கொண்டு மஹத்வ சம்பந்த முணரற் பாற்றும். இங்ஙனம் காற்றினும், அதனது ஊறு முத லியவற்றினும் சத்தையின் சாக்ஷுஷக் காட்சியாம். ஆகலின், உத்பூத வுருவம் வரைந்துகொண்ட, மஹத் துவம் வரைந்துகொண்ட விழிச்சையுக்த சமவாயம் பொருட் சமவேதக் காட்சியினும் அத்தகைய விழிச் சையுக்த சமவேத சமவாயம், பொருட் சமவேதச் சமவேதக் காட்சியினுங் காரணமாமெனக் கழறற்க. இன்னணமாகவே, பரமாணு நீலாதிகளில் நீலத்தன்மை முதலியவைகளின் கவர்ச்சியின்றாம். பரமாணுவில் விழிச்சையோகத்திற்கு மகத்துவம் வரைந்துகொண்ட தன்மையின்மையின். இவ்வாறு, வாயு முதலியவற்றில் சத்தை முதலியவற்றின் சாக்ஷுஷமின்றாம். ஆண்டு, விழிச்சையோகத்திற்குஉருவம் வரைந்துகொண்ட தன் மையின்மையின். இங்ஙனம், யாண்டு குடத்தின்பின் வரைவால் ஒளிச்சையோகமாமோ, விழிச்சையோகமோ

முன்வரைவாலாமோ, ஆண்டுக் குடக்காட்சியின்மை யின் ஒளிச்சையோகம் வரைந்து கொண்டதன்மை விழிச் சையோகத்தே சிறப்பாகக் கொடுக்கற்பாற்றும். இங்ஙனம், பொருள் ஸ்பார்ஶனக்காட்சியின்கண் துவக் குச் சையோகங்காரணம், பொருட் சமவேத ஸ்பார்ஶ னக்காட்சியின்கண் துவக்குச்சையுக்த சமவாயமும், பொருட் சமவேதச் சமவேத ஸ்பார்ஶனக் காட்சியின் கண் துவக்குச் சையுக்த சமவேதசமவாயமும் கார ணமாம். ஈண்டும், மஹத்துவம் வரைந்து கொண்ட தன்மையும், உத்பூதரூபம் வரைந்து கொண்ட தன்மை யும் முன்போன்றே யுணரற்பாற்றும். இங்ஙனம், மணக்காட்சியின்கண் கிராண சையுக்த சமவாயமும், மணச்சமவேதத்தின் கிராண ஜன்னியக்காட்சியின்கண் கிராண சையுக்த சமவேதசமவாயமும் காரணமாம். இங்ஙனம், இரசக்காட்சியின்கண் இரசனைச் சையுக்த சமவாயமும், இரசசமவேத இராசனக்காட்சியின்கண் இரசனைச் சையுக்த சமவேத சமவாயமும் காரணமாம். ஓசைக்காட்சியின்கண் செவிப்புலன் வரைந்துகொண்ட சமவாயமும், ஓசைச் சமவேதச் சிராவணக்காட்சி யின்கண் செவிப்புலன் வரைந்து கொண்ட சமவேத சமவாயமுங் காரணமாம். ஈண்டு யாண்டும் காட்சி இலௌகிகமெனவுணர்க. பகரப்படும் அலௌகிகக் காட்சி பொறிச்சையோகாதிகளின்றியு முண்டாம். இங்ஙனம், ஆன்மக்காட்சியின்கண் மனச்சையோக

மும், ஆன்மசமவேத மானதக்காட்சியின்கண் மனச்சையுக்த சமவாயமும், ஆன்சமவேதச் சமவேத மானதக்காட்சியின்கண் மனச்சை யுக்த சமவேத சமவாயமும், காரணமாம். அபாவக்காட்சியின் கண்ணும், சமவாயக் காட்சியின்கண்ணும் பொறிச் சம்பந்தமுற்ற விசேஷணதை யேதுவாம். வைசேடிகமதத்தின்கண்ணே சமவாயங் காட்சியன்றாம். ஈண்டு விசேஷணதை பலவகையாம்:—அங்ஙனமன்றோ, பூதலாதியிற் குட முதலியவற்றினின்மை சையுக்த விசேஷணதையாற் கவரப்பெறும். எண்முதலியவற்றின்கண் உருவமுதலியவற்றினின்மை சையுக்த சமவேத விசேஷணதையானும், எண்மையாதியின் கண் உருவ முதலியவற்றினின்மை சையுக்த சமவேதச் சமவேத விசேஷணதையானும், ஓசையின்மை கேவலச் செவிப்புலன் வரைந்துகொண்ட விசேஷணதையானும், 'க' முதலியவற்றில் நத்தன்மைமுதலியவற்றினின்மை செவிப்புலன் வரைந்து கொண்ட சமவேத விசேஷணதையானுமாம். இங்ஙனம், கத்தன்மை முதலியன வரைந்து கொண்ட வின்மையின்கண் நத்தன்மையின்மை முதலியவைசெவிப்புலன்வரைந்து கொண்டவிசேஷண விசேஷணதையானும். இங்ஙனமே, குடவின்மை முதலியவற்றின்கட் படவின்மை விழிச்சையுக்த விசேஷண விசேஷணதையானும். இவ்வாறே மற்றவற்றையு முய்த்

துணர்ந்து கொள்ளற் பாலதாமாயினும், விசேஷண தைத் தன்மை வடிவத்தானே யொன்றேயாமென வஃ தெண்ணப்பெறும். அன்றாயினோ, ஆறு சம்பந்தமென் னும் முதியோர் முதுமொழி மூராணுற்றழியுமென்க.

ஈண்டபாவக்காட்சியின் கண்ணே யோக்ய அநு பலப்தி காரணமாம். அங்ஙனமன்றோ, பூதலாதி யிற் குடாதியுணர்வுண்டாயவழி குடவின்மை முதலி யன வுணரப்பெறுவாம். அதனான், இன்மைத் தோற்றத்தே எதிர்மறைத்தோற்றமின்மை காரண மாம். ஆண்டு, யோக்யதையு மவாவப்பட்டதாம். அதுவும், எதிர்மறையுண்மை வரவால் வருத்திய எதிர் மறையுடைமை வடிவமாம். அதன் பொருளும்:— எதிர்மறைகளாகிய கடாதிகளின் இருப்புக்கோடலாற் கோடப்பெற்ற தோற்றவடிவ எதிர்மறை யாதினுக்கோ அது அபாவக்காட்சியின்கண்ணே துவாம். அங்ஙனமன் றோ, யாண்டொளிச்சைசயோகாதிகள் நிகழ்கின்றன வோ, ஆண்டு, ஈண்டுக்குடமுளதாகுமேலாயிற்புலனுறுக வென வரவுறுத்தக்கூடுமன்றே, ஆண்டுக்கடாபாவாதிக் காட்சியுண்டாம். இருளிடத்தோ வரவுறுத்தலேலா தாம். அதனான் இருளிற் கடாபாவாதிகளின் சாக்ஷா ஷக்காட்சி யுண்டாகாதாம். ஸ்பார்ஶனக் காட்சியோ உண்டாதலொருதலையாம். ஒளிச்சைசயோகமின்றியும்

ஸ்பார்ஶனக்காட்சி வரவுறுத்தக்கூடுமாதலின், திண்மை முதலியவையாவை அயோக்கியமோ அவற்றினின்மையோ யோக்யமன்றாம். ஆண்டுத்திண்மை முதலியவற்றின் காட்சி வரவுறுத்தக்கூடாதாதலின். வாயுவிலுற்பூதவுருவ மின்மை, கல்லின்கண் நறுநாற்றமின்மை,வெல்லத்தே கைப்பின்மை, எரியின்கண் வெம்மையின்மையின்மை, செவிப்புலனி லோசையின்மை, ஆன்மாவின்கண் ணின்பின்மையென்பன முதலியவை அவ்வப்பொறிகளாற் கவரப்பெறுவனவாம். அவ்வக்காட்சி வரவுறுத்தக்கூடலின். சம்சர்க்கவின்மைக் காட்சியின்கண்ணே எதிர்மறையின் யோக்யதையும், அன்னியோன்னியா பாவக்காட்சியின் கண்ணே, நிலைக்களயோக்யதையும், அவாவப்பெறும். ஆதலின், தம்பாதியின்கண்பேப் முதலியவற்றின் பேதமும் கட்புலனாற் கவரப்பெறுவனேயாம். 34

இங்ஙனம், காட்சி லௌகிக அலௌகிக வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு, இலௌகிகக் காட்சியின்கண் ஆறு சம்பந்தங்கள் வர்ணிக்கப்பட்டன; அலௌகிக சம்பந்தமோ இஞ்ஞான்றியம்பப்பெறும்:—

35. திகழுமலௌ கிகவியாபா ரமதுமூ விதமாம்
சேறிசாமா னியத்திஞெடு ஞானவிலக் கணமும், நிகழுறும்யோ கஜமுமென வாசிரயங் களினேர் நின்றிடுமோ சத்திசா மான்யவுணர் வெனவாம், புகழுறுமவ் விந்திரி

யம் பயந்தவந்தத் தரும போதசா மக்கிரியை விழைத லுறு மெதன்றன், மகிழும்விட யீயதன்றன் வியாபாரம் ஞான மருவுமிலக் கணமாகும் யோகஜமேன்மொழிவாம்.

வியாபாரம், சம்பந்தம்; சாமானியம், இலக்க ணம் எதற்கு என்பது பொருள். ஆண்டு, இலக்கண பதத்தான் வடிவங் கூறப்படுமாயின் சாமானிய வடிவச் சம்பந்த மென்னும் பொருள் கிடைக்கும். அதுவும் இந்திரிய சம்பந்தமுற்ற விசேடியக ஞானப்பிரகாரீபூத மென வுணர்க. அங்ஙனமன்றேல்:—யாண்டிந்திரிய சை யுக்தங்கள் புகை முதலியனவாமோ, அதன் விசேடிய கப்புகை யென்னுமுணர்வுளதாமோ ஆண்டுணர்வின் கட் புகைமை பிரகாரமாம்; புகைமைச்சம்பந்தத்தானேபுகை கள் என்னும் வடிவிற்றாய சகல புகைவிஷயக வுணர் வுண்டாம். ஈண்டு, இந்திரிய சம்பந்தமுற்ற பிரகாரீ பூதமென மாத்திரங் கூறினே, தூட்படலத்தே தூமத் தன்மை மயலின்பின் எல்லாப் புகை விஷயக வுணர் வெழாதாமென்க; ஆண்டுப் புகைமையோடு பொறிச் சம்பந்தமின்மையின். எம்மதத்தோ, பொறிச்சம் பந்தமுற்ற தூட்படலம் அவ்விசேஷ்யகம் புகையென்னு முணர்வாம். ஆண்டுப் பிரகாரீபூதமாய புகைமை சம்பந்தமாம். பொறிச் சம்பந்தமும், இலௌகிக மென வறிக. இதுவும் வெளிப் பொறித்தலத்திலாம். மான தத் தலத்திலோ! ஞானப் பிரகாரீபூத சாமானி

யம் சம்பந்தமாம். ஆனால், சமானங்களின் பாவம் சாமானியமாம்; அதுவும், சிலபா னித்தியம் புகைமை முதலியன; சிலபா லநித்தியம் குடமுதலியன. யாண்டு ஒரு குடம் சையோகத்தாற் பூதலத்தேனும், சமவாயத்தாற் கபாலத்தேனும் அறியப் பெற்றதோ, அதன் பின் அக்குட முடையனவாய வெல்லாப் பூதலங் களினுடைய வுணர்வேயேனும், கபாலங்களுடைய வுணர்வேயேனு முண்டாம். ஆண்டிஃதுணாற்பால தாம். ஆனால், சாமானியம் எச்சம்பந்தத்தா லறியப் பெறுமோ அச்சம்பந்தத்தான் அதிகரணங்களின் சம்பந்தமாம். இன்னணமாக யாண்டு அக் குடவழிவின் பின் அக்குடமுடையதன் நினைவுண்டாமோ ஆண் டுச் சாமானிய விலக்கணத்தான் எல்லாக் குடமுடை யன வற்றின் ஒளிர்வுண்டாகாதாம். சாமானியம் அஞ்ஞான்றின்மையின். மேலும், பொறிச் சம்பந்த முற்ற விசேஷியகக் குடமென்னு முணர்வு யாண் டுண்டாமோ, ஆண்டு மறுதினத்தே பொறிச்சம்பந்த மின்றியும், அத்தகைய ஞானப்பிரகாரீபூத சாமானிய முண்மையின் அத்தகையஞானமுளதாகாதமென்னை கொல்? ஆதலின் சாமானியவிடயக ஞானம்சம்பந்தமா மன்றிச் சாமானியமன்றுமெனப் படுகின்றது:—ஆசத் தியென. ஆசத்தி, பிரத்தியாசத்தி; சம்பந்தமென்பது பொருள். அங்ஙனமாகவே, சாமானியவிலக்கண மென்பதன்கண் இலக்கணசத்தத்திற்கு விடயமென்பது

பொருள். அதனால் சாமானியவிடயக ஞானம், பிரத்தியாசத்தியெனக் கோடக்கிடந்தமைகாண்க. அற்றேல், விழிக்கூட்டமுதலியனவின்றியும் சாமானிய ஞானம் நிகழுமிடத்தே சகல கடாதிகளின் சாக்ஷாத்காரமுண்டாகுமாலோவெனின் அறையப்பெறுகின்றது:—அவ்விந்திரியமென. இதன் பொருள்:—புறப்பொறியாற்சாமானியவிலக்கணவாயிலாய் உணர்வுதிப்பிக்கப்படுங்காற்சிற்சில தருமிகளின்கண் அச்சாமானியத்தின் அப்பொறியசந்த ஞானத்தின் சாமக்கிரி யவாவப்பெறும்; அச்சாமக்கிரியும்விழிச்சையோக ஒளிச்சையோக முதலியவாம். அதனான் இருண்முதலியவற்றுட் கட்புலன் முதலியவற்றிற் கத்தகைய ஞானமுளதாவதின்றாம். அற்றேல், ஞான இலக்கணப் பிரத்தியாசத்தியும் சாமானிய இலக்கணமும் ஞான வடிவமாயின் அவற்றின் வேற்றுமை யேலாததாகுமாலோவெனின், அறையப்பெறுகின்றது:—எதன்றெனன. சாமானிய இலக்கணப் பிரத்தியாசத்தியோ! அதன் பற்றுக் கோடாயதின் உணர்வையுண்டாக்கும். ஞான விலக்கணப்பிரத்தியா சத்தியோ! எவ்விடயக ஞானமோ அதற்கே பிரத்தியாசத்தியென்பதாம். ஈண்டிது பொருளாம்:—காட்சியின்கட் சம்பந்தமின்றி விளக்கமுண்டாகாதாம்; ஆகவே சாமானிய இலக்கணமின்றிப் புகைமையானே எல்லாப் புகைகளினதூஉம், தீத்தன்மையானே யெல்லாத் தீக்களினதூஉம், விளக்கம் யாங்ஙன முண்டாம்? அதன்

பொருட்டுச் சாமானிய இலக்கண முடன்படலாம். எல்லாத் தீப்புகைகளின் விளக்கமின்மையானே யாது கோதாமெனவோதற்க? புலப்பட்ட புகையின் மாட்டெரிச்சம்பந்தங் கவர்ந்திருத்தலினானும், அயற்புகையோ இராமையினானும், புகைதீவியாப்பியமா? அன்று? என ஐயம் நிகழாமையின். எம்மதத்தேயோ, சாமானிய இலக்கணத்தால் எல்லாப் புகைகளினிருப்புறலான், வேற்றுக்காலத்த, வேற்றிடத்த தூமத்தே வன்னி வியாப்பியத்தன்மையினையம் வயங்கும். சாமானிய விலக்கணமுடன்படின் பிரமேயத்தன்மையானே சகலப் பிரமேயவுணர்வுண்டாயின் முற்றறிவுண்மையினடைவாமென மொழியற்க; பிரமேயத்தன்மையானே சகலப் பிரமேயவுணர்வுண்டாயினும், சிறப்பாகச் சகல பதார்த்தங்களினுணர்வின்மையானே முற்றறிவுண்மையின்மையின். இங்ஙனம், ஞானவிலக்கண முடன்படாவிடின் "நறுநாற்றமுடைத்து சந்தனம்" என்னுமுணர்வின்கண் நறுநாற்றவிளக்கம் யாங்ஙனங்கூடும்? சாமானிய விலக்கணத்தானும் நறுநாற்றஞானம் நண்ணுமாயினும், நறுநாற்றத்தன்மையின் விளக்கம் ஞானவிலக்கணத்தாலாம். இவ்வண்ணம், யாண்டுப்புகையையானே தூட்படலமுணரப்பெற்றதோ ஆண்டுத் தூட்படலத்திற்கு அறுவியவசாயத்தில் விளக்கம் ஞான இலக்கணத்தாலாம்.

36. யுக்த மோடயுஞ் சானபே தத்திறற்
சக்த யோகஜஞ் சாருமி ருவகை
யுக்த னுக்கேந்த ஞான்றுமோ ளிர்ந்திடு
முக்த வன்னியன் சிந்தையோ டோர்வனே.

*யோகப்பயில்வாலுளதாய தருமவிசேடம், சுருதி புராணுதிப் பிரதிபாத்தியமென்பது பொருள். யுக்த, யுஞ்சானரூபயோகிகள் இருவகையினராதலின், தருமமு மிருவகைத்தாமென்பது கருத்தாம். யுக்தனுக்கோ யோகஜதர்மசகாயமனத்தான் ஆகாசபரமாணுமுதலிய அகிலபதார்த்த கோசரஞானம் எப்போழ்துமே யுண்டாதல் தகுதியாம். மற்றவனுக்கோ, சிந்தைச்சிறப்புஞ் சககாரியாமென்க.* 36

பிரத்தியக்ஷ கண்டம் முற்றும்.



## *அநுமிதி யறிவிக்கப்பெறும்.*

37. சீரா/ராய்ச்சி வியாபாரஞ் செறியுங்கரணம் வியாத்திதீ, ஏரானுமை தனிலுணர்ந்த விலிங்கமதுவோ கரணமன்றும், நேரிலனுமை யாகாதாம் நிகழுமேதிராதியகுறியாற், சேரும்வியாப்யம் பக்கமதிற் செறியுமறிவாராய்ச்சியதே.

*அனுமைதனில், அனுமிதியில் வியாத்திஞானங் கரணமாம்; ஆராய்ச்சி வியாபாரமாம். அங்ஙனமன்றே*

எப்புருடனுன் அடுக்களை முதலியவற்றின்கட் புகை யில், எரியின்வியாத்தி கவரப்பெற்றதோ அப்புருடனே சிலமலை முதலியவற்றிற் சிதைபடாமூலமுற்ற புகை ரேகைகண்டபின், புகைதீவியாப்பிய மென்பதாய வியாத்தி நினைவை யடைவன். பின்னரோ, தீவியாப்பியப் புகை யுடையதிதுவென்னு முணர்வுண்டாம். அதுவே ஆராய்ச்சியென் றறையப்பெறும். அதன்பின்னர், "மலை தீயுடையது" என்னுமநுமிதியுண்டாம். ஈண்டு முதியரோ! வியாப்பியத்தன்மையானே யறியப்பட்டகுறியை யநுமிதிகரணமெனக் கூறுநிற்பர்; அது தூடிக்கப்படுகின்றது:—உணர்ந்தவென. குறிக்கநுமிதிகரணவன்மையின்கண் ஊகமுரைக்கப்படுகின்றது :—நேரிலென. அநுமிதியின்கண்ணே குறிகரணமாயின், வருங்குறியானும், சென்றதானும் அநுமிதியுண்டாகலாகாதாம்; அநுமிதிகரணமாய குறியஞ்ஞான்றின்மையின். வியாத்தியடையடுத்ததற்குப் பக்கத்தோடுஅடையடுத்த தடுத்ததைக் கவருமுணர்வு அநுமிதிபயப்பதாம். அதுவும், பக்கத்தே வியாப்பியமென்னுமுணர்வேனும், பக்கம் வியாப்பியமுடையதென்னு முணர்வேனுமாம். அநுமிதியோ! பக்கத்தே வியாப்பியமென்னு முணர்வாற் பக்கத்தே துணிபொருள் எனும்வடிவினதாம். பக்கம் வியாப்பியமுடையதென்னு முணர்வாற் பக்கந் துணிபொருளுடையதென்னும் வடிவினதாம். இருவகையாராய்ச்சியானும் பக்கந் துணிபொருளுடைய தென்பதாக

வே அநுமிதியாமென்பர் மற்றூர். அற்றேல், தீவியாப்பி யப் புகையுடையது மலையென்னு முணர்வின்றியும், யாண்டுமலை புகையுடையதெனக் காட்சியுண்டாய்ப் புகை தீவியாப்பியம் என்னும் நினைவுண்டாகின்றதோ, ஆண் டிரண்டு ஞானங்களானே அநுமிதிகாண்டலின் வியாத்தியடையடுத்த அடையடுத்த தடுத்ததைக் கவருமுணர்வு யாண்டுங் காரணமன்றாம். மற்றே, வியாப்பியத் தன்மையை வரைந்துகொண்டதைப் பிரகாரமாயுடைய பக்க தருமத்தன்மையின் ஞானத்தன்மையானே காரணத் தன்மைக் காவசியகத்தன்மை யுண்மையினானும், ஆண்டடையடுத்த வுணர்வைக் கற்பிப்பதில் அரிதிற் கோடலுண்மையானுமெனின்? அற்றன்று, வியாப்பியத் தன்மையை வரைந்துகொண்டதினுணர்வின்றியும் வன்னி வியாப்பியமுடையதென்னு முணர்வான் அநுமிதி யுதித்தலினானும், எளிதிற்கோடலானும் வியாத்திப் பிரகாரமுற்ற பக்கதருமத்தன்மையின் ஞானத்தன்மையானே ஹேதுத்தன்மையாம். மேலும், 'புகையுடையது மலை' யென்னுமுணர்வான் அநுமிதியினடைவாம்; வியாப்பியத்தன்மையை வரைந்துகொண்டதன் வடிவமாய புகைமைப் பிரகாரமுற்ற பக்கதருமத் தன்மையினுணர்வுண்மையின். அக்காற் கவரப்பெறுவதாய வியாப்பியத்தன்மையை வரைந்துகொண்டதைப்பிரகாரமாயுற்ற பக்கதருமத்தன்மையி னுணர்விற் கேதுத் தன்மையாமென வியம்பற்க; சைத்திரனுக்கு வியாத்திக்

கவர்ச்சியேல், மைத்திரனது பக்கதருமத்தன்மையுணர்வால்அனுமிதியாமன்றோ. அப்புருட சம்பந்தமாய்க் கவரப் பெற்ற வியாப்பியத்தன்மையை வரைந்துகொண்டதைப் பிரகாரமாயுற்ற அப்புருட சம்பந்த பக்கதருமத் தன்மை யுணர்வு அப்புருட சம்பந்த அனுமிதியின்கண் ஏதுவென வியம்பினே அளவறுகாரிய காரணபாவமாம்.எம்மதத்தோசமவாயசம்பந்தத்தானேவியாத்திப் பிரகாரமுற்ற பக்க தருமத்தன்மை யுணர்வு சமவாய சம்பந்தத்தானே அனுமிதியைப் பயக்கும் என அளவறு காரிய காரணபாவ மின்றும். வியாத்திப் பிரகாரமுற்ற வுணர்வும் பக்க தருமத்தன்மை யுணர்வும் தாமே காரணமென வியம்பினே காரியகாரணபாவ மிரண்டாம். தீவியாப் பியப்புகை, ஒளியுடையது மலை என்னும் ஞானத்தானும் அனுமிதியினடைவாம். இங்ஙனமாகவே யாண்டு இரண்டுணர்வாம் ஆண்டும் அடையடுத்த வுணர்வு கற்பிக்கற்பாற்றும்; பலவாயிலாய் அரிதிற் கோடன் மாசற்றதாதலின். 37

வியாப்பியமென்பது வியாத்தியின் பற்றுக்கோடாம். ஆண்டு யாது வியாத்தியெனக் கடாவ அறையப் பெறுகின்றது:—

38. விதித வியாத்தியுஞ் சாத்தியமுடையதின் வேறு
மதனிலேயசம்பந்தமாமல்லதே துறையில்
வதியுமின்மையி னெதிர்மறை மருவில்சாத்தியத்தோ
டதனினேர்நிலைக் களவுண்மையாமென வறைவார்.

தீயுடையது புகையான் என்பதாதியிற் றுணி பொருள் தீயாம், துணிபொருளுடையன அடுக்களை முதலியனவாம், அவற்றின் வேறாயின நீர்மடுமுதலியனவாம், ஆண்டிராமை புகைக்கென இலக்கண மினிது கூடுமென்க. புகையுடைத்து தீயான் என்பதாதியிற் றுணிபொருளுடையதினும் வேறாப காய்ந்த விரும்புப் பிண்டமுதலியவற்றே தீயுண்மையின் அதிவியாத்தியின்றாம். ஈண்டு எச்சம்பந்தத்தானே துணிபொருள் அச்சம்பந்தத்தானே துணிபொருளுடையதெனத் துணிக; அன்றாயின்றோ சமவாய சம்பந்தத்தானே தீயுடையது தீயின் சினையாம் அதனயலாயின அடுக்களை முதலியனவாம்; ஆண்டுப் புகைக் கிருப்புண்மையின் அவ்வியாத்தி வழக்குண்டா மென்க. துணிபொருளுடையதினும் அயலாவது துணிபொருளுடைமை வரைந்துகொண்ட எதிர்மறைத் தன்மையையுடைய பேதமுடையதென வுணர்க; அதனான், சிற்சில தீயுடைய அடுக்களை முதலியவற்றினும் வேறாய மலைமுதலியவற்றே புகையிருப்பினும் கோதின்றாம். எச்சம்பந்தத்தான் ஹேதுத்தன்மை அச்சம்பந்தத்தானே துணிபொருளுடையதினும் வேற்றிடத் துறையுந் தன்மையென வுணர்க. அதனான், துணிபொருளுடையதினும் வேற்றிடமாயபுகைச்சினையின்கண்ணே புகைசமவாய சம்பந்தத்தானே இருப்பினும் இடரின்றாம். துணிபொருளுடையதினும் வேற்றிடத்திராமை

யும், துணிபொருளுடையதினும் வேற்றிடத்திருக்குந் தன்மையின் றன்மை வரைந்து கொண்ட எதிர்மறைத் தன்மையி னின்மையாம்; அதனன், புகையுடையது தீயான் என்புழித் துணிபொரு ளுடையதினும் அயலாய நீர்மடு முதலியவற்றே யிருக்குந் தன்மையின்றேனும் அதிவியாத்தியின்றாம். ஈண்டு, பொருள், பண்புவினைக் கயலாந்தன்மையாற் சிறப்பிக்கப்பட்ட சத்தையுடைமையின் என்பதாதியில்.சிறப்பிக்கப்பட்ட சத்தைக்கும் தூயசத்தைக்கும் ஒருமையுண்மையின் துணிபொருளுடையதினும் வேற்றிடமாய பண்பு முதலியவற்றே இராமையின்றுமாயினும் ஹேதுத்தன்மையை வரைந்து கொள்ளும் வடிவத்தானே யிராமை யியம்பற் பாலதாம். ஹேதுத்தன்மையை வரைந்துகொள்வது அத்தகைய விருப்புத்தன்மையை வரைந்து கொள்ளா ததா மென்பது பலிதார்த்தமாம்.

அற்றேல், கேவலாந்நுவயியாய ஞேயத்தன்மை முதலிய துணிபொருட் கண்ணே துணிபொருளுடைய தினும் அயலானது பிரசித்த மின்மையின் அவ்வியாத் தியாம். அன்றியும், சத்தையுடையது பொதுமையுடைமையின் என்பதாதியிற் றுணிபொருளுடையதினும் வேறாய பொதுமை முதலியவற்றே ஹேதுத்தன்மை யை வரைந்துகொள்ளுஞ் சம்பந்தமாய சமவாயத் தானே யிருத்தற் கப்பிரசித்தத்தன்மை யுண்மையின் அவ்வியாத்தியுமா மெனின் அறையப் பெறுகின்றது:—

அல்லதேன.

ஹேது வுறையுமிடத்தே; வதிதல், இருப்பு, எதற்கோ அஃதங்ஙனமாம்; இன்மை, அபாவம். இன்னணமாக, ஹேதுவின் நிலைக்களத்திருக்கும் அபாவத்தின் எதிர் மறையாகாத துணிபொருளோடு ஹேதுவிற்கு ஒரு நிலைக்களத்துளதாதல் வியாத்தியென விளம்பப்பெறும். ஈண்டு தீயுடைத்து புகையான் என்பதாதியில் ஹேது வின் நிலைக்களமாயமலைமுதலியவற்றில் இருக்குமின்மை யின் எதிர்மறைத்தன்மை அவ்வத்தீ முதலியவற்றிற்கு உளதாமென அவ்வியாத்தியாம். ஒரு நிலைக்களத்துள வாய தீப்புகைகட்கே வியாத்தியாமென விளம்பற்க; அவ் வத்தீ முதலியவற்றிற்கும் உபயாபாவ மிருத்தலின், ஒன்றிருப்பினும் இரண்டில்லை எனத் தோற்றலின் பண்புடைத்து பொருண்மையான் என்பதாதியில் அவ் வியாத்தியுமாம்; ஆயினும் எதிர்மறைத் தன்மையை வரைந்து கொள்ளாது துணிபொருட்டன்மையை வரைந்து கொள்வது வரைந்து கொண்ட துணிபொருட் சமநிலைக்களத்துளதாதல் வியாத்தியென விளம்பப் பெறும். அற்றேல் உருவத்தன்மை வியாப்பியப் பொதுமை யுடையதை யுடையது, மண்மையுடைமையின் என்பதாதியின் கண்ணே துணிபொருட் டன்மையை வரைந்துகொள்வன உருவத்தன்மை வியாப்பியப் பொதுமைகளாம். அவ்வெண்மை முதலிய பொதுமைகட்கும் நீலக்குட முதலியவற்றே யிருக்குமபாவ எதிர்

மறைத்தன்மையை வரைந்து கொள்ளுந்தன்மை யுள தாமென அவ்வியாத்தியாமாலோவெனின்? அற்றன்று; ஆண்டுப் பரம்பரையாய் உருவத்தன்மை வியாப்பியப் பொதுமைத் தன்மைக்கே துணிபொருட்டன்மையை வரைந்துகொள்ளுந் தன்மையுண்மையின். அத் தகைய தருமம் வரைந்துகொண்ட அபாவம் பிருதிவி யில் யாண்டு மின்றாம்; உருவத்தன்மை வியாப்பியப் பொதுமை யுடையதின்றா மென்னு முணர்வுறுமாத லின். துணிபொருண் முதலிய வேறுபாட்டால் வியா த்தியின் வேறுபாடாதலின் அத்தகைய தலத்தே துணி பொருட்டன்மையை வரைந்து கொள்ளுந் தன்மையை வரைந்துகொள்வது எதிர்மறைத்தன்மையை வரைந்து கொள்ளுந்தன்மையை வரைந்துகொள்ளாதது என் பதே யிலக்கணத்துள் ளமைவதாமெனவு மியம்புகின் றனர். ஹேதுவின் நிலைக்களமும் ஹேதுத்தன்மையை வரைந்து கொள்வதாற் சிறப்பிக்கப்பட்ட நிலைக்கள மென நிகழ்த்தற் பாலதாம்; அதனான், பொருள், பண்பு வினைக்கபலாந்தன்மையாற் சிறப்பிக்கப்பெற்ற சத்தை யுடைமையின் என்பதாதியின்கண் தூயசத்தையின் நிலைக்களமாய பண்பு முதலியவற்றே யுற்ற அபாவ எதிர்மறைத்தன்மை யிருப்பினும் பொருண்மைக் கவ் வியாத்தியின்றாம். இன்னணம், ஹேதுத்தன்மையை வரைந்துகொள்ளும் சம்பந்தத்தானே ஹேதுவி னிலைக் கள முணர்க. அதனான், சமவாயத்தானே புகையி

னிலேக்களமாய அதன் சினைக்கணுற்ற அபாவ எதிர் மறைத்தன்மை யுண்மையேயனும் நீக்கவ்வியாத்தியின் ருடும். அபாவமும், எதிர்மறை வேற்று நிலக்களத்த தென வுணர்க. அதனுன், கவிக்கூட்டமுடைத்து, இத்தருத்தன்மையான், என்பதன் கண் மூலவரை வானே இத்தருவிருக்குங் கவிக்கூட்ட அபாவ எதிர் மறைத் தன்மையுண்மை யேனும் கவிக்கூட்டத் திற்கு அவ்வியாத்தியின்ருடும். எதிர்மறை வேற்று நிலேக்களத்தன்மை, எதிர்மறை நிலேக்களமாகாத தன் கண் ணிருத்தற்றன்மையென வாயினே அன்னணமே அவ்வியாத்தி; எதிர்மறையாய கவிக்கூட்டத்தின் நிலேக் களமல்லாத பண்பு முதலியவற்றே நிகழும் அபாவமே தருவின்கண் மூலவரைவானே யுண்மையினென்க. எதிர்மறை நிலேக்களத்திராமையாயினே, கூட்டமுடை த்து சத்தையுடைமையின் என்பதாதியின் கண் அதி வியாத்தியாம்; சத்தையின் நிலேக்களமாய பண்பு முத லியவற்றே யுற்ற கூட்டாபாவத்திற்கு எதிர்மறை நிலேக் களப்பொருட்க ணிருப்புண்மையின் என வியம்பற்க. ஹேதுவினிலேக்களத்தே எதிர்மறை நிலேக்களமாகாத தன்கண் ணிருப்புண்மையாற் சிறப்புள்ளது கூறவிருப் பிருத்தலின்; தன்னெதிர்மறை நிலேக்களமல்லாததன் வடிவ ஹேதுவின் நிலேக்களத்திருக்கு மபாவமென்பது துணிபாம். எதிர்மறை நிலேக்களமாகாமை, எதிர் மறைத்தன்மை வரைந்து கொள்வது வரைந்து கொ

ண்டதன் நிலைக்களமாகாமை யென நிகழ்த்தற்க; அதனுன், சிறப்புற்ற சத்தை யுடையது பொதுமை யுடைமையின் என்பதாதியின்கண்பொதுமையின் நிலைக் களமாய பண்பு முதலியவற்றே சிறப்புற்ற சத்தையி னபாவத்திற்கு எதிர்மறைச்சமநிலைக் களத்தன்மை யிருப்பினும் அதிவியாத்தியின்றும். ஈண்டு துணிபொ ருட்டன்மையை வரைந்துகொள்ளுஞ் சம்பந்தத்தானே எதிர்மறை நிலைக்களமாகாமையென வுணர்க; அதனுன் உணர்வுடையது, சத்தையுடைமையின் என்பதாதியின் கண் சத்தையின் நிலைக்களமாய குடமுதலியவற்றிற்கு விடயத்தன்மையானே உணர்வின் நிலைக்களத் தன்மை யிருப்பினும் அதிவியாத்தியின்றும்.

இங்ஙனமாகவே, தீயுடைத்து புகையுடைமை யால் என்பது முதலியவற்றே புகை நிலைக்களத்திற் சமவாயத்தால் தீயின்மை யிருப்பினும் அவ்வியாத்தி யின்றும். அற்றேல் எதிர்மறைத்தன்மையை வரை ந்து கொள்வது வரைந்து கொண்டயாதாமோர் எதிர் மறையின் நிலைக்களமாகாமையா அதன் சாமானியத்தி னதா? ஒரு சிறிது எதிர்மறைத் தன்மையை வரை ந்து கொள்வது வரைந்து கொண்டதன் நிலைக்களமா காமையா விளம்பும் வேட்கை? ஆதியதேலோ, கவிக் கூட்டமுடைத்து, இத்தருத் தன்மையான் என்பதாதி யின் கண் அவ்வாறே அவ்வியாத்தியாம்; கவிக்கூட்ட அபாவ எதிர்மறைத்தன்மையை வரைந்து கொள்வது

வரைந்து கொண்டது தருவிலிராததாய கவிக் கூட்டமு மாம்; அதன் நிலைக்களமாகாதது தருவெனவாமென்க. இடையதேலோ, எதிர்மறை வேற்று நிலைக்கள அபா வம் பிரசித்தியின்றாம். அபாவம் யாவற்றிற்குமே முற் கணத்திருக்குந் தன்மையினனே சிறப்பிக்கப் பெற்ற தமதபாவ வடிவ எதிர்மறைச் சமநிலைக்களத்தன்மை யுண்மையின், தீயுடைத்து, புகையுடைமையான் என் பதாதியின் கண்ணே கடாபாவாதிகளின் முற்கணத் திருக்குந் தன்மையினனே சிறப்பிக்கப் பெற்ற தம தபாவவடிவ எதிர்மறை நிலைக்களத்தன்மை மலை முத லியவற்றிற்குளதாமெனினும் துணி பொருட்டன்மை யை வரைந்து கோடுஞ் சம்பந்தத்தானே அவ்வெதிர் மறை நிலைக்களமாகாமையுளதேயாமாகலின் யாங்ங னம் எதிர்மறை வேற்று நிலைக்கள அபாவ அப்பிரசித்தி யாமெனை வறையற்க. கடாபாவத்தே எத்தீயினபாவ முளதோ அதற்குக் கடாபாவவடிவத் தன்மையானே கடாபாவத்திற்குத் தீயும் எதிர்மறையாம், அதன்நிலைக் களமும் மலை முதலியவை யென்னும் முறையேஎதிர் மறை வேற்றுநிலைக்களத்திற் கப்பிரசித்தத் தன்மை யுண்மையின். கடாபாவாதிகளில் தீயபாவாதிகள் வே றே யாமெனை விளம்பிடினும், புகை யபாவமுடை த்து, தீயபாவமுடைமையின் என்பதாதியின்கண் ணவ் வியாத்தியாம். ஆண்டுத் துணிபொருட்டன்மையை வரைந்துகொண்ட சம்பந்தம் சொரூப சம்பந்தமாம்.

அச்சம்பந்தத்தான் அபாவம் யாவற்றிற்குமே முற்கணத்திருக்குந் தன்மையினுனே சிறப்பிக்கப்பெற்ற தம தபாவவடிவ எதிர்மறை நிலேக்களத்தன்மை ஹேதுவி னிலேக்களத்திற்காமென்பதாம். கடையதேலோ, கவிக்கூட்ட அபாவமுடைத்து, ஆன்மத் தன்மையுண்மையின் என்பதாதியின்கண் ணவ்வியாத்தியாம். ஆண்டான்மாவின்கண் ணிருக்கும் கவிக்கூட்டாபாவாபாவம் கவிக்கூட்டமாம்; அதற்கும் பண்புமையுண்மையின் எதிர்மறைத் தன்மையை வரைந்துகொள்வது பண்புப் பொதுமை யபாவத்தன்மையுமாம்; அதனுல் வரைந்துகொண்ட நிலேக்களமாகாமை ஹேதுவினிலேக்களமாய ஆன்மாவிற்காமெனின்? அற்றன்றும்; எத்தகைய எதிர்மறைத் தன்மையை வரைந்துகொள்வது வரைந்துகொண்ட நிலேக்களமாகாமை ஹேதுவுடையதற்கோ அத்தகைய எதிர்மறைத் தன்மையை வரைந்துகோடாத்தன்மையைக் கூற வேட்கையிருத்தலின். அற்றேற் காலம், கடமுடைத்து, காலபரிமாணத்தான் என்பதன்கண் எதிர்மறை வேற்று நிலேக்கள அபாவ அப்பிரசித்தியாம்; ஹேதுவினிலேக்களமாய மகா காலத்திற் குலகாதாரத் தன்மை யுண்மையானே எல்லாஅபாவங்கட்கும் துணிபொருட்டன்மையை வரைந்துகோடுஞ் சம்பந்தமாய காலிக விசேஷணத்தன்மையானே எதிர்மறை நிலேக்களவிருப்புண்மையின். ஈண்டுச் சிலர் மகா காலபேத விசிஷ்ட கடாபாவம் ஆண்டு

எதிர்மறை வேற்று நிலைக்களமாம். மகாகாலத்திற்குக் கடாதாரத்தன்மையிருப்பினும் மகா காலபேத விசிஷ்ட கட அநாதாரத் தன்மையுண்மையின். மகா காலத்தே மகாகால பேதமின்மையின். உண்மையாயோ எதிர்மறைத் தன்மையை வரைந்துகொள்ளுஞ் சம்பந்தத்தானே எதிர்மறை நிலைக்களமல்லாததாகிய ஹேதுவினிலைக்களத்திருக்கும் அபாவ எதிர்மறைத் தன்மைச் சாமானியத்தே எச்சம்பந்தத்தால் வரைந்து கொண்ட தன்மை எத்தருமத்தால் வரைந்துகொண்ட தன்மையென்னும் உபயாபாவமாமோ அச்சம்பந்தத்தானே அத்தருமத்தான் வரைந்து கொண்டதற்கு அவ்வேது வியாபகத்தன்மை யறிக. இவ்வாறாகவே, காலம், கடமுடைத்து, காலபரிமாணத்தான், என்பதாதியின் கண்ணே சையோக சம்பந்தத்தானே கடாபாவ எதிர்மறையாய கடத்தின் நிலைக்களமல்லாததாய் ஏதுவின் நிலைக்களமாய மகாகாலத்தே இராநின்ற அக்கடாபாவமே சையோகத்தாலாம்; அதன் எதிர்மறைத் தன்மையின் கண்ணே காலிக சம்பந்தத்தான் வரைந்து கொண்டதன்மை, கடத்தன்மையான் வரைந்துகொண்ட தன்மையென்னும் உபயாபாவமுண்மையின் அவ்வியாத்தியின்றாம். அற்றேல் பிரமேயத்தீயுடைத்து புகையுடைமையின் என்பதாதியின் கண்ணே பிரமேயத்தீத்தன்மையான் வரைந்து கொண்ட தன்மை யப்பிரசித்தமாம்; குருதருமத்திற்கு வரைந்துகோடேல் தன்

மையின்மையின் எனின்? அற்றன்று; கம்புக்கிரீவா (சங்குக் கழுத்தா)தி யுடையதின்றென்னும் தோற்றத் தாற் கம்புக்கிரீவாதி யுடைமையான் வரைந்துகொண்ட எதிர்மறைத் தன்மையை விடயஞ் செய்தலான் குரு தருமத்திற்கும் வரைந்துகோடுந் தன்மையி னங்கீகார முண்மையின் என்பது சுருக்கமாம். 38

## பக்கவிருத்தித் தன்மையென்பதன் கண்ணே பக்கத்தன்மையென்பது யாதெனக்கடாவ விடையளிக்கப் பெறுகின்றது.

39. துணிவிழை வின்மைசேர் துணிபொருட் பெறுதி
யணைவுற லிலதது பக்க மாகுமா [யை
லிணையறு மதன்கணே யிருத்தற் றன்மையி
னுணர்வினி னனுமிதி யுதிக்க லாகுமே.

துணிதல் வேட்கையின்மையோடுற்ற துணிபொருட் பெறுதியின்மை, பக்கத்தன்மையாம். அஃதுடையது பக்கமாமென்பது பொருள். துணிதல் வேட்கை மாத்திரம் பக்கத்தன்மை யன்றாம். துணிதல் வேட்கையிலதாய வழியும் இடிமுழக்கத்தான் முகிலனுமானமாதலின்; அதனானே துணிபொருளையமும் பக்கத்தன்மையன்றாம். ஐயப்பாடிலதாயவழியும் அதனநுமானமாதலின் துணிபொருட் பெறுதியுளதாயவழியும்

துணிதல் வேட்கையுளதாக அனுமிதி நிகழவே நிகழும்; ஆதலின் துணிதல் வேட்கையின்மையோ டுற்றமை பெறுதியின்கண்ணடைவாம். இவ்வாருகவே யாண்டுப்பெறுதியின்றே ஆண்டும் துணிதல் வேட்கையுள் வழியும் இல்வழியும் பக்கத்தன்மையாம்; யாண்டுத் துணிதல் வேட்கையுண்டோ ஆண்டுப் பெறுதியுள் வழியும இல்வழியும் பக்கத்தன்மையாம். யாண்டுப் பெறுதியிருந்து துணிதல் வேட்கையோ இன்ருமோ ஆண்டுப் பக்கத்தன்மையின்ரும்; துணிதல் வேட்கையின்மையோடுற்ற பெறுதியுண்மையின். அற்றேல் யாண்டு ஆராய்ச்சியின் பின்னர்ப் பெறுதியோ அதன் பின்னர்த் துணிதல் வேட்கையோ ஆண்டுத் துணிதல் வேட்கை நிகழுழி ஆராய்ச்சியழிதலின் அனுமிதி தோன்ருதாம்; யாண்டுப் பெறுதி ஆராய்ச்சி துணிதல் வேட்கை என்பன முறையே யுளவாகின்றனவோ ஆண்டுத் துணிதல் வேட்கை நிகழுழி பெறுதியழிதலின் தடையிலதாகவே அனுமிதியாம். யாண்டுத் துணிதல் வேட்கை, பெறுதி, ஆராய்ச்சி என்பனவுளவாகின்றனவோ ஆண்டு ஆராய்ச்சி நிகழுழித் துணிதல் வேட்கையே யின்ரும். இன்னணம் பிறவிடத்தும் பெறுதி நிகழுழியேனும் ஆராய்ச்சி நிகழுழியேனும் துணிதல் வேட்கையின்ரும். தருக்கியாயவிபுவின் சிறந்த பண்புக்கட்கு ஒருபோதுறல் நீக்கப்பட்டிருத்தலின்; ஆதலின் யாங்ஙனம் துணிதல் வேட்கையின்மையோடுற்றமை பெறுதியின் அடையாமெனின்? அற்

றன்று; யாண்டுத் தீ வியாப்பியப்புகையுடைய மலை தீ யுடையது எனக் காட்சியேனும் நினைவேனும் ஆமோ அதன் பின்னர்த் துணிதல் வேட்கையாமோ ஆண்டுப் பக்கத்தன்மையடைவின் பொருட்டு அவ்வடையின்றி யமையாததேயாமாதலின். ஈண்டிஃதுணரற் பாலதாம். எவ்வெத்தகைய துணிதல் வேட்கையிருப்பப் பெறுதி யிருப்ப எக்குறியுடை யனுமிதியாமோ அவ்வத் தகைய துணிதல் வேட்கையின்மையோடுற்ற பெறுதி யின்மை அக்குறியுடை யனுமிதியின் கண்ணே பக்கத் தன்மையாம். அதனுன் பெறுதி ஆராய்ச்சியிருப்பி னும் ஒரு சிறிதுணர்ச்சி யுண்டாகுகவென்னும் விழை வின் மாட்டும் அனுமிதியின்றும். தீவியாப்பியப்புகை யுடைய மலை தீயுடையது எனக் காட்சியுளதாகக் காட் சியினயலாய வுணர்வுளதாகுகவென்னும் விழைவின் மாட்டோ உளதாத லொருதலையே யாமென்க. இன்ன ணம் புகையாராய்ச்சியிருப்ப ஒளியால் தீயை யனுமிக் கலாம் என்னும் விழைவின் மாட்டு மனுமிதியின்றும். துணிதல் வேட்கையினின்மை நிகழுழி எத்தகைப் பெறுதியிருப்ப அனுமிதியின்றே அத்தகைப் பெறுதி யைச் சிறப்பித்தே அவ்வவ்வனுமிதிக்கண்ணே தடை சாற்றற்பாற்றும். அதனுன் மலைதேயுவுடையது, கன் மயந்தீயுடையது என்னுமுணர் விருப்பினும் அனு மிதிக்கு முரணின்றும். ஆனுல் பக்கத்தன்மையை வரைந்து கொள்வதன் ஒரு நிலைக்களத்தன்மையானே

துணிபொருட் பெறுதிபாயவழியும், அதன் வரைவால் அனுமிதிகொண்டலின் பக்கத்தன்மையை வரைந்து கொள்வதன் வரைவாலா மனுமிதிக்குப் பக்கத்தன் மையை வரைந்துகொள்வதன் வரைவாற் றுணிபொருட் பெறுதியே தடையாம். பக்கத்தன்மையை வரைந்து கொள்வதன் ஒரு நிலைக்களத் தன்மையாலா மனுமிதிக் கோ பெறுதிமாத்திரம் முரணும். இஃதோ உணரற் பாலதாம்:—யாண்டு இது மகனு அல்லவா என்னும் ஐயத்தின் பின்னர் மகன்மை வியாப்பியக் காதியுடையா திதுவென்னு முணர்வாமோ, ஆண்டனுமிக்கும் அவா இல்வழி மகன்மையின் காட்சியாம்; கருதலோ அன் றும்; ஆதலின், அனுமிக்கும் அவாவின்மையோடுற்ற சமவிடயமுடைக்காட்சி யுதவி, காமினியின் காதன் முதலியவை கடிப்பத் தாகுகவே தடையாம். இங்ஙனம் "ஆராய்ச்சியின் பின்னர்க் காட்சி வேட்கை யில தாயவழி, பக்க முதலியவற்றின் காட்சி யுதயமாகாமை யின், காட்சி வேட்கை யின்மையோடுற்ற கருதலி னுதவி, அயலாய விடயமுடைக் காட்சியின் கண்ணே தடையாம். 39

## ஏதுவழக்கால் ஏதுப்போலிகள் பகுக்கப்படுகின்றன.

40. பிரியுமனை காந்தம்விருத் தம்மசித்தம் பிரதி பக்கம் பிறங்கும்வாதம், புரியுமைந்து வகையேதுப் போலியிவை யனைகாந்தம் போதுவிஞேடே, கரியசிறப்

பேமுடிவில் சபக்கவிபக் கங்களிலே கதுவலாதி, இருவி தம்விட் டேகலயல் கேவலாங் நுவயிப்பக்க மிசைந்த தாமே.

*அதனிலக்கணமோ, எவ்விடய முடைமையானே அறிவிற்கனுமிதிப் பகைமையாமோ அத்தன்மையாம். அங்ஙனமன்றே:—பிறழ்ச்சி முதலிய விடய முடைமை யானே அறிவிற்கநுமிதிப் பகைமையுண்மையின் அவை குற்றங்களாம். எவ்விடய முடைமையும், எத்தகைய அடையடுத்த விடயமுடைமையாம்; அதனுன் வாதம யற் கனுமிதிப் பகைமையேனும் வாதைபின்றும். ஆண்டு, மலை தீயபாவமுடைத்து என அடையடுத்த தப்பிரசித்த மாதலின் ஏது குற்றமன்றும். தீயபாவ வியாப்பியக் கன்மயத் தன்மையுடையது என்னும் ஆராய்ச்சிகாலத்தே தீ வியாப்பியப் புகைக்குப் போலித் தன்மையாகாதாம். ஆண்டுத் தீயபாவவியாப்பிய முடை யது பக்கம் என்னும் அடையடுத்த தப்பிரசித்த மாத வின் என அறையற்க; இட்டமாதலின். அன்றுயினே வாதத்திற்கும் அநித்தியத்தோட வடைவாம். ஆதலின், ஆண்டுத் தீயபாவ வியாப்பியக் கன்மயத் தன்மை யுடையதென்னும் ஆராய்ச்சிகாலத்தே தீ வியாப்பியப் புகைக்குப் போலித்தன்மை யின்றும். பயலான் அனு மிதித்தடை மாத்திரமாம்; ஹேதுவோ குற்றமுற்ற தன்றும். இங்ஙனமாகவே, துணிபொருளில்லாததன் கண் ணிருப்பனவாய ஏது முதலியவை குற்ற*

மாம். அஃதுடைமையும் ஹேதுவின்மாட் டெச்சம் பந்தத்தானேனு மாமென்பர் புதியர். மற்றையரோ எவ்விடய முடைமையானே அறிவிற்கனுமிதிப் பகை மையாமோ அஃதுடைமை ஹேதுப்போலித் தன்மை யாம். சற்பிரதிபக்கத்தே பகைவியாத்தி முதலிய வையே அவ்வாரும். அஃதுடைமையும் ஹேது விற்கு அறிவுருவச் சம்பந்தத்தானும். இன்னணமேல் அழலுடைத்துப் புகையுடைமையின் என்பதாதியிற் பக்கத்தே வாதமபற்குத் துணிபொரு ளபாவ விடய முடைத் தன்மையானே அனுமிதிப் பகைமை யுண்மை யின் அறிவுருவச் சம்பந்தத்தானே அஃதுடைமைக் கும் இருப்புண்மையின் நல்லேதுவிற்கும் வாதிதத் தன் மையி னடைவாம் என அறையற்க; ஆண்டு அறிவிற் குச் சம்பந்தத்தன்மைக் கற்பனைகூடாமையின், ஈண் டுச் சற்பிரதிக்கப்பட்டது என்னும் வழக்கானே அக் கற்பனைகூடலின். ஆண்டு வாதிக்கப்பெற்றது என்னும் வழக்கின்மையின் என்பர். அனுமிதிப் பகைமையும் அனுமிதி யதன்காரணமென்னும் இரண்டினொன்றன் பகைமையாம்; அதனால், பிறழ்ச்சியின்கண் ணவ்வியா த்தியின்ரும். தோடவுணர்ச்சியும் எவ்வேது விடய முடையதோ அவ்வேதுவுடை யனுமிதியின்கண்ணே தடையாம். அதனான் ஓரேதுவின் கண்ணே பிறழ் ச்சி யுணர்ச்சியாயின் வேறேதுவான் அனுமிதியுண் டாவதானும் அதனபாவ முதலியவற்றைக் கவராமை

யானும், பிறழ்ச்சி யுணர்ச்சிக்கு அனுமிதிப் பகைமை யின்றேனும் கோதின்றுமென்பது சுருக்கமாம். எத் தகைய துணிபொருட் பக்கஹேதுவில் எத்துணைத் தோடங்களுள்ளனவோ அத்துணை அயலயற்றன்மை ஆண்டு ஹேதுப் போலித்தன்மையாம். ஐவகைக் கூற்றே அஃதுறுமிடக் கருத்தானேயாம். இன் னணமாகவே பொது முதலியவற்று ளொன்றுந்தன்மை அனைகாந்திகத் தன்மையாம். பொது, துணிபொரு ளுடையதினும் வேற்றிடத்திருப்பது; அதனானே வியா த்தியுணர்வு தடைசெய்யப்படும். சிறப்பு, துணிபொ ருட் சமநிலைக்களத்திராதஹேது; அதனான் றுணிபொ ருட் சமநிலைக்களத்தாதற் கவர்ச்சி தடைப்படும். மற் றையரோ சபக்கத்திராதது சிறப்பு; சபக்கமோ துணி ந்த துணிபொருளிடம். இவ்வாறுகவே, சத்தம், அநி த்தியம், சத்தத்தன்மையான் என்பது முதலியவற்றே பக்கத்திற் றுணிபொருட் டுணிபாங்கால் சிறப்பன்று. ஆண்டு ஹேதுவின் நிச்சயத்தான் என வியம்புவர். முடிபெய்தாததும், முழுதுமின்மையின் எதிர்மறையா காத துணிபொருளுடையதாதியாம். இதனான், வெதி ரேக வியாத்தியுணர்வு தடைப்படுத்தப்படும். விருத் தமோ துணிபொருள் வியாபகீபூத அபாவ எதிர்மறை யாம். இது துணிபொரு ளபாவத்தைக் கவரும் சாமக் கிரித்தன்மையானே தடையாம். சற்பிரதிபக்கத்தே யோ எதிரேது துணிபொரு ளபாவசாதகமாம். ஈண்

டோ ஹேது வொன்றேயெனச் சிறப்பாம். துணிபொருளபாவசாதகஹேதுவே துணிபொருட் சாதகத்தன்மையானே கூறப்பெற்றதென அசத்திவிசேட நிலையேற்றானும் சிறப்பாம். சற்பிரதிபக்கம் துணிபொருளபாவவியாப்பியமுடையபக்கமாம். கவரப்பெறாத பிரமாணமாதலின்மையுடைத் துணிபொருள் வியாப்பியமுடைமை யுணர்வின் காலத்த கவரப்பெறாத பிரமாணமாதலின்மையுடையதனபாவ வியாப்பியமுடைமை யுணர்வின் விடயம் அவ்வாறென்பர் அயலார். ஈண்டோ, பரஸ்பர அபாவ வியாப்பியமுடைமை யுணர்வான் பரஸ்பரானுமிதித்தடை பயனும். ஈண்டுச் சிலர் எங்ஙனம், குட அபாவ வியாப்பியமுடைமை யுணர்விருப்பினும், குடவிழிக்கூட்டமாங்கால் குடமுடைமை யுணர்வுண்டாமோ; எங்ஙனந்தான், மஞ்சட்டன்மை யபாவவியாப்பியச் சங்குத்தன்மையுடைமையுணர்வு சங்கின்கண்ணிருப்பினும், பித்தமுதலிய குற்றமிருப்பின் மஞ்சட்சங்கம் என்னும் மதியுண்டாமோ; அங்ஙனம் இருகோடி வியாப்பியத்தைக் காணினும், இருகோடியின் காட்சிவடிவ ஐயமுண்டாம். அவ்வாறே, சற்பிரதிபக்கத் தலத்தே ஐயவடிவ அநுமிதியாகவேயாம். ஒருகோடி வியாப்பியக் காட்சியாமிடத்தோ வலுமைமிகுதியால் இரண்டாவது கோடியின் விளக்கம் தடைப்படுதலின் ஐயமின்றாம். பலவலியாஞே உயர்வொப்பாற்றற்பெற்றி கற்பிக்கப்பெறுமெனக் கழறுகின்றனர். அஃதொவ்வாதாம்;

அதனபாவ வியாப்பியமுடைமை யுணர்வுளதாகவே அதனுபநீதபான விசேட சத்தஞான முதலியவை யுதியாமையின், இலெளகிக சம்பந்தத்தா லுண்டாகாததும் குற்றச்சிறப்பா லுண்டாகாததுமாய உணர்வுமாத்திரத்தே அதனது தடைத்தன்மை எளிதிற் கோடலான். உபநீதவிளக்க விசேடத்தேயும் சத்தவுணர்வின்கண்ணும் தனித்தடைத் தன்மையோ இன்றும்; அரிதிற் கோடலான். இங்ஙனமாகவே, தடையுண்மையின் யாங்ஙன மனுமிதி. இலெளகிக சம்பந்தத்தலத்தே காட்சிகடுப்பச் சற்பிரதிபக்கத்தலத்தே ஐயவடிவ அநுமிதி பிரமாண முடையதன்றும்; எதனுன் அனுமிதியயற் றன்மையானும் சிறப்பிக்கப்பாலதாமோ, யாண்டு இருகோடி வியாப்பியமுடைமை யுணர்வோ, ஆண்டு இரண்டிடத்தும் பிரமாணமாதலின்மையி னுணர்வான் ஐயமாம்; வேறுகஇன்றும். கவரப்பெறுத பிரமாணமாதவின்மையுடைப் பகையுணர்விற்கே தடையுண்மையின் என்க. அசித்தியோ சார்பசித்தி முதலியவற்றுளொன்றுதலாம். சார்பசித்தி பக்கத்தே பக்கத்தன்மையை வரைந்துகொண்டதனின்மையாம். பொன்மயப்பொருப்புத் தீ யுடைத்தெனத் துணியப் பெறுமிடத்தே மலைமாழைமயமன்றுமெனு முணர்வுளதாயவழி பொன்மயப்பொருப்பி லாராய்ச்சித்தடை பலமாம். உருவசித்தியோ பக்கத்தே வியாப்பியத்தன்மை யுடன்பாடின்மையாம். ஆண்டே, மடு, பொருள், புகையுடைமை

யின் என்பதாதியின்கண்ணே பக்கத்தே வியாப்பியத் தன்மையுடன்பட்ட ஹேதுவினின்மை யுணர்வே பக்கத்தே துணிபொருள் வியாப்பிய ஹேதுவுடைமை யுணர்வுவடிவ ஆராய்ச்சியின்றடை பலமாம். சாத்தியாப்பிரசித்தி முதலியவையோ வியாப்பியத் தன்மையசித்தியிடையே யுள்ளடக்கமாம். துணிபொருளின் கண்ணே துணிபொருட்டன்மையை வரைந்துகொள்வதன் அபாவம் சாத்தியாப்பிரசித்தியாம். இவ்வுணர்வுண்டாகவே பொன்மய எரியுடையது என்பதாதியின் கண் துணிபொருட்டன்மையை வரைந்துகொண்டதாலடையடுத்த துணிபொருள் வியாப்பியமுடைமை யுணர்வுவடிவ ஆராய்ச்சித்தடை பலமாம். இங்ஙனம்ஹேதுவின்கண்ணே ஹேதுத்தன்மையை வரைந்துகொண்டதனபாவம் சாதனாப்பிரசித்தியாம். பொன்மயப் புகையுடைமையின் என்பதாதியிற்போலும். ஈண்டு ஹேதுத்தன்மையை வரைந்துகொண்டதாலடையடுத்த ஹேதுவி னுணர்வின்மையின் அவ்வேதுவுடைவியாத்தியுணர்வு முதலியவற்றின் அபாவம் பலமாம். இவ்வாறே எரியுடைத்து கரும்புகையால் என்பதாதியின்கண் மிகைபடலாற் கரும்புகைமையின் ஹேதுத்தன்மையை வரைந்து கொள்ளாமையும் வியாப்பியத்தன்மை யசித்தியாமென்று மியம்புவர். பாதமோ பக்கத்தே துணிபொருளின்மை முதலியவாம். இதற்கோ அநுமிதித்தடை பலமாம். அத்தருமியுடை அவ்வபாவநிச்சயம், இலௌகிக

சம்பந்தத்தா லுண்டாகாததும் குற்றச்சிறப்பா லுண்டா காததும் ஆய அத்தருமியுடை அவ்வுணர்வு மாத்திரத்தே பகையாம். ஆண்டு ஐயப்பொதுவாய பக்கத்தே சாத்தியசம்சிருட்டத்தன்மையுணர்வு அனுமிதி காரணமென்பதூஉம் அதன்பகைமையானே பாதசற்பிரதிபக்கங்கட்கே துப் போலித்தன்மை யென்பதூஉம் பொருத்தமின்றாம். அப்பிரசித்தத் துணிபொருளுடை யனுமிதி யடைவின்மையினானும், துணிபொருளாய முதலியவை யின்றியும் அனுமிதியுண்டாகலினானும் என்க. இங்ஙனம் துணிபொருளபாவவுணர்வில் பிரமைத்தன்மை புணர்வும் தடையன்றாம்; அளவையின்மையினானும், அரிதிற் கோடலானும் என்றுணர்க. அன்றியினே சற்பிரதிபக்க முதலியவற்றினும் அதனபாவ வியாப்பியமுடைமை புணர்வுளதாகப் பிரமைத்தன்மை விடயமுடைத் தன்மையானே தடையடைவாதலின்; மற்றே, மயற்றன்மையுணர்வு தீண்டப்பெறாத பாதமுதலிய மதிக்குத் தடைத்தன்மையாம், ஆண்டு மயற்றன்மைச் சங்கைமாற்றலாற் பிரமாணமாதலி னுணர்ச்சி சிலபாற் செறியாநிற்கும். பாதத்தலத்தே பக்கத்தின்பால் ஹேதுவிருப்பிற் பிறழ்ச்சியாம். பக்கத்தின்பால் ஹேதுவிலதாயின் உருவசித்தியே குற்றமாமெனக் கூறற்க; பாதவுணர்வு பிறழ்ச்சியுணர்வு முதலியவற்றினும் வேறுபடுதலின். அன்றியும் யாண்டு ஆராய்ச்சியின் பின்னர் பாதமதியோ ஆண்டுப் பிறழ்ச்சி யுணர்வு

முதலியன யாதொன்றுஞ் செய்யக்கூடாமையின் பாதத்திற் கனுமிதித் தடைத்தன்மை யுறையத்தக்கதாம். இங்ஙனம் யாண்டுற்பத்திக்கணம் வரைந்துகொண்ட குடமுதலியவற்றே மணவியாப்பியமன்மை யுடைமையுணர்வோ ஆண்டுப் பாதத்திற்கே தடைத்தன்மை சாற்றத்தக்கதாம். பக்ககுடத்தே மணமுண்மையின் யாங்ஙனம் பாதம் எனப் பகாற்க; பக்கத்தன்மையை வரைந்துகொண்ட தேசகாலவரைவானே அனுமிதியனுபவசித்தமாதலின் என்க. பாத அதன் வியாப்பிய பின்னங்களாய ஹேதுப்போலிகள் அதன் வியாப்பியங்களாயினும் அதனிடையே யுள்ளடங்குவனவாம்; அன்றயினே ஹேதுப்போலி மிகுதி வழக்காதலின். பாத வியாப்பிய சற்பிரதிபக்கம் வேறேபாம், சுதந்திர இச்சையுடைய முனிவரால் தனித்துபதேசிக்கப்பட்டிருத்தலின். சற்பிரதிபக்க வியாப்பியமோ தடையன்றென்பது வெளிப்படைப் பொருளாம்.

சபக்க விபக்கத்திருப்பது பொதுவென்பது பொருள். சபக்கம் துணிந்த துணிபொருளுடையது. விபக்கம் துணிபொருளுடையதினும் வேறுபது. விருத்த நீக்கற்பொருட்டுச் சபக்க விருப்புண்மை சாற்றப்பெற்றது. உண்மையாக விபக்க விருப்புண்மையே விளம்பத்தக்கதாம்; விருத்தத்திற்குப் பொதுத்தன்மையுண்மையேனும் தூடகத்தன்மை விரைவேறுதலினனே அது தனியாதலின். சபக்க விபக்கங்களினின்றும்

நீங்கியது என்பது பொருள். சபக்கம் துணிபொருளுண்மையானே துணிந்ததாம், விபக்கம் துணிபொருளின்மையானே துணிந்ததாம். சத்தம் அநித்தியம், சத்தத்தன்மையான் என்பதாதியின்கண் ஓசையில் அநித்தியத்தன்மை யையம் நிகழுழி சபக்கத்தன்மை குடமுதலியவற்றிற்கேயாம், அதனினின்றும் விலகியதேயாம் சத்தத்தன்மை எனவது சிறப்பாம். சத்தத்தின்கணநித்தியத்தன்மை நிச்சயமாங்காலோ சிறப்பன்றாம். இஃதோ முதியர் மதமாம். புதியர் மதமோ பூர்வம் புகலப்பெற்றது. எல்லாம் பெயரிட்டு, வழங்கற்பாலதாம், அளவையான் அளக்கற்பாலதாகலின், என்பதாதியின்கண் யாவுமே பக்கமாதலின் சமநிலைக்களமாதலைக் கவரும் வேற்றிடமின்மையின் அனுமிதியின்றாம் இஃதோ நலமன்றாம். பக்கத்தின் ஏகதேசத்தே உடனிகழ்ச்சி கவரப்பெறினும் கோதின்மையின். இருக்குகதானுடனிகழ்ச்சி கவரப்பெறாமை, அத்துணையானே அஞ்ஞானருபாசித்தியே அன்றேதுப் போலித்தன்மையதற்காம்; ஆயினும் கேவலாந்நுவயித் துணிபொருளுடைமை அத்தன்மையென வரையப்பெற்றது. 40

41. துணிபொருளுறையு மிடமுறையாத துகளதே
விருத்தமாஞ் சார்பே,பணியுரு வசித்தி வியாப்பியத் தகை
மைபசித்தியா மணிமய மலையாண்,டேணுபக்கமாத் மடுப்
பொருள்புகைடா ணிடைகடை கரும்புகை யானே, தணி
வறுமாய்வின் முரணுறுமேதுச் சார்தல்சற் பிரதிபக்கமதே.

தேற்றத்தானே துணிபொருளுடைமை வரைவானே ஹேதுவினபாவம் உணர்த்தப்பெற்றது; அங்ஙனமாகவே துணிபொருள் வியாபகீபூதாபாவ எதிர்மறைத்தன்மை அதன்பொருளாம்.

அசித்தி பகுக்கப்படுகின்றது:—சார்பேயென. சார்பசித்தியெனக் கொள்க. ஆதியென்றதூஉ மிதனையேயாம். இடை உரு வசித்தியாம். கடைமற்றதாம். கரும்புகைமை முதலியவை பெருமையான் ஹேதுத்தன்மையை வரைந்துகொள்வனவன்றாம். தற்சம நிலைக்களத்ததாய் வியாப்பியத்தன்மையை வரைந்துகொள்வதாய வேறுதருமத் தடங்காததற்கே வியாப்பியத்தன்மையை வரைந்து கோடுந்தன்மை யுண்மையின். புகை முன்னின்மையை இனிது கோடற்கே தற்சம நிலைக்களமென்றதாம். கவிக்கூட்ட அதனபாவ வியாப்பியமுடைமை ஆராய்வின்கண்ணும் சற்பிரதிபக்கம் பண்ணப்படவில்லையாகலின் அறையப் பெறுகின்றது:—முரணுறுமென. அங்ஙனமாகவே தன்றுணிபொருள் விருத்தத் துணிபொருளபாவ வியாப்பியமுடைமை யாராய்ச்சிச் சமபத்த துணிபொருள் வியாப்பிய முடைமை யாராய்ச்சிவிடயம் என்பது பொருளாம். 41

42. துணிபொருட் சூனியந் துதையும் பக்கமே
யணைவுறு பாதம தாகு மாதருன்
அணுதுற போதினி லாங்கு டத்தின்மேன்
மணமுதற் றுணிதரன் மானு மென்பரால்

பக்கம். பக்கத்தன்மையை வரைந்துகொள்வதடையடுத்த தென்பது பொருள். அதனாற் குடத்தே மண

*மிருப்பினும் மாசின்றும். இவ்வாறு மூலத்தானே வரைந்துகொண்டதருக் கவிக்கூட்ட முடைத்து என்ப தன்கண்ணும் உணரத்தக்கதாம்.* 42

அனுமானகண்டம் முற்றும்.



## உபமிதி யுரைக்கப்பெறும்.

43. முதன்முதலி லாமாமுற் பொருள்காணு நகர னுக்கு முதன்மைக் கோவைக், கதுவுறமோப் புமையு ணர்வா மதுதானே கரணமதாங் கதித மான, முதன் மொழியின் பொருணினைவே வியாபார மாமாமுன் மொழி கடம்மின், னிதமுதவு மாற்றலுணர் வுவமையின்றன் பலமாக வியம்ப லாமே.

*யாண்டு ஓாரண்மகனல் "ஆவினையொக்கும் ஆமா பதவாச்சியம்" எனக் கேட்கப்பெற்ற நகரவாசி பின் னோரண் முதலவற்றை ஆமாவைக் கண்டனனே ஆண்டு ஆவொப்புமை யுணர்வு யாதுண்டாயதோ அஃ துபமிதி கரணமாம். அதன்பின்னர் "ஆவினையொக் கும் ஆமாபதவாச்சியம்" என வுபதேசித்த வாக்கியப் பொருணினைவு யாதுண்டாமோ அஃதேவியாபாரமாம். அதன் பின்னர் "ஆமா ஆமாபதவாச்சியம் என்னு முணர்வு யாதுண்டாகின்றதோ அஃதுபமிதியாம். இஃ தாமாபதவாச்சியம் என்பதுபமிதியோ அன்றும். அய லாமாவின் மாட்டாற்றற்கவர்ச்சியின்மை வழக்காத வின்.* 43

உபமானகண்டம் முற்றும்.

## சாத்தபோதவகை தெரிக்கப்பெறும்.

44. பதத்தினுணர்வே கரணமதாம் வாயிலாண்டுப் பதப்பொருளின், இதத்தவுணர்வாஞ் சாத்தவுணர் வினியபயனுண் டாற்றலுடைக், கதித்தவுணர்வே சககாரி கருத்தின்பொருத்த மின்மையினுன், உதித்தலாகு மிலக்கணைசக் கியசம்பந்த முறைதரினே.

அறியப்பெற்ற பதம் கரணமன்றும்; பதமின்றேறனும் மவுனிகவி முதலியவற்றே சாத்தவுணர்வாதலின். பதம்பபந்த பதப்பொருணினைவு வியாபாரமாம். அன்றுயினே பதஞானவானுக்குக் காட்சி முதலியவற்றாற் பதப்பொருளமைவுறினும் சாத்தவுணர்வி னடைவாதலின். ஆண்டும் விருத்தியாற்பதம் பயந்ததன்மை யுணரற்பாற்றும்; அன்றுயினே கடாதிபதத்தாற் சமவாய சம்பந்தத்தான் ஆகாசநினைவுண்டாகவே ஆகாசத்திற்கும் சாத்தபோதங் கூடலின். விருத்தியும் ஆற்றலிலக்கணை என்னும் இரண்டுளொன்றும் சம்பந்தமாம். ஈண்டே ஆற்றலுணர்விற் குபயோகமாம். முன்னர் ஆற்றல் கவரப்பெற முடியாதாயின் பதவுணர் விருப்பினும் அதன் சம்பந்தத்தான் நினைவு கூடாமையின். பதவுணர்ச்சிக்கே ஒரு சம்பந்தியுணர்வின் விதியாற் பொருணினைப்பிக்குந்தன்மையாம். ஆற்றலும்பதத்தோடு பதப்பொருட் சம்பந்தமாம். அஃதும் இச்சப்தத்தான் இப்பொருளுணரத் தக்கதாமென்னும் கடவுள் விழைவு

வடிவமாம். ஆதுனிகப் பெயரின்கண் ணாற்றலுளதே யாம் "பதினொன்றாம் பகலிற்பெற்றோன் பெயரிடுக" வென்னுங் கடவுள் விழைவுண்மையின். ஆதுனிக சங்கேதஞ் செய்யப்பெற்றதின்கண்ணே ஆற்றலின்றென்பது சம்பிரதாயமாம். புதியரோ கடவுளிச்சை ஆற்றலன்றாம், மற்றோ இச்சையேயாம்; அதனான் ஆதுனிக சங்கேதஞ் செய்யப்பெற்றதின்கண்ணும் ஆற்றலிருக்கின்றதேயாம் என அறைகின்றனர். ஆற்றற் கவர்ச்சியோ இலக்கண முதலியவற்றானாம். அங்ஙனமன்றோ :—"ஆற்றலின் கவர்ச்சி யிலக்கண முபமா னத்தொடு மருநிகண் டுரியோன், தேற்றுறு மொழியா னுலகுறு வழக்காற் றிகழ்மொழித் தொடரின்சே டத்தாற், போற்றுறு முரையாற் சித்தமாம் பதத்தின் பொலிதருமண்மையா லாமென், றேற்றமெய் வீர விறையருளிருந்த வினியமே லவுரியம் புவரே". பிராதிபதிகம் விகுதி முதலியவற்றின் ஆற்றற்கவர்ச்சி இலக்கணத்தானாம். சிலபாற்பாதகமுறிற் றள்ளப்படும். எங்ஙனம்:—இலக்கணிகளால் விகுதிக்கு வினைமுதலின்கண்ணாற்றல் விளம்பப்பெறும். சைத்திரன் அடுகின்றான் என்பதாதியில் வினைமுதலோடு சைத்திரனுக் கபேதான்வயமாம். அஃதும் மிகைபடலாற் றள்ளப்பெறும்; மற்றோ நொய்திற் கோடலானே முயல்வின்கண்ணே யாற்றற்கவர்ச்சியாம். முயல்வு சைத்திராதிகளின்பா லடையா யிலங்கும். வினைமுதல் விளம்பப் பெறுமையின் சைத்தி

ராதிபதத்தின்பின் மூன்றும் வேற்றுமை வேண்டற்பாலதாமெனா விளம்பற்க. வினை முதற் சங்கையை விளம்பலே ஆண்டுப் பிரயோஜக மாதலின், சங்கை சாற்றற் றகுதியும், செயப்படு பொருண்மை முதலியவை தொடாமை முதன் முடிபுப் பதநிலைநிற்றலாம். செயப்படு பொருண்மை முதலியவை யென்பதற்கு அயலடைத் தன்மைக் கருத்துவிடயத் தன்மை பொருளாம்; அதனாற் சைத்திரன்போல மைத்திரன் செல்கின்றான் என்பதாதியின் கண்ணே சைத்திரன்பாற் சங்கையின் றொடர்பின்றாம். யாண்டுச் செயப்படுபொருண் முதலிய வற்றே அடைத் தன்மையிற் கருத்தின்றாமோ, அதன் நீக்கப் பொருட்டு முதன் முடி யென்றதாம் அல்லது பகுதிப் பொருளினும் வேறாயதன் அடைத் தன்மை யன்மை முதற்றலப் பொருளாம்; அதனாற் சைத்திரனைப்போல மைத்திரன் செல்கின்றான் என்புழி சைத்திராதியின் நீக்கமாம். அற்பத்தை அடுகின்றான் என்பதாதியின்கண்ணே அற்ப முதலியவற்றை நீக்கப் பொருட்டாம் மற்றையதலம். அதற்கிரண்டாவது முடிபுப்பத நிலைநிற்றற்றன்மை யுண்மையின் நீக்கலாம் என்க. இங்ஙனம் வியாபாரத்தின்கண்ணும் ஆற்றலின்றாம்; மிகை படுதலின். தேர் நடக்கின்றது என்பதாதியின் கண்ணே வியாபாரத்தின் கண்ணேனும் ஆசிரயத் தன்மையின்கண்ணேனும் இலக்கணையாம். உணர்கின்றதென்ப தாதியின் கண்ணே ஆசிரயத்தன்மை

யின் கண்ணும், அழிகின்ற தென்பதாதியின்கண்ணே எதிரமறைத் தன்மையின்கண்ணும் நிரூட இலக்கணை யாம். உபமானத் தான் ஆற்றற் கவர்ச்சியாமாறு அறை யப் பெற்றது. இன்னணம் நிகண்டானும் ஆற்றற்கவர் ச்சியாம்; பாதகப்படிற் சிலபால் விடப்படும். எங்ஙனம் நீலாதிபதங்கட்கு நீல ரூபாதியின் மாட்டும், நீலாதி யடையடுத்ததின் மாட்டும் ஆற்றல் நிகண்டால் நிகழ்த் தப்பெற்றதாயினும் நொய்திற் கோடலான் நீலாதியின் பாலே ஆற்றலாம். நீலாதிரூப அடையடுத்ததின் மாட் டோ இலக்கணையா மென்க. இவ்வாறே உரியோன் மொழியானுமாம்; குயில் கோகிலபதவாச்சியம் என் பதாதி மொழியானே கோகிலாதி பதங்கட்குக் குயின் முதலிய வற்றே ஆற்றற் கவர்ச்சியாதலே போலும். இங்ஙனம் விவகாரத்தானுமாம்; எங்ங னம்:—ஏவும் முதியனாற் குடத்தைக்கொணர்வெனக் கூறப் பெறவே, அஃதைச் செவியேற்ற ஏவப்பட்ட முதியனாற் குடங்கொணரப் பெற்றது; அதைத் துணி ந்து அண்மையினின்ற பாலன் குடத்தைக் கொணரும் வடிவகாரியம், குடத்தைக் கொணர் என்னும் தொடர் மொழி தெரிவிப்பதாம் எனத் துணிவன். அதன் பின் குடத்தைக் கொடுசெல், ஆவைக் கொணர் என்பதாதி யின்கண்ணே நாக்கலாக்கலாற் குட முதலிய பதங் கட்குக் காரியந் தொடர்ந்த குடமுதலியவற்றே ஆற் றலைக் கவர்வன். இன்னணமாகவே பூதலத்தே நீலக் குடம் என்பது முதலிய தொடர்மொழியால் ஓசை

யுணர்வாகாதாம்; காரியந்தொடர்ந்த குட முதலிய வற்றின் உணர்ச்சியில் ஆற்றல் துணியப் பெறுதலின் காரியத் தன்மையுணர்வின் பொருட்டோ வியங்கோ ளாதிகட் காற்றலுண்மையின் அஃதின்மையின் ஓசை யுணர்வின்று மென்பர் சிலர். அஃதெள்ளற் பாதலாம்; முதலிற் காரியந்தொடர்ந்த குட முதலிய வற்றே ஆற் றற்றுணிபுறினும் எளிதிற் கோடலானே பின்னதன் விடுகைதகுதியதாதலின்; இதனானே சைத்திர மைந் தனுனக் குதித்தனன், நின்கன்னி கருப்பூண்டாள் என்பதாதியின் கண் முகமகிழ்ச்சி வாட்டங்களான் இன்ப துன்பங்களை யனுமித்து அக்காரணத்தன்மை யானே எஞ்சியதாய்ச் சாத்தவுணர் வைத்துணிந்து அவ்வேதுவானே அச்சத்தத்தைத் துணிவன், அங் ஙனமாகவே பிறழ்ச்சியாற் காரியத்தொடர்பில் ஆற் றலின்றும். ஆண்டவனைக் காணுதி என்பதாதி அய ற்சொல் வருவிக்க லாகாதாம், அளவை யின்மையின், சைத்திர மைந்தனுனக்குண்டானான் மரித்தான் என் பதாதியின் கண்ணே அஃதின்மையினானும் என்க. இங்ஙனமாகவே எளிதிற்கோடலாற் றொடர்புக் குட த்தினும் ஆற்றலைவிடுத்துக் குடபதத்திற்குக் குட மா த்திரையின் கண்ணே ஆற்றலைத் துணிவன். இங்ங னம் வாக்கிய சேடத்தானும் ஆற்றற் கவர்ச்சியாம். எங்ஙனம்:—யவமயமாயசரு (யாக அன்னம்) இருக் கின்றது. என்பதன் கண்ணே யவத்திற்கு நீள்

வாலுடைப் பொருட் சிறப்பின் கண்ணே ஆரியரின் பிரயோகமாம் கங்கு வென்னும் பொருளின் கண்ணே மிலேச்சரின் பிரயோகமாம். ஆண்டே, அயலோடதி கள் வாடுகின்றன இவைகளிப்புடன் கொளுத்து நிற்கின்றன என்னும் வாக்கிய சேடத்தான் நீள்வாலுடைய தன் மாட்டாற்றல் துணியப்பெறும்கங்குவின்கண்ணே ஆற்றன் மயலாற் பிரயோகமாம் பலவாற்றற் கற்பனை யின் கண்ணே அரிதிற் கோடலுண்மையின். அரி முதலிய சொற்களிலோ அடக்க முடியாமையின் ஆற்றற் பல கற்பிக்கப் பெறும். இவ்வாறே விவரணத்தானும் ஆற்றற் கவர்ச்சியாம். விவரணமோ, அதனுைப்பாய பொருளுடையயற்பதத்தான் அதன் பொருளறைதலாம். எங்ஙனம்;—கடமிருக்கின்றது என்பதற்குக் கலசமிருக்கின்றது என்பதனுன் விவரணஞ் செய்தலின் கடபதத்திற்குக் கலசத்தின் கண்ணே ஆற்றற் கவர்ச்சியாம். இங்ஙனம் அடுகின்முன் என்பதற்கு அடுதலைச் செய்கின்முன் என்பதனுன் விவரணஞ் செய்தலின்விகுதிக்கு முயற்சிப் பொருளுடைமை கற்பிக்கப் பெறும். இவ்விதமே வெளிப்படைப்பத அண்மையானும் ஆற்றற் கவர்ச்சியாம்: எங்ஙனம்:—ஈண்டுமணமுடைமாமரத்தே மதுரமாகக் கோகிலங் கூவுகின்றது, என்பதாதியின் கண்ணே கோகில பதத்திற்குக் குயிலின் கண்ணே ஆற்றற் கவர்ச்சியா மென்க.

ஆண்டுப் பொதுமையின் கண்ணே ஆற்றல், வியத்தியின் கண்ணே இன்றாம், பிறழ்வுறுதலின் முடிபுறுமையினானும் என்க. வியத்தியை யொழிந்தோ பொதுமைபுலப்படல் அசம்பவ மாதலின் வியத்திக்கும் புலப்பாடுண் டென்பர் சிலர்; அற்றன்றாம், சத்தியை யொழிந்து வியத்தி விளங்க வேலாமையின். வியத்தியின் கண்ணிலக்கணை யென்பது மின்றாம்; பொருந்தாமைப் புலப்பாடு இன்றியும் வியத்தி யுணரப்படுதலின். வியத்தி சத்தியின்கண் முடிவுறுமை யின்றாம், எல்லா வியத்திகளின் மாட்டும் ஓரே ஆற்றற் குடன்பாடுண்மையின். தொடர்பின்றென்பது மின்றாம், ஆத்தன்மை முதலியவற்றிற்கே தொடர்புடைமை யுண்மையின். மேலும், ஆ, சக்கியம் என ஆற்றற் கவர்ச்சியுண்டாயவழி வியத்தியி லாற்றலாம். ஆத்தன்மை சக்கியம் என ஆற்றற் கவர்ச்சியாய வழியோ ஆத்தன்மையை யுடைத்தாய சொற்பொரு ணினைவும் சொல்லுணர்ச்சியும் உண்டாகாதாம். ஒப்பாய அடையுடைமையானே ஆற்றலுணர்ச்சிக்குச் சொற்பொருணினைவு சொல்லுணர்ச்சிப் பொருட்டு ஹேதுத் தன்மை யுண்மையின். மேலும், ஆத்தன்மையி லாற்றலாயின் ஆத்தன்மைத் தன்மையன்றோ சக்கியத் தன்மையை வரைந்து கொள்வதா யறையவேண்டும்; ஆத்தன்மைத் தன்மையோ ஆவினயற் கண்ண சமவேதத் தன்மையோடுற்ற அகில ஆச்சமவேதத் தன்மையாம். அவ்வாறு

கவே, ஆவியத்திகட்குச் சக்கியத்தன்மை யவரைந்து கொள்வதி னுட்புகுத்தலானுனக்கே யரிதிற் கோட லாம். ஆதலின், அவ்வப் பொதுமையாகிருதி யடை யடுத்த அவ்வவ்வியத்தி போதம் பொருந்தாமையினு னே கற்பிக்கப்பட்ட ஆற்றல், பொதுமையாகிருதி யடை யடுத்த வியத்தியின்மாட்டே இளைப்பாறுகின்றதென்ப தாம். ஆற்றலையுடையதுபதம், அதுவும் நால்வகையாம், சிலபால் யௌகிகம், சிலபால்ரூடம், சிலபால் யோகரூ டம், சிலபால் யௌகிகரூடம். அங்ஙனமன்றே:-யாண் டவயவப்பொருளே யறியப்பெறுமோ அது யௌகிக மாம், பாசகாதி பதம்போலும்; யாண்டு அவயவ ஆற்ற லையவா வாமற்சமுதாய ஆற்றன்மாத்திரையானே அறி யப்பெறுமோ அது ரூடமாம், கோமண்டலாதி பதம் போலும்; யாண்டு அவயவ ஆற்றல் விடயத்தே சமு தாய ஆற்றலும் ஆமோ அதுயோகரூடமாம், பங்க ஜாதி பதம்போலும்; அங்ஙனமன்றே:—பங்கஜபதம் அவயவ ஆற்றலானே பங்கப் பிறப்புக்கருத்தா வடிவப் பொருளை யுணர்த்தும், சமுதாய ஆற்றலானே பதுமத் தன்மை வடிவத்தானே பதுமத்தை யுணர்த்தும். கே வல அவயவ ஆற்றலானேகுமுதத்தே பிரயோகமா மெனப் பேசற்க; ரூடி ஞானத்திற்குக் கேவல யௌ கிகப்பொருண் ஞானத்தே தடைத்தன்மை யுண்மை யின் என்பர் முதியர். உண்மையாயோ சமுதாய ஆற் றல் நிலைபெற்ற பதுமத்தே அவயவப்பொருளாய பங்

கப் பிறப்புக் கருத்தாவிற் கன்னுவயமாம், சாங்கித்தி யத்தான். யாண்டுரூடிப் பொருட்குப்பாதம் புலப்படலாமோ ஆண்டு இலக்கணையானே குமுதாதிகளின் போதமாம். யாண்டுக் குமுதத்தன்மை வடிவத்தானே போதத்தே கருத்தின்றுமோ, பதுமத் தன்மைக்குப் பாதமாமோ ஆண்டவயவ ஆற்றன் மாத்திரையானே நிர்வாகமா மென்பர். யாண்டுத் தலத்தாமரை முதலிய வற்றே அவயவப்பொருட் பாதமாமோ ஆண்டுச் சமுதாய ஆற்றலானே பதுமத்தன்மை வடிவத்தானே போதமாம். தலபங்கஜம் வேறு ஜாதியதேயாயின் இலக்கணையானே யென்க. யாண்டு யௌகிகப்பொருள் ரூடிப் பொருட்கட்குச் சுதந்திரமாகவே போதமாமோ அது யௌகிக ரூடமாம்; உத்பிதாதி பதம்போலும். ஆண்டே உற்பேதன கருத்தாவாய தருக்கொடி யாதியும் உணரப்பெறும், யாக விசேடமுமா மென்ப.

கங்கையிற் கோஷம் என்பதாதியின்கண், கங்கைச்சொற்குச் சக்கியப் பொருளாய பிரவாஹ வடிவத்தே கோஷத்தின் சேர்க்கை பொருந்தாமையெனும் கருத்துப் பொருந்தாமையேனும் யாண்டு புலப்படுகின்றதோ ஆண்டு இலக்கணையானே தீரத்தின் போதமாமென்ப, அஃதும் சக்கிய சம்பந்த வடிவத்ததாம். அங்ஙனமன்றே —பிரவாஹரூப சக்கியப்பொருட் சம்பந்தம் தீரத்தே கவரப்பெறுதலின் தீரத்தின் நினை

வாம்; அதனாற் சொல்லுணர்வாம். ஆனால், சேர்க்கை பொருந்தாமை இலக்கணை விரையாமேலாயினோ 'தண்டம் புகுத்துக' என்பதன் கண்ணே இலக்கணையாகா தொழியும், தண்டங்களிற் புகுத்தற் சேர்க்கை பொருந்தாமை யின்மையின். அதனால் தண்டம் புகுத்தின் உண்ணற் கருத்தொவ்வாமையின் தண்டந் தரித்தவர்பாலிலக்கணை. இங்ஙனம், காகங்களினின்றும் தயிர் காப்பாற்றப்படுக என்பதாதியில் காகச்சொற்குத் தயிரைக்கெடுப்பதன் கண்ணே இலக்கணை, எல்லாவற்றினின்றும் தயிரைக் காப்பாற்றல் கருத்தின் விடயமாதலின். இங்ஙன் கவிகையாளர் செல்கின்றனர் என்பதாதியின் கண்ணே கவிகைச்சொற்கு ஒன்றுகூடிச் செல்லுந்தன்மைக் கண்ணிலக்கணை. இஃதே விடாத இலக்கணை யென இயம்பப்பெறும். ஒன்றுகூடிச் செல்லுந்தன்மை வடிவத்தானே கவிகையாளர் அவரினயலார் போதமாதலின். சேர்க்கை கூடாமை இலக்கணை விரையாமேலாயினோ சிலபாற் கங்கைச்சொற்குத் தீரத்தே, சிலபாற் கோஷச்சொற்குக் கயன்முதலியவற்றே இலக்கணையென்னும் நியமம் ஆகாதாம். இஃதோ உணரற்பாலதாம்:-சக்கியப்பொருளொற்றுமை கரைத்தன்மை வடிவத்தானே கவரப்பெறின் கரைத் தன்மையானே கரையுணர்ச்சியாம்; கங்கைக் கரைத்தன்மை வடிவத்தானே கவர்ப்பெறினோ, அவ்வடிவத்தானே நினைவாம். அதனானே இலக்கியத் தன்மையை வரைந்து கொள்வ

தன் கண்ணே இலக்கணையின்றும், அதனடை யுடையறிவிற்கு ஆண்டிலக்கணையிலாமலும் அமைதலின்; ஆனால், இம்முறையானே சக்கியத் தன்மையை வரைந்து கொள்வதன்கண்ணும் ஆற்றல் வேண்டாம், அதனடையுடைச் சக்கியப்பொருணினைவின் பொருட்டுத்தற் சொற் காற்றல் என்பது இனிதியம்ப ஏலுமாதலின் எனப் பகுத்துணரப் பாற்றும். யாண்டுச் சக்கியப்பொருட்குப் பரம்பரைச் சம்பந்தரூப இலக்கணையோ, அஃதிலக்கித விலக்கணையென வியம்பப்பெறும்; இருரேபாதிபதத்தே போலும், ரேபமிரண்டன் ஒற்றுமை பிரமர பதத்தே யறியப்பெறலாகும், பிரமரபதத்தின் ஒற்றுமையோ பிரமரத்தே யறியப்பெறலாகும், எனஆண்டிலக்கித இலக்கணையாம்; ஆனால் இலக்கணை யுடைச் சொல் சொல்லுணர்வைப் பயப்பதன்றும், இலக்கணையாலாம் பொருளின் சொல்லுணர்வின் கண்ணேவேறு சொல் லேதுவாம்; ஆற்றலிலக்கணையுள் ளொன்றனொற்றுமையானே அயற்சொற் பொருளோடு சேர்புற்றதற் சக்கியப்பொருட் சொல்லுணர்ச்சிப் பொருட்டுச் சொற்கட்கு ஆற்றல் துணியப் பெற்றிருத்தலின்; தொடர் மொழியின் கண்ணே ஆற்றலின்மையின் சக்கிய ஒற்றுமைவடிவ இலக்கணையு மின்றுமென்றறிக. யாண்டுக் கம்பீரமாய யாற்றின் கண்ணே கோஷம்எனக்கூறப் பெறுமோ ஆண்டு, யாறென் சொற்கு யாற்றின் கரைக்கண்ணிலக்கணையாம். கம்பீரச்சொற் பொருட்கு

யாற்ரேடு வேற்றுமையின்றிச் சேர்க்கையாம். சிலபா லேக தேசச் சேர்க்கைக்கும் உடன்பாடுண்மையின். ஆங்கேகதேசச் சேர்க்கையும் உடன்பாடிலதே லாமா யின் யாறென் சொற்குக் கம்பீர யாற்றின்கரையி லில க்கணையாம், கம்பீரச்சொல் கருத்தைக் கவர்வதா கும். அன்மொழித் தொகைக்கண்ணு மிவ்வாறேயாம்:- ஆண்டோ, சித்திரக்கோச்சொன் முதலியவற்றே ஏக தேசச் சேர்க்கையுடன்பாடாமேலாயின்கோச் சொற்கு கோச்சுவாமியின் கண்ணிலக்கணையாம், ஏகதேசச் சேர் க்கை உடன்பாடின்று மேலாயின் கோச்சொற்குச் சித் திரக்கோச் சுவாமியின் கண்ணிலக்கணையும், சித்திரச் சொல்கருத்தைக் கவர்வதுமாகும். இவ்வாறே, ஏறிய வானரதரு என்பதன்கண்ணே வாநரச்சொற்கு வாநர மேறுங் கருமத்தே இலக்கணையாம், ஏறியசொல்லோ கருத்தைக் கவ..வதாகும். இவ்வாறே பிறவிடத்துங் கொள்க. வேற்றுமைத்தொகைக்கண்ணே முற்சொல்லி லிலக்கணையாம். அங்ஙனமன்றே:-அரசசேவகன் முத லிய சொற்கண் அரசச்சொற்பொருளோடு சேவகன் முதலிய சொற்பொருட்கு நேராய்ச்சேர்க்கையின்றும், நிபாதங்கட் கயலாய நாமார்த்தங்கட்குப் பேதமாகச் சேர்க்கை யுணர்வு அசித்தமாதலின்; மாறாயினே அர சன் சேவகன் என்பதன்கண்ணும் அவ்வாறுசேர்க்கை யுணர்வாதல் வேண்டும். குடம் அன்று ஆடை என்பதா தியின் கண்ணும் குடமாடைகளோடு நஞ்ஞிற்கு நேரா

கவே சேர்க்கை யுண்மையின் நிபாதத்தின் வேருயவெ ன்றதாம். நீலம் குடம் என்பதர்தியின் கண்ணே நாமா ர்த்தங்கட்கு வேற்றுமையின்றிய வொற்றுமையானே சேர்க்கை யுண்மையின் பேதமாக வென்றதா மென்க. அரசசேவகன் என்பதாதியில் உலோப வேற்றுமையின் நினைவு கற்பிக்கப்பெறும் எனக்கழறற்க. நினையாதவே ற்றுமைக்கும் அதனாற் போதமெழுதலின். ஆகையால் அரசபதாதிகளில் அரசசம்பந்தியின் கண்ணே இலக்க ணையாம். அதற்கும் சேவகனோடு அபேதச் சேர்க்கை யாம். உம்மைத் தொகையின்கண்ணே தவகதிர்க்களை வெட்டுக என்பதாதியின் கண்ணே தவ என்பதும் கதிர் என்பதும் வேற்றுமைப்பொருள் இருமை வகை யானே அறியப்பெறும்; ஆண்டிலக்கணையின்ரும். கூடி யிருக்குந் தன்மையின் பற்றுக்கோட்டின்கண் ணிலக்க ணையா மென வியம்பற்க, கூடியிருக்குந் தன்மை யின்றியதற்கும் உம்மைத்தொகை காண வருதலின். ஒருதொழிலொன்றி யிருக்குந்தன்மை வடிவசாகித்திய மிருக்கின்றதென இயம்பற்க; தொழில் வேற்றுமைக் கண்ணும் தவகதிர்க்களைக்காண்க வெட்டுக என்பதாதி காணப் பெறுதலினானும், சாகித்தியத்திற் கனுபவ மின்மையினானுமென்க. அதனானே, 'சாயுச்சியம்விழை ந்த அரசபுரோகிதர்வேட்க' என்பதன்கண்ணே இலக் கணை யின்மையின் உம்மைத் தொகை பற்றல்கூடும், ஆதலின் சாகித்தியம் பொருளன்றென்றுணர்க; மற்

ரே உண்மையாய வேற்றுமை யாண்டோ ஆண்டே உம்மைத் தொகையாம். நீலகுடங்கட்கு வேற்றுமை யின் றென்பதாதியின் கண்ணே எவ்வாறு மெனின் றற்க; ஆண்டு நீலச்சொற்கு நீலத்தன்மையின்கண்ணே, குட ச்சொற்குக் குடத்தன்மையின் கண்ணே இலக்கணை. வேற்றுமையின் றென்பதற்கோ, ஆசிரயாபேத மென் பது பொருளாகலின். சமாஹாரஉம்மைத்தொகையின் கண்ணோ, சமாஹாரமும் அனுபவிக்கப்பெறுகின்றதெ னஅறையின் நாகநகுல மென்பதாதியின் கண்ணே பர பதத்தே நாக நகுல சமாஹாரத்தின்கண் ணிலக்கணை யாம்; பூர்வபதமோ கருத்தைக்கவர்வதாகும். பேரிமிரு தங்கம் முழக்குக என்பதன்கண்ணே யாங்ஙனம் சமா ஹாரத்திற்குச் சேர்க்கையாம், அபேக்ஷாபுத்தி விசே ஷவடிவமாய அதற்கு முழக்குதல் முடியாமையின் என மொழியற்க; பரம்பரைச் சம்பந்தத்தானே அதன் சேர்க்கை கூடலின். பஞ்சமூலி யென்பதாதியின் கண் ணும் இவ்வாறேயாம். மற்றையரோ, நாகநகுலம் என் பதாதியின் கண்ணே நாகமும் நகுலமும் உணரப்படுகி ன்றன, தனித்தனி ஏகத்தன்மை இயைவதாம்; சமா ஹார சம்ஞ்ஞையோ யாண்டேகத் தன்மையும் நபும்ச கத்தன்மையும் 'உம்மையும் பிராணி தூர்ய' என்பதாதி சூத்திரத்தானேகூறப்பெற்றனவோ ஆண்டேயாம்,பிற விடத்தோ ஏகவசனம் நலமுடைய தல்லவாம் என்பர். பிதுர்க்கள்; சுவசுர்க்கள், என்பதாதியின்கண்ணே பிதிர்

பதத்தே பெற்ற தாய் தந்தையர்பாலும், சுவசுர்பதத்தே மனைவியைப்பெற்ற தாய் தந்தையர்பாலும் இலக்கணையாம். இவ்வாறே பிறவிடத்தும். குடங்கள் என்பதாதியின்கண்ணே இலக்கணை யின்றும், குடத்தன்மை வடிவத்தானே பலகுடவுபத்திதி சம்பவித்தலின். பண்புத்தொகையின் கண்ணே, கருங்குவளை என்பதாதியில் வேற்றுமையற்ற வொற்றுமையானே கருமைப்பதப்பொருள் குவளைப்பதப்பொருளின்கண் சிறப்பாம்; ஆண்டோ இலக்கணையின்றும், அதனானே 'நிடாதத்தபதியை வேட்பிக்குக' என்பதன் கண்ணே வேற்றுமைத்தொகையின்றும், இலக்கணையடைவேயதலின்; மற்றே, பண்புத்தொகையாம், இலக்கணை யின்மையின் என்க. சங்கரச்சாதி விசேடமாய வேடனுக்கு வேதத்தே யதிகாரமின்மையின் வேட்பித்தல் அசம்பவமாமென அறையற்க; வேடனுக்கு வித்தையோடினிது கூடல் அதனானே கற்பிக்கப்படுதலின். எளிதிற் கோடலானே முக்கியப்பொருட்குச் சேர்க்கையாகவே அதன் கூடாமையான் கற்பனை செய்தற்குப் பலமுக அரிதிற் கோடலுண்மையானே தோடத்தன்மை யின்மையினென்றுணர்க. உபகும்பம், அர்த்தபிப்பலி, என்பதாதியின்கண்ணே பரபதத்தே அதன் சம்பந்தியின்கண்ணிலக்கணையாம், பூர்வபதப்பொருட் பிரதானத் தன்மையானே சேர்க்கை யுணர்ச்சியாம். இம்முறையே தொகையின் மாட்டு யாண்டும் சக்தியின்றும்,

பத சக்தியினுனே நிர்வாக மாதலி. னென்பதாம்.

மதித்த வண்மை தகுதி யவாய்நிலை
கதித்தகா ரணமாகக் கருத்துணர்
வுதித்த தென்கவோண் சந்நிதி யுண்மையோ
பதத்தினண்மையதேன்று பகர்வரால். 145

அண்மையுணர்வும், தகுதியுணர்வும், அவாய் நிலையுணர்வும், கருத்துணர்வும், ஓசையுணர்ச்சியிற் காரணமாம். அவற்றுள் அண்மைப்பொருளுணர்த்தப்படுகின்றது;—சந்நிதி யுண்மையோ என. எப்பொருட் கெப்பொருளோடும் சேர்க்கையவாவோ அவற்றின் தடையற்ற நிலைபேறு காரணமாம்; அதனுனே, மலையயிலப்பட்டது அழலுடைத்து தேவதத்தனுல்" என்பதாதியில் ஓசையுணர்வாகாதாம். "நீலம் குடம் பொருள் படம்" என்பதாதியின்கண்ணே அண்மை யயலான் ஓசை யுணர்வாம் அண்மைமயலான் ஓசை மயலின்றேனும் கோறின்றும். அற்றேல் யாண்டு 'கவிகையாளன் குண்டலத்தன், வத்திரத்தன், தேவதத்தன்.' எனக் கூறின், அதன்கண்ணே பிறபதநினைவானே முற்பத நினைவினழிவாதலின் தடையின்றி அவ்வப்பத நினைவின் சம்பவமாமாலோ வெனின்? அற்றன்றும், தனித் தனிபத அனுபவத்தா லுண்டாய சமக்காரங்களான் அத்துணைப் பதத்தை விடயமாயுடை ஈற்று நினைவிற்குத் தடையின்றியுற்பத்திகூடலி னென்க. நானு சம்பந்தங்களானே ஒருகாட்சிக்கே போலும் நானுசமக்காரங்

களானே ஒருநினைவின் உற்பத்தியாதலும் கூடும். அத்துணைப்பதச் சமக்கார சகிதஈற்று வர்ணவுணர்வு உற்போதகமாதலின்; மாறுயினே, நானுவர்ணங்களால் ஒரு பதநினைவாதல் யாங்ஙனம்? ஆனால், அத்துணைப் பதார்த்தங்களின் நினைவானே ஏககாலத்தே 'களப்புறு நியாயத்தான்' அத்துணைப் பதார்த்தங்களின் கிரியா கர்மபாவத்தானே அன்வயபோதரூப சாப்தபோதமா மென்பர் சிலர். "விண்கிழத் தருணக் குழவிப்புறு, வெண்களத்தொரு போழ்தினில் வீழ்தல்போல், எண்களற்ற பதப்பொருளியாவைவும், வண்கலந்தொரு போழ்தில் வயங்குமால்" மற்றையரோ, "உரையெவ்வெப்பத மொன்றொன்றவாய் நிலையோடும், நிரைதருதி சந்நிதியொடு நிகழ்ந்து கூடிடுமோ, கரையவ்வப் பதத்தோடு தான் கலந்து தன்பொருளும், பெரியவப்பதந் தன்னிலுறுயவே பெறுமால்" அவ்வாறுகவே கண்டத்தொடர்மொழிப் பொருளுணர்வின்பின் னவ்வாறே பதப்பொருணினைவால் பெருந்தொடர் மொழிப்பொருளுணர்வாம் எனவுமியம்புவர். இதனுனே வருணத்தா லினிதுவிளக்கப் பெறுவதாய பதஸ்போடமும் நீக்கப்பெற்றதாம். அவ்வவ்வருண சமக்காரத்தோடுற்ற ஈற்றுவருணப்பற்றலானே அதன் வியஞ்சகத்தானே உற்பத்தியாதலினென்க இஃதுணரத் தக்கதாம், யாண்டுவாயில் என வியம்பப் பெற்றதோ ஆண்டுமூடுகவென்னும் பதத்தி னுணர்வானே உணர்ச்சியாம், மூடன்

முதலிய வடிவப்பொரு ளுணர்வாலின்றும்;பதத்தாலு ளதாய அப்பதப்பொருணினைவிற்கு அச்சாத்த வுணர் வில் ஹேதுத் தன்மையுண்மையின்; மேலும் பயனிலே செயப்படுபொருட் பதங்கட்கு அவ்வவ்வடிவத்தானே அவாவொடு நிகழுந்தன்மை யுண்மையின், அதனல் பய னிலேப்பதமின்றி யாங்ஙனம் சாத்தவுணர்வாம் அவ்வா றே அலர்கட்கு என்பதாதியில் இச்சை செய்கின்றனன் என்னும் பதவருகையின்றி நான்காம் வேற்றுமை கூடாமையின் பதவருகையின்றியமையாததாம்.

## தகுதிசாற்றப் பெறுகின்றது:—

பதப்போருளி லாண்டத் தன்மை தகுதியாய்ப் பகர்வக
ரிதப்படு பதமேஃதின்றி யேதனனு யாவண்
கதைப்படலிலே யஃதையா காங்க்ஷையாய்க் கணிநீ
பதப்போலிவலன் விழைவதே கருத்தெனப் படுமே. 146

ஒருபதப்பொருளில் மறுபதப்பொரு ளொற்று மை தகுதியென்க. அதனுணர்வின்றியிலே "தீயாற் றெளிக்கின்றனன்" என்பதாதியின் கண்ணே சாத்த வுணர்ச்சி யின்றும் அற்றேல் இத்தகுதியி னுணர்ச்சி சாத்த போதத்தின் முன்னர்யாண்டும் சம்பவியாதாம் தொடர்மொழிப் பொருட் கபூர்வத்தன்மை யுண்மை யின் எனின்? அற்றன்று, அவ்வப்பதப்பொரு ணினை வுண்டாயவழி சிலபாலேய வடிவமாயும் சிலபாற்றுணிபு

வடிவமாயும் தகுதியினுணர்வு சம்பவித்தலி னென்க. புதியரோ தகுதியினுணர்வு சாத்தவுணர்வின் கண்ணே காரணமன்றும் தீயாற் றெளிக்கின்றனன் என்பதாதி யின்கண்ணே தெளித்தலில் தீக்கரண முடைமையின் மை வடிவத்தகுதியின்மைத் துணிபானே தடையுண் மையின் சாத்த வுணர்வின்றும். அதனபாவத் துணி பிற்கு இலௌகிக சந்நிகர்ஷத்தா லுண்டாகாததும் தோஷ விசேஷத்தா லுண்டாகாததும் ஆகியஞான மாத்திரத்தே தடைத்தன்மை யுண்மையின் சாத்த வுணர்வின் பொருட்டும் தடைத்தகைமை துணிபப் பெறும். தகுதியினுணர்வுதாமதிக்கின்று சாத்தவுணர் வுதாமதித்தல் அசித்தமாமெனஅறைகின்றனர். ஆகா ங்க்ஷை யறையப் பெறுகின்றது இதப்படு பதமேன.

௪. ப்பதமின்றி எப்பதத்தின் சேர்க்கை யனுப விக்கவராதோ அப்பதத்தோடு அதற்கவாய் நிலையென் பதாம். கிரியாபதமின்றிக் காரகபதம் சேர்க்கை யுணர் வைச் செய்வதில்லை யென அதனேடு அதற்கவாய் நிலையாம். உண்மையாயோ கிரியாகாரக பதங்களின் சந்நிதானம் அல்லமையானே பயன்பட்டதாகும்; ஆனல் குடச்செயப்படு பொருண்மைப் போதப் பொருட்டுக் குட பதப்பின் இரண்டாம் வேற்றுமை யவாய்நிலையுண ர்வு காரணமாம்; அதனனேகுடம் செயப்படுபொருண் மை கொணர்தல் முயல்வு என்பன வாதியிற் சாத்த

வுணர் வின்றும். "இவன் வருகின்றான் மைந்தன் அர சனது ஆள் விலக்கப்படுக" என்பதாதியின் கண்ணே மைந்தனோடு அரசபதத்திற்குக் கருத்தின் கவர்ச்சியா னே அதனோடே சேர்க்கை யுணர்வாம்; புருடனோடு கருத்துக் கவரப்படினோ அதனோடே சேர்க்கை யுணர் வுண்டாதலேசாலும். கருத்துநிகழ்த்த பெறுகின்றது:- பதப்போலிவலன் என.

கருத்தினுணர்வு காரணமன்றாயின் "சைந்தவத் தைக்கொணு" என்புழிச்சிலபால் அசுவத்தின் சில பால் இலவணத்தின் போதமுண்டாக லாகாதாம். கரு த்தைக்கவரும் பிரகாணுதிகட்கே சாத்தவுணர்வின்கட் காரணத்தன்மை யுளதாகுகவென வுரையற்க, அவற்றி ற்குத்தொடர் பின்மையின். கருத்தினுணர்வை யுண்டா க்குந் தன்மையானே அவற்றிற்குத் தொடர் புண்டாய வழி கருத்தினுணர்வே எளிதிற் கோடலானே காரண மாகுக. இவ்வாறுகவே வேதத் தலத்தினும் கருத்தினு ணர்வின் பொருட்டுக் கடவுள் கற்பிக்கப் படுகின்றார். ஓதிவைப்போன்கருத்தினுணர்வு காரணமெனவுரை யற்க; சிருட்டிதுயின் முதலில் ஓதிவைப்போ னில்லா மையின். பிரளயமே யின்மையின் சிருட்டியின் முதல் என்பது எங்ஙனியலுமென வியம்பற்க. பிரளயமுள தெனப் பெருமறை கூறலின். இவ்வாறுகவே, கிளியி ன்மொழியின் கண்ணும் கடவுளினது கருத்தினுணர்வு

காரணமாம். பயனற்ற முயல்வாக்குங் கிளிமொழியி லோ கற்கவைப்போனது கருத்தினுணர்வே காரண மாம் மற்றையரோ, பல்பொருள் பயப்பதாதியிற் சில பாலே கருத்தினுணர்வு காரணமாகும்; ஆகவே, கிளி மொழியில் கருத்துணர் வின்றியே சாத்தவுணர்வாம். வேதத்தோ அநாதி யாராய்ச்சியா லினிது சோதி க்கப்பட்ட தருக்கங்களானே பொருணிச்சயமாகு மென்பர்.

## சப்தகண்டம் முற்றும்

---

## ஸ்மிருதியின் வகை.

முன்னர் அனுபவ ஸ்மரண வேற்றுமையானே மதியிரு வகையென மலரப்பட்டது, அதன்கண்ணே அனுபவ வகை காட்டப்பட்டது. எளிதி னுணரலாகு மென நினைவு காட்டப்படவில்லை; அதன் கண்ணே முன்னனுபவங் காரணமாம். இதிற் சிலர், அனுபவத் தன்மையானே காரணத் தன்மையின்றும்; மற்றோ ஞானத்தன்மையானே; அன்றுயிறோ,(ஒருமுறை யுண் டாய அனுபவத்தலத்தே) நினைவின்பின் நினைவுண்டாக லாகாது, ஒப்பான வகையாய நினைவானே முன் சமஸ் காரம் அழிந்துபோதலின், எம்மதத்தோ அந்நினை வானே வேறு சமுக்கார வாயிலாய் வேறு நினைவு ண்டா மென்பர். அஃதொவ்வாதாம், யாண்டுச் சமுகா

லம் பனத்தின் பின் கடபடாதிகள் நினைவு முறை
யா யுண்டாகின்றதோ சகல விடயத்தை யுடை நினை
வுண்டாக வில்லையோ, ஆண்டுப் பலத்திற்குச் சமுக்கா
ரத்தை யழிக்குந் தன்மை யின்மையின் காலத்திற்கே
னும் நோய்க்கேனும் முடிபாய பயனுக்கேனும் சமுக்
காரத்தை யழிக்குந் தன்மை கூறல்வேண்டும், வேண்
டவே முறையாயாம் நினைவின் கூடாமையின்றுமென்க.
மீண்டு மீண்டுண்டாம் நினைவால் அதிதிடமாய சமுக்
காரக் கூடாமையாமென வறையற்க; விரைவில்
வெளிக்கிளப்பன் முற்படுதலே தாட்டியப் பதப்பொரு
ளாகலின். ஒருபக்க நிறுவு முத்தியின்மையானே ஞான
த்தன்மையானும் உண்டாக்குந் தன்மையாகுக வென
வறையற்க; விசேட தருமத்தானே பிறழ்ச்சி யுணரப்
படாவிடின் சாமானிய தருமத்தானே வேறுறாற்
றுற் பெறப்படுதலுள்ளமையின்; மாறாயின் யாங்ஙனம்
தண்டத்திற்குச் சக்கரவாயிலாய்த் திரவியத் தன்மை
வடிவத்தானே காரணத் தன்மையின்றும். இடையி
லுள்ள நினைவுகளின் சமுக்காரத்தை யழிக்குந் தன்
மையினையத்தான் பிறழ்ச்சி யையமாமென உரையா
டற்க; அநந்த சமுக்கார, அதன் அழிவுகளைக் கற்பி
ப்பதைக் குறித்து நொய்திற் கோடலானே முடிபாய
நினைவிற்கே சமுக்காரத்தை யழிக்குந் தன்மைக் கற்ப
னையானே பிறழ்ச்சியையம் மின்மையின்.

ஸ்மிருதியின் வகைமுற்றும்.

## மநோ நிரூபணம்.

இஞ்ஞான்று முறையிற் கிடைத்த மனம் நிரூபிக்கப்படுகின்றது:—

இன்பமாதி யிவற்றினைக் காண்பதில்
மன்பெருங் கரணம் மனமாகுமா
லன்பஞானங்க ளீண்டொருங் காதலின்
றென்பதா லதற்கெய்து மணுமையே. (147)

இதனானே மனத்தின் மாட்டளவை காட்டியதாம். அங்ஙனமன்றேல்:—சுகக்காட்சி, கரணத்தோடு கூடியதாம், உண்டாகுங் காட்சித் தன்மை யுண்மையின், விழிபயந்த காட்சியேபோலும்; என்னு மனுமானத்தானே மனத்திற்குக் கரணத்தன்மைத் துணிபாம். அவ்வாறாயின் துக்காதிகளின் காட்சிக்கும் வேறு கரணங்களுண்டாக வேண்டுமென வறையற்க; எளிதிற் கோடலானே ஒன்றனுக்கே அத்தகைய சகல சாக்ஷாத்கார கரணமாகத் துணிபாம். இவ்வாறே சுகாதிகளின் அசமவாயி காரணமாகிய சையோகத்திற்குப் பற்றுக் கோடாக மனத்தின் றுணிபை யறிந்து கோடல் வேண்டும். ஆண்டு மனத்தின் அணுத்தன்மையில் அளவை கூறப்படுகின்றது. ஒருங்காதலின்றெனஞானங்கள், சாக்ஷுஷ இராசனாதிகள்; ஒருங்காதல், ஒருகாலுற்பன்னமாதல், இல்லை யென்ப தனுபவத்துணி

பாம். ஆண்டு, அறிபொறிகட்கு விடய வொற்றுமை யிருந்தபோதினும் எதனொற்றுமையானே ஒருபொறியாலுணர்வுண்டாகின்றதோ எதனொற்றுமையின்றி மற்றவற்றானே உணர்வுண்டாகாதோ அது மனமாம். அம்மனத்திற்கு விபுத்தன்மையேல் சந்நிதான மின்மை சம்பவியாதாம் என்பதனானே மனம் விபுவன்றாம். அஞ்ஞான்ற திட்ட விசேட உற்போதகத்தடையானே அவ்வுணர்வின் றடையாமென வறையற்க; அவ்வாறு யின் விழிமுதலியவற்றின் கற்பனையும் வீணாம். நீண்ட தேங்குழல் அயில்வதாதியில் பல்லுணர் வுறுபவர்க்கு யாங்ஙனம் ஓரேகாலத்திற் பலபொறி யுணர்ச்சியென்னற்க; மனம் மிகவு மிலகுவாதலின் வேகமாக அறிபொறி யொற்றுமை யுறுதலாற் பல வுணர்வுண்டாதலின். மரையிலை நூற்றின்பேதாதிபோல ஒரு காலத்துணர்வு மயலாமென்றுணர்க. மனத்திற்குச் சுருங்கி விரியும் பான்மை யுண்மையின் இரண்டி னடை விருக்குகவென வியம்பற்க; பல்லவயவ அதனழிவுகளைக் கற்பிப்பதில் அரிதிற்கோட லுண்மையின் எளிதிற்கோடலானே அவயவமற்ற அணுரூபமாய மனத்தையே கற்பித்தல் சாலும்.

மநோநிரூபணம் முற்றும்.

---

## குண நிரூபணம்.

பொருள் நிரூபிக்கப்பட்டுப் பண்பு நிரூபிக்கப்படும்:—

பொருளினி லுறைந்தே குணந்தொழி லிறந்து போவன குணங்களாவனவாம், உருவமு மிரதம் பரிசமும் மணமும் உறும்பரத்துவம பரத்வம், திரவமுநேய வேகமு மூர்த்தஞ் செறிவன வறமறமோசை, யருமதி யாதிபாவனை யயலிலமர்வ வென்றறிஞ ரோதுவரே. (148)

பண்புமைப் பொதுமையில் அளவையென்னெனின்? பொருள்தொழி லயலாய பொதுமை யுடையதன் கண்ணே யுளதாய காரணத்தகைமை, ஒரு தருமத்தானே வரையப்பெற்றதாம்,வரையப்பெறுத காரணத்தகைமை சம்பவியாமையின். உருவத்தன்மை முதலியவையேனும் சத்தையேனும் ஆண்டு வரைவதாகாதாம்; குறைவு மிகுதியாய தேயங்களிற் குலவலின். ஆகையால் இருபத்து நான்கன் கண்ணும் தொடர்வதாவதொன்றை யியம்பவேண்டும், அதுவே பண்புமையெனத் துணியப்பெறும். பொருளைப்பற்றி யிருத்தல் இலக்கணமன்றும்; தொழின் முதலியவற்றே அதிவியாப்தி வருதலின். எனினும் பொருண்மை வியாபகத்தன்மையை வரைந்து கொள்ளும் சத்தையினுமயலாய பொதுமை யுடைமை அதன் பொருளாம்: ஆகவே பண்புமை பொருண்மை வியாபகத்தன்மையை வரைந்து கொள்வதும், அஃதுடைமை பண்புகளை வரைந்து

ட்கும் உளதாமென்க. தொழின்மையேனும் பொருண்மையேனும் பொருண்மை வியாபகத் தன்மையை வரைந்து கொள்வதல்லவாம்; விண்முதலிய வற்றே பொருள் தொழில் இன்மையின். பொருண்மைத் தன்மையும் பொதுமைத் தன்மையும் பொதுமையல்லவா மென அவற்றின் நீக்கமாம். பண்புமையின்மை தொழின் முதலியவற்றும் உளதெனினும், பொதுமையுடைமையோடும் தொழிலினும் வேறுந்தகைமையோடும் உற்ற பண்புமை யின்மையுணர்க. பொதுமை முதலியவற்றிற்குப் பொதுமை யுடைமையின்றும்; தொழிலுக்குத் தொழிலினும் வேறுந் தன்மையின்றும், பொருட்கு பண்புமை யின்மையின்றும் என ஆண்டதி வியாப்தி யில்லை யென்க. தொழிலிறந்தென்றது வடிவத்தை வழங்கியதாமன்றி யிலக்கணமன்றும், விண்முதலிய வற்றே அதிவியாப்தி வருதலின். ஈண்டு வேகத்தானே நிலைபெறுத்து கையையும் குறிப்பாற்கொள்க. அமூர்த்தங்களி லிராவென்பதருத்தம். இலக்கணமோ அத்துணையானும் அன்னியான்னியத் தன்மையாம், இவ்வாறே மேலுங்கொள்க. மூர்த்தங்களி லிராதனவாம் என்பது பொருள்.

எண்ணது முதலியல் விபாகம்வரை யிரண்டன்
பண்ணுறுங் குணமாகுஞ் சையோக விபாகம்
எண்ணிருமை முன்னிருபிரு துக்துவமு தலாய்
நண்ணுறும் பலவினிலெனக் குணங்களை நாடே. (149)

மூர்த்தா மூர்த்த குணங்கள் என்பது பொருள். சையோக விபாக இருமை முதலியன இரண்டிலிருப்பனவாம் மும்மை நான்மை முதலனவோ மூன்று நான்கன் கண்ணே யிருப்பனவா மென்றுணர்க.

எஞ்சிடுங் குணங்களி யாவுமே கைகத்திருப்பவென்ப
நெஞ்சு முன்னுறு முறுவுரையோடு நேயந்தானு
யுஞ்சிடு திரவம்பாவ மோள்ளறமோ சையோடும் [டுமே.
விஞ்சுபாவனை யிவ்வெல்லாம் விசேடமாங் குணங்களா

உருவம், இரதம், மணம், ஊறு, ஒருமை, அளவு, ஒருவேற்றுமை, உயர்வு, தாழ்வு, மதி, இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு, முயற்சி, கனதை, நெகிழ்ச்சி, நேயம், சமுக்காரம், அறம், மறம், ஓசை, என்பனவாமென்றுணர்க.

மதி இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு, முயற்சி, என்பது பொருள். ஊறுவரை, உருவம், இரதம், மணம், ஊறு என்பனவாம்; திரவம், திரவத்தன்மை.

எண்ணேனு முதலத்தாழ்மை யீருக வியல்புறு திரவமுங் கனதை, பண்ணுறுவேகம் போதுக்குணமாகப் பகருவர் நெகிழ்ச்சி யோண்ணேயம், எண்ணேனு முதலத்தாழ்மையீருக வியைவனவிரு போறியுறுவ, ஒண்ணுறு முறுவரை யோலிபுறத்தி லோவ்வொரு போறிகவர்வனவே. (151)

எண், அளவு, வேற்றுமை, சையோகம், விபாகம், உயர்வு, தாழ்வு என்பனவாம். விழியானும் தோலானும் கவரத்தகுதி யுடைமையின் என்க. உருவ முதலியவற்றிற்கு விழி முதலியவற்றாற் கவரப்படுந் தன்மை யுண்மையி னென்றுணர்க.

கனதையதிட்டம் பாவனை தாங்கவரலாகா பொறியானே, வினவு விபுவின் விசேடகுணம் விரிகாரண மில்குணத்தானே. சனனமாகும் பாகஜமில் சனிமாறாறுவரை நேகிழ்ச்சி, கனதை யளவு நிலைபேறுத்தல் கடிதுநேயமொரு பிரிவே. (152)

மதி, இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு, முயல்கை, அறம், மறம், பாவனை, ஓசை, என்பனவாம். காரணகுணத்தானே காரியத்தே எக்குணங்கள் உளவாகின்றனவோ அவை காரணகுணபூர்வகங்களாகக் கழறப்பெறும் உருவமுதலியனவாம். மதிமுதலியனவோ அத்தகையனவலவாம், ஆன்மாதிகட்குக் காரணமின்மையின். பாகத்தாலுண்டாய உருவமுதலிய வற்றிற்குக் காரணகுண பூர்வகத்தன்மையின்மையின் அபாகஜங்கள் என்னப்பட்டன 'மாறுசனி' காரணகுணத்தா லுண்டாயவை, அவ்வாறே யொருமையு மெனவுணர்க.

ஒற்றுமை பிரிவுவேக மோண்டோழி லினிலுண்டாகும்
பற்றுமெய் வரையளவு பகரோரு பிருதக்பான்மை
மற்றேலி நேயமற்ற சமவாயி மாண்மை மேவும்
சிற்றுயர்ச் சிறந்தபண்பு சேறியுமானிமித்தத் தன்மை. 153

தொழிலாலுளதாந் தகைமை சாதருமியமன்றும்: குடமுதலியவற்றே அதிவியாப்தி வருதலினானும் சையோகஜ சையோகத்தே அவ்வியாப்தி வருதலினானும். எனினும் தொழிலா லுண்டாவதன் கண்ணே யிருக்கும் பண்புமை வியாப்பியப் பொதுமையுடைமை, யென்றுணர்க. இவ்வாறே பிறவிடத்தும் உய்த்துணர்க. (பரிசமீண்டு வெம்மை யின்மை கவரற்பாலது)ஒருபிருதக்பான்மை யென்பதன் கண்ணே பான்மையை யிருபாலும் சேர்க்கவே ஒருமை வேற்றுமை யெனக்கோட்கிடக்கும், வேற்றுமைப் பதத்தானே ஏகவேற்றுமைகூற விழைவாம். குட முதலியவற்றின் உருவவிரதமண மூறுகள் கபாலாதி யுருவவிரத மண மூறுகளினின்று முண்டாவனவாம். இவ்வாறே கபாலாதியளவு முதலியவற்றிற்குக் கடாதிஅளவு முதலியவற்றின் அசமவாயி காரணத்தன்மையாம். இங்ஙனமே ஓசைக்கும் இரண்டாவ தோசையைக் குறித்து அசமவாயி காரணத் தன்மையாம். இவ்விதமே நிலை பெறுத்துதல் ஏகவேற்றுமைகட்கு முணர்க, மதிமுதலிய வற்றிற்கு விருப்பு முதலிய வற்றின் நிமித்தத் தன்மையுண்மையின் என்பது கருத்தாம்,

வெம்மையுங் கனதைவேக நேகிழ்ச்சி யொற்றுமைவி
பாகந், தம்மிரண்டேதுத் தன்மை விபுவுடைத் தனிக்குண
ங்கள், அம்மவொற்றுமையதாதி யவ்யாப்ய விருத்தியாகும்,
நம்முரு விழிகொள்கட்கு நாடிடப் பொருணயக்கும். 154

அசமவாயி காரணத் தன்மையும் நிமித்த காரணத் தன்மையுமாம். அங்ஙனமன்றே:—வெம்மைப்பரிசம் வெம்மைப் பரிசத்தின் அசமவாயி காரணம் பாகஜத்தே நிமித்தம். குருத்தன்மை, குருத்தன்மை வீழ்ச்சிகட்கு அசமவாயி, அபிகாதமெனப் பெயரிய சையோகத்தே நிமித்தமாம் வேகம், வேக அசைவுகட்கு அசமவாயி, அபிகாதத்தே நிமித்தமாம் நெகிழ்ச்சி, நெகிழ்ச்சி யசைவுகட்கு அசமவாயியாம் சேர்ப்பதில் நிமித்தமாம். பேரிதண்ட சையோகம் சப்தத்தே நிமித்தமாம் பேரியாகாச சையோகத்தே அசமவாயியாம் மூங்கிற்றளமிரண்டன் விபாகம் சத்தத்தே நிமித்தமாம் மூங்கிற்றள ஆகாசவிபாகத்தே அசமவாயியாம். உருவத்தன்மைப் பொதுமையோ காட்சியாற் றுணியப்பெறும். உருவசப்தத்தைப் புலப்படுத்தும் தோற்றமில்லை யெனில்? இல்லாதொழிக உருவசப்தப் பிரயோகம், எனினும் நீலபீதாதிகளில் தொடர்ந்திலகும் பொதுமை விசேடம் அநுபவ சித்தமேயாம். உருவசப்தப் பிரயோக மிலதேனும் "நீலம் வர்ணம் பீதம் வர்ணம்" என வர்ணசப்தத்தைப் புலப்படுத்தும் தோற்றம் உளதேயாகும். இவ்வகையே நீலத்தன்மை முதலியவையும் காட்சியாற் றுணியப்பெறும். ஒவ்வொன்றே நீலரூபாதி வியத்திகள் என ஒருவியத்தியி லிருக்குந் தன்மை யுண்மையின் நீலத்தன்மை முதலியன பொதுமை யல்லவாம் என்றறையற்க. "கறுப்பழிந்தது

சிவப்புண்டாயது" என்பன முதலிய புலப்பாட்டால் நீலாதிகட் குண்டாயழியுந் தகைமையோடுகூடி யிருத்தலினனே பன்மையுண்மையின்; அன்றாயினே ஒருநீல அழிவுபாட்டானே உலகத்தே அநீலமன்றே உண்டாதல் வேண்டும். கறுப்பின் சிவப்பின் சமவாயங்களின் விநாச உற்பத்தி விஷயகமாகும் இந்த ஞானமெனை இயம்பற்க; பிரதீதியினனே சமவாயப் புலப்பாடின்மையின். "அதுவே இந்நீலம்" என்னும் உணர்வு நிகழக் காண்டலினானும் எளிதிற் கோடலினானும் ஐக்கியமாம் என அறைபற்க; காட்சிக்கு அப்பொதுமை யடுத்ததன் விடயகத்தன்மை யுண்மையின் "அதுவேயிக்குர்ச்சர தேயத்தாவது" என்பது போலவாம். எளிதிற் கோடலோ காட்சியாற் பாதிக்கப்பெறும்; அன்றாயினே கடாதிகட்கும் ஐக்கிய வழக்குண்டாதலின். உண்டாயொழியு மதிக்குச் சமவாயத்தைக் கவருந்தன்மையினடைவா மென்க இதனனே இரதமுதலியவையும் இனிதுரைக்கப் பட்டது. விழியாற் கவரப்படும் விசேட குணமென்பது பொருள். இவ்வாறே மேலும் இதுவே விரிக்கப் படுகின்றது:—கட் கென, பொருண் பண்பு தொழில் பொதுமைகளின் விழிக்காட்சிக்கு உற்பூத உருவங் காரணமாம்.

சுக்கிலமுதலப் பலவகையாகுந் தோயமுற்பர வணுவதனில், சிக்கஃதழி விலயவினி லேதுச் செறிந்திடு மிரத மோரசனே, நக்குறு மதுர முதற்பல வகையாம் நாடிடரச

னையி னுதவி, நெக்கழிவாதி முன்னெனக் கிராணரின் றறிவது மணமெனுநீ. (155)

அவ்வுருவமும் வெளுப்பு நீலம் மஞ்சள் சிவப்பு கறுப்பு சித்திராதி வேற்றுமையானே அநேக வகையாம். அற்றேல், சித்திரம் வேற்றுருவம் ஆவது யாங்ஙன மாங்கொல்? இவ்வாறும், நீலபீதாதி யவயவங்களாற் றொடக்குறும் அவயவி உருவமற்றதெனவோதவொண் ணாதம், காட்சிப்படாதென வாதலின், வியாப்பிய விருத்தி நீலாதிகளுண்டாகின்றன வென்பதாகவு மின்றும்; பீதவரைவானும் நீலப்புலப்பாட்டின் வழக்காமாதலின். அவ்யாப்ய விருத்தி நீலாதிக ளுண்டாகின்றன வென லுமேலாதாம்; வியாப்பிய விருத்திப் பொதுமையோடு ற்ற பண்புக்கட்கவ்யாப்பிய விருத்தித் தன்மையேல் முரண்பாடுண்டாதலின் ஆகையால் பலபொதுமைக ளோடுற்ற உருவங்களால் அவயவியின் மாட்டு விஜாதியமாய சித்திர உருவம் தொடங்கப் படுமென வுணர்க. ஆதலினானே சித்திரமொன்றென் றனுபவமுமுண் டாகின்றது, பல்லுருவக் கற்பனையானே மிகைபடக்கோ டலேயா மென்றுணர்க. இவ்வாறுகவே நீலாதிகட்குப் பீதாதியின் றொடக்கத்தே தடைத்தன்மைக் கற்பனை யானே அவயவியின்கண்ணே பீதாதிகளி லுற்பத்தியி ன்றும். இதனானே ஊறுங் கூறியதாகும். இரத முதலி யவையும் அவ்யாப்ய விருத்தியன்றும்; மற்றோ, பல பொதுமையோடுற்ற இரதமுடையவயவங்களாற் றொ

டக்குற்ற அவயவியின்கண்ணே இரதமின்றேனும் கோ
தின்றும். ஆண்டு, இரசனேயானே அவயவ இரதமே
கவரப்பெறும் இரசனேந்திரியாதிகட்குப் பொருட் கவு
ர்ச்சியின் கண்ணே ஆற்றலின்மையின் அவயவி நீரச
த்தன்மையோடுற்றும் கோதின்மையி னென்க. புதிய
ரோ ஆண்டவ்யாப்ய விருத்தியே பலவடிவம் நீலாதிக
ட்குப் பீதாதிப் பிரதிபந்தகத்தன்மையைக்கற்பிப்பதில்
அரிதிற்கோட லுண்மையின். அதனுனே 'லோகிதமெ
துதான் வருணாத்தானே, ஆகியமுகத்தும் வாலிலும்
பாண்டுரம், ஏகுறு குரத்தினுங் கோட்டினும் வெளு
மை,ஆகியவிடபம் நீலமதென்ப" என்பனமுதலியநூலு
மியையு மென்க. வியாப்பிய அவ்வியாப்பிய விருத்திப்
பொதுமையோடுற்ற இரண்டிற்கு முரணுமெனமொழி
யற்க; அளவை யின்மையின்.எளிதிற்கோடலானே ஏக
ரூபமென வியம்பற்க; அனுபவப்பகை யணுகலின்; மா
றுயினே குடமுதலியவற்றிற்கு நொய்திற்கோடலானே
ஐக்கிய மாகுமென்க. இதனுனே பரிசமுதலியவையும்
இனிதியம்பப்பட்டதென வியம்புகின்றனர். நீர்ப்பரமா
ணுவினும் தீப்பரமாணுவினும் உருவம் நித்தியமாம்,
மட்பரமாணுவினுருவமோ நித்தியமல்லவாம் பாகத்தா
னே வேற்றுருவ முண்டாதலின். குடத்தின்பாகத்தின்
பின் அதனவயவம் அபக்குவமா யுண்டாகின்றதென்ப
தின்றும், சிவப்புக்கபாலத்தின் கபாலிகை நீல அவயவ
முடையதா யாவதின்றும். இம்முறையேபரமாணுவின்

கண்ணும் பாகந் துணியப்பெறும். அயலாய நீர் தீப் பரமாணுக்களின் உருவத்தினும் வேறாய உருவம் வேறேதுவை யுடையதும் உண்டாவதுமாம். இரதமியம்பப் படுகின்றது இரதமோ வென. இராசன ஞானத்தே இரதம் காரணமென்பது பொருள். முன்னென, நீர்ப்பரமாணுவில் இரதம் நித்தியம் அயல் எல்லா இரதமும் அழிவுடையதா மென்பது பொருள். மணம் நிரூபிக்கப் படுகின்றது:—கிராணமேன.

உதவியு மதற்கோஙன்கு தீதேன்று வுபயமா மூறுறுந் துவக்கால், உதவியுமதற்கே யோழிவேப்பதட்ப முஷ்ண சீதம தேனமூன்றும், கிதியினிற் கடினமுதலன முனம் போற் கேடிலதாதிபா கஜத்வம், கிதியினி லிவைக்கின் றயலேங்கு மாண்டும் கீழணுப்பாகஞ் சீர்த்தியரே. (156)

உதவியும், கிராணத்தாலுண்டா முணர்விற்குக் காரண மென்பது பொருள். மணமியாவும் அழிவுடையனவேயாகும். பரிசம் நிரூபிக்கப்படும்:-ஊறு என, ஊறுலாங் காட்சியில் ஊறு காரண மென்பதுபொருள். மண்ணிற்கு வாயுவிற்கும் ஊறு வெப்பதட்பமற்றதாம். நீர்க்குத் தட்பமாம், தீக்கு வெப்பமாம். கடினமிருதுப் பரிசம் மண்ணிற்கே யென்பது பொருள். கடினத் தன்மை முதலியவையோ சையோகத்திருப்பதாகிய பொதுமை விசேட மன்றும்; விழியாற் கவரப்படு மடைவாதலின். முனம்போல், நீர்தீகாற்பர மாணுப் பரிசம்நித்

தியமாம், அதனினும் வேறு பரிசமோ அநித்தியமா மென்பது பொருள். இவைக்கு, உருவ இரதமணவூறு க்கட்கு. அயலின்று, மண்ணின் உருவ இரதமணப்பரிச மாறு பாடே அழலின் சையோகத்தாற் றோற்றும்; நூறுவகையா யழற்றினும் நீர் முதலியவற்றே உருவ முதலியன மாறுபடுவதின்றாம். நீரத்தே நறுநாற்ற மும் வெம்மையும் உடன்பா டெதிர்மறைகளால் உபா தியாலாயதெனத் துணியப்பெறும்; கான்மட் கட்குத் தட்ப ஆறுபோலும். ஆண்டும், மட்களினுள்ளும் பரமா ணுவின் கண்ணே உருவாதிகளின் பாகமெனவை சேடி கர் வழங்காநிற்பர். அவர்களது கருத்து வருமாறு:— அவயவியாற்றடைப்பட்ட அவயவங்களிற்பாகமுண்டா காதாம்; ஆனால் வன்னிசையோகத்தானே அவயவிகள் அழிவுற்றபோது சுதந்திரமாகிய பரமாணுக்களிற் பாக மாம்; மீண்டும் பக்குவப்பரமாணுசையோகத்தானே து வியணுகாதி முறையானே மீண்டு மகா அவயவிவரையு ற்பத்தியாம். தேயுவினுடை அதிவேக வயத்தான் முற் கூட்ட அழிவு விரைவில் வேறுகூட்டத் தோற்றமும் ஆம். ஈண்டுத்து வியணுகாதி அழிவு தொடங்கி எத்து ணைக்கணங்களால் மீண்டுண்டாதலின் உருவமுதலியன வுடையதாகு மெனச்சீட மதித்தெளிவின் பொருட்டுக் கணப்பிரக்கிரியை காட்டப்படும். ஆண்டுவிபாக ஜன் னிய விபாகத்தை யுடன்படாவிடின் 9 கணங்களாம்; உடன்படினோ விபாகம் சிறிதவாவுடன் விபாகத்தை

யுண்டாக்கும், அவாவின்றியதற் கத்தன்மையேல் தொழிற்றன்மையாம். சையோக விபாகங்களின் அவா வற்ற காரணம் தொழிலென்ப தாகவே வைசேடிக சூத்திரமாம். தனக்குப் பின்னுண்டாம் வேறு பாவத்தின் அவாவின்மை அதன் பொருளாம்; மாறுயினே தொழிற்கும் பிற்சையோகத்தைப் பிறப்பிப்பதில் முற் சையோக அழிவினவாவிருத்தலின் அவ்யாப்தியா மென்ப. ஆண்டு, பொருளைத் தொடங்கிய சையோக அழி வடையடுத்த போழ்தையவாவி விபாகஜன்னிய விபாகமுண்டாயின் 10-க்கணங்களாகும். இனிப்பொரு ளழிவடையடுத்த போழ்தையவாவி விபாக ஜன்னிய விபாகமா மேலாயின் 11 கணங்களாகும். அங்ஙன மன்றேல்:—இனி 9-கணங்கள், அழலின் ஒற்றுமையானே பரமாணுவின் கண்ணே தொழில், அதன்பின் வேறு பரமாணுவோடு விபாகம், அதன்பின் தொடக்குஞ் சையோக அழிவு, அதன்பின் துவியணுக அழிவு (1) அதன்பின் பரமாணுவின் கண்ணே கருமை முதலியவற்றின் அழிவு (2) அதன்பின் சிவப்புமுதலியவற்றினுற்பத்தி (3) அதன்பின் பொருட்டொடக்க அனுகூலமாகிய தொழில், (4) அதன்பின் விபாகம் (5) முற்சையோக அழிவு (6) அதன்பின் தொடங்குஞ் சையோகம் (7) அதன்பின் துவியணுக உற்பத்தி (8) அதன்பின் சிவப்பு முதலியவற்றின் உதயம் (9) அற்றேல்கருமை முதலியவை யழிவுறுங் கணத்தாதல் சிவப்புண்

டாங்கணத்தாதல் பரமாணுவின் கண்ணே பொருளைத் தொடங்கும் அனுகூல வினையுளதாகுகவெனின்? அற்றன்று அக்கினி சையுக்தமாகிய பரமாணுவின் பாலுளதாந் தொழிலழிவுறுமலாதல் குணமுண்டாத லொழிந்தாதல் ஆண்டுப் பரமாணுமாட்டு வேறுவினையின்மையின் தொழிலுடையதில் வேறுதொழி லுண்டாகாமையின் 'குணமற்ற பொருளின்கண்ணே பொருட்டொடங்கற் கனுகூலமாகிய தொழிலுளதாகாமையானும் என்க. எனினும் பரமாணுவின்கண்ணே கருமை முதலியவற்றின் நீக்க சமகாலத்தே சிவப்பு முதலியவற்றி னுதயம் ஆமெனின் அற்றன்று, முன்னுருவமுதலியவற்றின் றுவம்சத்திற்கும் வேற்றுருவத்தே ஹேதுத்தன்மை யுண்மையின் என 9 கணங்களாம். இனி 10-க்கணங்கள்:-அதுவும் தொடங்குஞ் சையோக அழிவடையடுத்த போழ்தை யவாவி விபாகத்தானே விபாகமுண்டாம்போதுஆம் அங்ஙனமன்றே:-அக்கினி சையோகத்தானே துவியணுகத்தைத் தொடங்கும்பரமாணுவின்கண்ணேதொழிலாம்,அதன்பின்விபாகமாம். அதன்பின் தொடங்குஞ் சையோக அழிவாம், அதன்பின் துவியணுக அழிவு விபாகஜ விபாகங்கள் (1) அதன்பின் கருமையழிவு பூர்வ சையோக அழிவுகள் (2) அதன்பின் சிவப்பினுதய பிற்சையோகங்கள் (3) அதன்பின் அக்கினிநோதனத்தாலுதயமாய பரமாணுவின் றொழிலழிவு (4) அதன்பின் அதிட்டமுடை ஆன்மசை

யோகத்தானே பொருளைத் தொடங்கற்கனுகூலமாகிய தொழில் (5) அதன்பின் விபாகம் (6) அதன்பின் முற்சையோக அழிவு (7) அதன்பின் தொடங்குஞ் சையோகம் (8) அதன்பின் துவியணுக வுற்பத்தி (9) அதன்பின் சிவப்பு முதலியவற்றின்உற்பத்தி (10)என 10-க் கணங்களாம், இனி 11 கணங்கள்:—வன்னி சையோகத்தானே பரமாணுவிற்றொழில், அதன்பின்விபாகம், அதன்பின் பொருளைத்தொடங்கும் சையோக அழிவு, அதன்பின் துவியணுக அழிவு (1) அதன்பின் துவியணுகஅழிவடையடுத்த போழ்தையவாவி விபாகஜ விபாக கருமையழிவுகள் (2) அதன்பின் முற்சையோக அழிவு சிவப்புதயங்கள் (3) அதன்பின் பிற்சையோகம் (4) அதன்பின் அக்கினி நோதனத்தா லுளதாய பரமாணுவின் றொழிலழிவு (5) அதன்பின் அதிட்டமுடையான்ம சையோகத்தானே பொருளைத்தொடங்கற்கனுகூலமாகிய தொழில் (6) அதன்பின் விபாகம் (7) அதன்பின் முற்சையோக அழிவு (8) அதன்பின் பொருளைத் தொடங்கும் பிற்சையோகம் (9) அதன்பின் துவியணுக உற்பத்தி (10) அதன்பின் சிவப்பு முதலியவற்றின் உதயம் (11) என்பதாம். இடையிலுள்ள ஓசைபோல அக்கினிசையோக மொன்றானே உருவ அழிவு சிவப்புதயங்களின்றும் அத்துணை ஞான்று ஓரமல் திரமாயிரமையின்; மேலும் உண்டாக்குவதே யழிப்பதாயின் அழிவுற்ற வுருவ முதலியவற்றே

அழலொழிவின் உருவமற்றதாக நீள்போழ்து பரமா ணுவிருக்கும் அழிப்பதே யுண்டாக்குவதாயின் சிவப்பு தயத்தே அவ்வழலழிவில் சிவப்புத்தரத்தன்மை யா காதாம். இனி 5 கணங்கள்: இவ்வகையே வேறு பர மாணுவின் மாட்டுத் தொழிற் சிந்தனத்தானே ஐந்தா வது முதலிய கணத்தும் பண்புண்டாம். அங்ஙனமன் றே:—ஒரு பரமாணுவின் கண்ணே தொழில் அதன் பின் விபாகம், அதன்பின் தொடங்குஞ் சையோக அழிவு வேறு பரமாணுத்தொழில்கள், அதன்பின்றே துவியணுக அழிவு,வேறு பரமாணுவின் றொழிலானுள தாகிய விபாகம் என்பது ஒரு காலமாம்(1) அதன்பின் கருமை முதலியவற்றின் அழிவு விபாகத்தானே முற் சையோக அழிவு என்பது ஒரு காலமாம் (2) அதன் பின் சிவப்புதயம் பொருட்டொடங்குஞ் சையோகம் என்பது ஒரு காலமாம் (3) பின் துவியணுக வுதயம் (4) பின் சிவப்புதயம் (5) என்பன 5 கணங்கள். இனி 6 கணங்கள்: பொருளழிவின் சமகாலம் வேறுபரமா ணுவின் கண்ணே தொழிற் சிந்தனத்தானே ஆறுவதில் பண்புதயமாம். அங்ஙனமன்றே:—பரமாணுவின் றொ ழிலானே வேறு பரமாணுவின் விபாகம், அதன்பின் தொடங்கும் சையோக அழிவு, பின் துவியணுக அழிவு வேறு பரமாணுவின் றொழில் பின் கருமையழிவு வேறு பரமாணுவின் றொழிலா லுளதாகிய விபாகம் (2) அதன்பின் சிவப்புதயம் வேறு பரமாணுவின்கண்ணே

முற்சைசோக அழிவு (3) அதன்பின் வேறு பரமாணு வின் சைசோகம் (4) அதன்பின் துவியணுக வுதயம் (5) பின் சிவப்புதயம் (6) என 6 கணங்கள். இனி 7 கணங்கள்: இவ்வாறே கருமையழியுங் கணத்தே வேறுபரமாணுவிற் ரெழிற் சிந்தனத்தானே 7 கணங்களாம், அங்ஙனமன்றே:-பரமாணுவின் கன்மதொழில், அதன்பின்வேறு பரமாணுவோடு விபாகம், அதன்பின் தொடங்குஞ் சைசோக அழிவு அதன்பின் துவியணுக அழிவு (1) அதன்பின் கருமை முதலியவற்றின் அழிவு வேறு பரமாணுவின் றெழில்கள் (2) அதன்பின் சிவப்புதயம் வேறு பரமாணுவின் கன்மதொழிலாலுளதாம் விபாகம் (3) அதன்பின் வேறு பரமாணுவோடு முற்சைசோக அழிவு (4) அதன்பின் வேறு பரமாணுவோடு சைசோகம் (5) அதன்பின் துவியணுகஉற்பத்தி (6) அதன்பின் சிவப்புதயம் (7) என்பன 7 கணங்கள். இனி 8 கணங்கள்: இவ்வாறே சிவப்புதய சமகாலம் வேறு பரமாணுவின்பாற் றெழிற் சிந்தனத்தானே 8 கணங்கள், அங்ஙனமன்றே:—பரமாணுவின் கன்மதொழில் அதன்பின் வேறுபரமாணுவிபாகம், அதன்பின் றெடங்குஞ் சைசோக அழிவு, அதன்பின் துவியணுக அழிவு (1) அதன்பின் கருமையழிவு (2) அதன்பின் சிவப்புதய வேறு பரமாணுத் தொழில்கள் (3) அதன்பின் வேறு பரமாணுத் தொழிலா லுளதாகிய விபாகம்(4) அதன்பின் வேறு பரமாணு

வின்கண்ணே முற்சையோக அழிவு (5) அதன் பின் வேறு பரமாணுச்சையோகம் (6) அதன்பின் துவிய ணுக வுதயம் (7) பின் சிவப்புதயம் (8) என்பன 8-க் கணங்கள்.

கவுதமர் மதத்திலிருமையாமணுமுற் கண்ணினு நண்ணு மெண்ணியினி, விவகரித் திடலாலேது வெண் ணிக்கைவிரியு நித்தியத்தினித்தியமாம், இவ்வுறு மொரு மை யநித்தியத் தநித்தமிருமை முற்பரார்த்த மீறுகக், கவு மவாம்தியா லாயிடும் பலவைக் கதுவிப்பர்யாப் தமே ன்றிடுவார். 57

நையாயிகர துமதத்தே துவியணுகாதி யவயவியி ன்கண்ணும் பாகமாம். அவர் தங்கருத்து வருமாறு:— அவயவிகட்கு நற்றுளைப்பான்மை நண்ணலின் வன்னி யின் உட்புகுந்த சூக்குமமாகிய அவயவங்களால் தடை பட்ட அவயவங்களிலும் பாகம் பகைபடுவதின்றும். வைசேடிக மதத்தே அளவறு மவயவி அதன் அழிவு களைக் கற்பிப்பதில் அரிதிற் கோடலாணு மென்க. இவ் வாறுகவே "அஃதிக்குடம்" என்பதாதிப் பிரத்திய பிஞ்ஞையும் பொருத்த முடைத்தாம். யாண்டுப் பிரத் திய பிஞ்ஞையின்றுமோ ஆண்டவயவியழி வுறினும் உடன்படப்படும் என்பதாம். எண்ணிக்கையை நிரூபிக் கும் பொருட்டியம்பப் படும்:—**எண்ணியென.**

என்னும் விவகாரத்தின் சிறந்த காரணம் எண்ணிக்கை யென்பது பொருள். நித்தியத்தில், பரமாணு முதலியவற்றே; ஒருமை அழிவற்றதாம். அநித்தியத்தே, குடமுதலியவற்றே; ஒருமை அழிவுற்றதென்பது பொருள். இருமை முதலியவை வியாசச்சிய விருத்தியாய எண்ணிக்கை, அவாமதியாலுளதர்வது இருமை முதலியவற்றின் சமவாயம் தனித்தனி குடமுதலியவற்றுமிருக்கின்றதென்றாலும் ஒன்று இரண்டு என்னுமுணர்ச்சி யின்மை யினுனும் ஒன்று இரண்டல்ல என்னுமுணர்ச்சி யுண்மையினுனும் இருமை முதலியவற்றிற்குப் பரியாப்திவடிவ ஒரு சம்பந்தம் அநேகத்தைப்பற்றியதா யங்கீகரிக்கப்படும்.

நசைமதி யோழிவினுனே நாசமா மவற்றினுக்கு
நசைமதி யென்பதாகும் பலவொருமை களினுட்டம்
இசையள விடுதற்கேது விரும்பரி மாணம் பேதம்
மசியணுத் தீர்க்கத்தோடு மகத்துவங் குறுக்கமாமே. 58

முதலில் அவாமதி, அதன்பின் இருமை யுதயம், அதன்பின் விசேஷண ஞானம் இருமைத் தன்மை நிர்விகற்பரூபம், அதன்பின் இருமைத்தன்மை யடையடுத்தகாட்சியும் அவாமதி யொழிவும், அதன்பின் இருமையிரிவு; எனவாம். அயலுணர்வு இருகணமாத்திரத்திருப்பதாம், தக்கனவாய விபுவின் சிறந்த பண்புக்கட்குத் தமக்குப் பின்னிருக்கும் பண்பாலழிவுபடுந் தன்

மை யுண்மையின்; எனினும், அவாமதிக்கு மூக்கணாத் திருக்குந் தன்மை கற்பிக்கப்பெறும்; அன்றாயினோ, நிர்விகற்பமாகிய காலத்தே அவாமதியழிந்த பின்னி ருமைக்கே யழிவாம் இருமைக் காட்சியின்றாம் அஞ் ஞான்று விடய மின்மையின், இருப்பதற்கே விழி முத லிய வற்றானே உணர்வுண்டாதலையுடன் பட்டிருத்த லின். ஆகையால் இருமைக்காட்சி முதலியவை அவா மதியை யழிப்பன வெனக்கற்பிக்கப்படும். அவாமதி யழிவானே யாங்ஙனம் இருமையழிவு என இயம்பற்க; மற்றொரு போழ்தில் இருமைக்காட்சி யின்மையின். அவாமதி அதனையுண்டாக்குவதாம், அதனழிவு மற்ற தை யழிப்பதாமெனக் கற்பிக்கப்படும். அதனானே அப்புருடனை யடைவுற்றதாய அவாமதியா னுளதாகிய இருமை முதலியவை அதனானே கவரப்பெறும் எனக் கற்பிக்கலாகும். அவாமதிக் கிருமைக் காட்சியில் கார ணத்தன்மை யுளதாகுகவென வுரையாடற்க; எளிதி ற்கோடலானே இருமைக்குக் காரணமாதலே தகுதி யாகு மாதலினென்றுணர்க. பொறிக்குப் புலப்படாத இருமையணு முதலியவற்றே அவாமதி யோகிகட் காம், சிருஷ்டி முதற்காலத்திருக்கும் பரமாணு முதலி யவற்றே ஈச்சுர சம்பந்தமாகிய அவாமதி அயற் பிர ஹ்மாண்டத்திருக்கும் யோகிகளின் அவாமதியேனும் இருமை முதலியவற்றின் காரணமாம். அவாமதி யா தாமெனக்கூடா நிகழுவிடை:—**பலவெண.**

"இஃதொன்று இஃதொன்று" என்னும் வடிவமா மென்பது பொருள். இஃதோ உணரற்பாலதாம்:— ஒருமை யுணர்வு நியதமின்றி யுண்டாந் தலத்தே மும்மை முதலிய வற்றின் வேறாகிய பன்மை யெண்ணிக்ணிக்கையுண்டாம்; சேனைவன முதலியவற்றே போலும் என்பர் கந்தலிகாரர். ஆசாரியரோ மும்மை முதலியவற்றையே பன்மையென் றறைவர்; அறைபடவே மும்மைப் பான்மை முதலியவற்றின் வியாபிகையாய பன்மைப் பான்மைப் பொதுமை வேறுவதின்றாம்; சேனைவன முதலியவற்றே யுளதாயினும் மும்மை முதலியவற்றே மும்மைத் தன்மை கவராமைதோடத் தானென்க; இங்ஙனுகவே "இதனினும் அதிக தரமிச்சேனை" யென்னுந் தோற்றம் பொருந்துகின்றது பன்மைக்கு வேறு எண்ணிக்கைத் தகைமை யுளதாயின் அதன் றாதம்மிய மின்மையின் பொருந்தாதென வெண்ணித்துணிக. அளவு நிரூபிக்கப்படும்:— பரிமாணமெனை: அளவிடும் விவகார அசாதாரண காரணம் பரிமாண மென்பது பொருள். அது, அணு மகத்து நீட்சி குறைவு என நால்வகைத்தாம்.

அநித்தியத் தஃதநித்த மாகுநித் தத்தேநித்தஞ்
சநித்திடுஞ் சங்கையான ளவுபிர சயத்தினும்
அநித்தமீரணுக முன்னிலதன்பிறப் பெண்ணினனே
சநித்திடுங் கடங்கடம்மிற் றதுமள வளவினனே. 59

அஃது, பரிமாணம்; நித்தியம் என்பதன் கண்ணே பரிமாண மென்பது சேரும், சனித்திடு மென்பதன் கண்ணும் பரிமாண மென்பது பின்றொடரும். அநித்த மென்பது முன்னோடு மன்னுவயமாம்; ஆகவே அநித்திய பரிமாணம் எண்ணிக்கையா னுண்டாயது அளவானுண்டாயது பிரசயத்தா னுண்டாயது என்பது பொருளாம். அவற்றுள் எண்ணிக்கையானுண்டாய தியம்பப்படுகின்றது:—அநித்தமென•

இருமையணு மும்மை யணுக்களின் அளவைக்குறித்துப் பரமாணுவி னளவாதல் இருமையணுவி னளவாதல் காரண மாகாதாம்; அளவிற்குத் தன்னைப்பாய பொதுமையோடுற்ற மேன்மையாய அளவை யுண்டாக்குந் தன்மை யுண்மையின். துவியணுகத்தின் அணு வளவோ பரமாணுவின் அணுத்தன்மையைக் குறித்து மேன்மையதன்றாம். திரிசரேணுவின் அளவோ சஜாதீய மல்லவாம். அதனானே பரமாணு வின்பால் இருமை யெண்ணிக்கை துவியணுக அளவிற்கும், துவியணுகத்தே மும்மை யெண்ணிக்கை திரிசரேணு அளவிற்கும் அசமவாயி காரண மென்பது பொருள்.

அளவாலுளதாம் அளவறையப் படுகின்றது:—சநித்திடுமென. குட முதலியவற்றி னளவு கபால முதலியவற்றி னளவா லுண்டாயதாம்.

பிரசயத்தா லுண்டாவதைக் கூறுவான் பிரசயம் பேசப் பெறும்:—

பிரசய சிதிலமென்னும் பெயர்ச்சையோ கத்தா னுண்டாம், அரியபஞ்சாதி தன்னி லளவுபற் றழியிலே கும், பிருதக்குத் தகைமை சங்கை யெனவுணர் பிருதக் கேது, தரியசம் சர்க்காபாவந் தன்னினீ தடங்கிடாதால்.

அளவு, பற்றுக் கோட்டி னழிவானே அழிவதாம் எனப் பகரப்படுகின்றது:—பற்றழியிலென. அதாவது அளவிற்கேயா மென்றுணர்க. அவயவி யழிவு யாங்ங னம் அளவை யழிப்பதாகும், அவயவி யிருந்தபோதி னும் மூன்று நான்கு முதலிய பரமாணுக்களைத் தள் ளினும் அவற்றைக் கொள்ளினும், அவயவியின் பிரத் திய பிஞ்ஞான முளதாயினும் வேறு அளவிற்குக் காட்சியிற் றுணிவுபே றுண்மையின் எனச்சொல்லற்க. பரமாணுவைத் தள்ளில் துவியணுகத்தினது அழிவை இன்றி யமையாதுடன் படவேண்டும், அதனழி வெய் துழி திரியணுக அழிவாம் என்னும் முறையானே மகா அவயவியின் அழிவு இன்றி யமையாததேயாம், அழிப்பதிருப்ப உடன்படாத மாத்திரையானே அழி வை நீக்கல் முடியாததே யாகுமன்றே; தேக முதலிய வற்றே அவயவம் வளருங்கால் அசமவாயி காரண அழிவு இன்றியமையாத தாதலின் அவயவி யழிவு இன்றி யமையாததேயாம். படமழிந் துழியும் வேறு

நூற்சை யோகத்தான் அளவினதிகத் தகைமை ஆகா தென வறையற்க; ஆண்டும் வேமா முதலிய அபிகாத த்தானே அசமவாயி காரணநூற் சையோக அழிவால் வத்திர அழிவு இன்றி யமையாததேயாமன்றோ. அன்றியும், வேறு நூற்கு அவ்வாடை யவயவத் தன் மை யுளதேல் முன்னவ்வாடையே இலதன்றேவாம்; வேறுநூல் வடிவகாரண மின்மையின். வேறு நூற்கு அவயவத் தன்மையிலதா மேலோ அதனல் அளவின் அதிகத்தன்மை யின்றாம்; சையுக்தமாகிய வேறு பொருட்போலும். ஆகையால் ஆங்கு, வேறு நூற்சையோக மெய்தினே முன்னுடை யழிவாம், பின் வேறுடை யுதயமாம் என ஒருதலையாய்க் கோடல் வேண்டு மென்க. அவயவிக்குப் பிரத்தியபிஞ்ஞான மோ ஒப்பாய பொதுமை யுற்றமையினனே தீபச்சுடர் முதலிய போலாமென வுணர்க. முன்னூல்களே வேறு நூற்குதவி யாதலின் முன்னுடை யிருப்பவே வேறு டை தொடங்கலாமெனக் கூறற்க; மூர்த்தங்கள் சம தேயத்திருத்தல் முரணுதலின். ஆண்டாடை யிரண்ட சம்பவமாதலின், ஒரு காலத்தே பலபொருட் டோற்று மென்றலும் ஆண்டுவாதை யெய்தலின். ஆகலின் தடையாய முற்பொருள் அழிவெய்தின் மறுபொரு ளுற்பத்தியாம் என்பதனை யொருதலையாயுடன்பட வேண்டியதேயாகும். பிருதக்குத் தன்மை நிருபிக்கப் படுகின்றது:—பிருதக்கென.

பிருதக்குணர்வின் சிறந்தகாரணம் பிருதக்குத்தகை மையாம். அதன் நித்தியத்தன்மை முதலியன எண்ணிக்கை போலவாம் அங்ஙனமன்றே:— நித்தியங்களில் ஒருமை நித்தியமாம் அநித்தியங்களில் அநித்தியம். அழிவுறு மொருமையோ பற்றுக்கோட்டினிரண்டாவது கணத்தேயுண்டாம் அதனழிவா லழிவெய்தும்; அவ்வாறே ஏகவேற்றுமையுமாம். இருமை முதலன போலும் இருபிருதக்குத் தகைமை முதலியனவுமாம் என்பது பொருள்.

அற்றேல் 'இஃதிதனினும் வேறு" என்பதாதியின்கண் ஒன்றொன் றன்மையிலங்குகின்ற தாதலின் யாங்ஙனம் பிருதக்குத் தகைமை வேறு பண்பென உடன்படலேலும்? உளதாருக வேற்றுமை ஒன்றொன்றன்மை வேண்டாம் என விளம்பற்க; உருவம் குடமன்று என்னுந் தோற்றமுண்டாகா தொழியவன்றே வேண்டும். உருவத்தே குடமுடிவுடை வேற்றுமை யாகிய வேறு பண்பிலதாகும், குடத்தே குடமுடிவுடை வேற்றுமையு மில்லையாகும். இருந்தாலன்றே பரம்பரைச் சம்பந்தங் கற்பிக்கலாகும் என்பதனுற் கூறப்படுகின்றது:—அசம் சர்க்காபாவந் தன்னினென.

இதனினும் பிருதக்கீதன்றேன்று கொண்டிலங்கலேதான், திதவயலடையாவற்றிற் றிகழடை வேசையோகம்; விதமும்மை யிதுதா ஞென்றன் வினையினிற் பிறத்தலாதி, மதமிருவினையிலாதன் மற்றுஞ்சை யோகத்தாதன்.

மலையினிற் பருந்துசேரன் மறிதலை யுடைகபால,
விலைதருச் சையோகத்தாலிசைகட தருச்சையோகம்,
அலைவினைவர லிரண்டாமபிகாத நோதனந்தான், ஒலியி
னிலுதித்தலாதி யாசையி லுதியா மற்றே. 62

*அற்றேல், ஓசை விலக்கணத் தன்மையே யன்றிப் பொருள் விலக்கணத் தன்மையின்றாம் எனின்? அற்றன்று, பொருள் வேற்றுமையின்றிக் குடத்தினும்வேறு என்பதேபோலக் குடம்படமல்ல என்பதன் கண்ணும் ஐந்தாம் வேற்றுமையாதல்வேண்டும்; ஆதலின் எப்பொருள் யோகத்தே ஐந்தாம் வேற்றுமையோ அப்பொருள் நஞ்ஞின் பொருளாய ஒன்றொன்றன் றென்பதினும் வேறாயமற்றைய பண்பே யாமெனக் கற்பிக்கப்படும் என்றுணர்க. சையோகம் சாற்றப்படுகின்றது:- அடையாவற்றினென, அது பிரிக்கப்படுகின்றது. விதமேன. இது சையோகம். பிரிவுபட்ட வுணர்வின் சிறந்த காரணமாகிய விபாகம் விளம்பப்படும்:-*விபாகமேன

தோகுவிபா கமுமூன் றுகுந் தொழிலொன்றி லிரண்
டிற்றோன்றல், தகுவிபாகத்திலாதல் தக்கதுமிரண்டிங்
கேது, நிகழுமாத் திரவி பாகநின்றுறல் நிறுவவ்வேதுப்,
புகுமஹேதுவின் விபாகப் பொகுட்டினிற் போந்ததாமே.

*உதாகரணமோபருந்து மலையினின்றும் பிரிந்துபோதலாதியை முன்போன்றுணர்க. மூன்றுவ தாயவி*

பாகஜ விபாகமும் காரணமாத்திர விபாகத்தாலாயதெனவும், காரணாகாரண விபாகத்தா லாயதெனவும் ஆம். முதலாவதாண்டு: யாண்டுக் கபாலத்தே தொழில், பின் இருகபால விபாகம், பின்குடத்தைத் தொடங்குஞ் சையோக அழிவு, பின்குட அழிவு, பின் அக்கபால விபாகத்தானே தொழிலோடு கூடிய கபாலத்திற்குக் ககனவிபாகமுண்டாம், பின் ககனசையோக அழிவு, பின்பிற்றேய சையோகம், பின்தொழிலழிவு என்பனவாம்.

அத்தொழிலானே யாங்ஙனம் வேறு தேய விபாகம் உண்டாகாதெனவுரையாடற்க; ஒரு தொழிற்கு, தொடங்குஞ் சையோக விரோதியாய விபாகத்தை யுண்டாக்குந் தன்மையும், தொடங்காச் சையோக விரோதியாய விபாகத்தை யுண்டாக்குந் தன்மையும் விரோத மன்றேவாம்; மாறாயினே, விரிதாமரை மொட்டுடை வழக்குண்டாம். ஆகையால் இது தொடங்காச்சையோக விரோதியாய விபாகத்தை யுண்டாக்கு மாயின் தொடங்குஞ் சையோக விரோதியாய விபாகத்தை யுண்டாக்காதொழியுமென வுணறற்பாலதாம். காரணவிபாகத்தானே பொருணு சத்தினும் முன் வேறு தேயவிபாகம் உதியாதது யாண்டையதோ வெனற்க; தொடங்குஞ் சையோக விரோதியாய விபாகமுடைத்தாய அவயவத்திற்குப் பொருளிருப்பில்வேறு

தேயவிபாகம் சம்பவியாமையின். இரண்டாவதாண்டு, யாண்டு, கைத்தொழிலாற் கைத்தருவிபாகம், பின்று கத்தின் கண்ணும் பிரிவுபட்ட வுணர்ச்சி யுண்டாமோ ஆண்டோ மெய்த்தரு விபாகத்தே கைத்தொழில் கா ரண மன்றும் வேறு நிலைக்களத் தன்மை யுண்மையின் தேகத்தேயோ தொழில் இல்லாததேயாகும்; அவயவி யின் றொழில் எல்லா அவயவங்களின் றொழிலால் நியத மாதலின். ஆகையால் ஆண்டு, காரணகாரண விபாகத் தானே காரியா காரிய விபாகம் உண்டாமென்க; என வே விபாகம் வேறு பண்பென்பது பெற்றும்; மாறுயி ஞே ஆகத்திற் பிரிவுற்ற ஞானமுள தாகாதாம், ஆத லின் சையோக அழிவுபாட்டானே விபாகம் பிரிதோ ராற்றுற் பெறப்படாததாம்.

## பராபரவியவகார நிமித்தங்களாகிய பரத்துவா பரத்துவங்கள் பகுக்கப்படுகின்றன.

உயர்வுந் தாழ்மையு மிருவகை யுரைக்குந் தைசிகமோ
டயருங்காலிக மூர்த்தமேயாதிய தடையும்
உயர்வுமூர்த்த வோற்றுமை மிகுமுணர்வினு லுளதாம்
மயல்சேய் தாழ்மையோ வதனற்ப மதியினுன் மனுமே.

தைசிக வுயர்வானது மிகுதர மூர்த்தசையோகத் துட்பட்ட பெற்றி யுணர்வினின்றுளதாம். இவ்வாறே அதனற்பத்தகைமை யுணர்வினின்று தாழ்மையுள

தாம். ஈண்டு மரியாதைத் தன்மையின் பொருட்டு ஐந்தாம் வேற்றுமை யவாவாம். பாடலி புத்திரத்தி னின்றும் ஸ்ரீகாசியைக் குறித்துப் பிரயாகை பரமாம், பாடலி புத்திரத்தினின்றும் குருக்ஷேத்திரத்தைக் குறித்துப் பிரயாகை யபரமாம்.

அவைதமினசமவாயி யாசையோற் றுமையப்பற்றி, னவரவி யசைவின்மிக்க ஞானத்தா லுயர்வு தாழ்வோ, அவவதன் சிறுமைப்பந்தி யதனிகு லசமவாயி, யிவணு றுங் காலபிண்ட மிவற்றி ஞேற்றுமை மற்றன்றே.

அவைதமின் = தைசிக பரத்வ அபரத்வங்களின்; அசமவாயி = அசமவாயி காரணம்; அப்பற்றில் = தைசிகபரத்வ அபரத்வப்பற்றில். ஈண்டுப் பரத்வம் அபரத்வம் காலிகமாகக் கவர்க. எவனது இரவியி னினிதியங் கலைக்குறித்து எவனது இரவியினினிதியங்கல் மிகுதி யதாமோ அவன் பெரியன்; எவனது குறைவதாமோ அவன் சிறியன். காலிகபரத்வ அபரத்வங்கள் ஜன்னி யதிரவியத்தின் கண்ணேயாம். இவண் = காலிக பரத்வ அபரத்வங்களில்.

நசைமதி நாசத்தானே நாசமு மவற்றினுக்காம்
விசைமதி விரிவை முன்பே விளம்பினம் வேகுவதாக
இசையினி யெஞ்சுமற்ற வகையையு மியம்பு கின்றேம்
அசையுமப் பிரமையோடும் பிரமையென் றறிவதாமே. 66

அதுமடி யிடத்தி லந்த மதியதப் பிரமை யாகு
மதன்விரி திரிபி ஞேடு மையமு மாகு மாதி
மதவுட றன்னி லான்ம மதிசங்கின் மஞ்சட் காட்சி
திதவிது நரஞே வன்றித் தரிகோலோ திகழ்வ தையம்.

அவற்றினுக்கு=காலிக தைசிக பரத்வ அபரத்வங்கட்கு; முறையே அடைவுற்ற புத்தியை மொழிவான் மொழியப்பட்டது:-விசை மதி யென, அவற்றுள் அப்பிரமை நிரூபிக்கப் படுகின்றது அதுமடி யென. அஃதில்லாததன்கண்ணே அது விசேஷணமாயிலங்கும் ஞானம் மயல் என்பது பொருள். அதன்விரி=அப்பிரமையின் விரிவு. ஆதி=திரிபு, தேகாதியின்கண்ணே துணிபு வடிவமாய எவ்வான்மத் தன்மையைப் பிரகாரமாயுடை யுணர்வுளதோ அது வெள்ளையன் யான் என்னும் வடிவதா யிலங்குவதாம். இன்னணமே, சங்குமுதலியவற்றில் மஞ்சட் சங்கு என்னும் வடிவினதாய எவ்வுணர்வு துணிபு வடிவமாயுளதோ, அது மயலென்பதாம். ஓ=விதர்க்கப் பொருட்டாம்.

அதனின்மை யடைய தின்றியே யதன்ற னடைமதி
துணிபொரு தலத்தே, விதவின்மை யுண்மை யுணர்வை
யம் பொதுவாய் விளங்குதன் மையினுணர் வேதாம்,
துதையுமப் பிரமை தோடமுண் டாக்குஞ் சுடர்குணம்
பிரமையைப் பயக்கும், விதம்பல தோடம் பித்தசேய்
மைகளாய் விளம்புவர் வீரமா தவரே.

*நிச்சயத்தின திலக்கணம் நிகழ்த்தப் படுகின்றது:—*

அதனின்மை யென. அதனின்மைப் பிரகார மின்றி அதனைப் பிரகாரமா யுடைய வுணர்வு நிச்சய மாம். சம்சயஞ் சாற்றப்படுகின்றது:—ஐய மென. ஒரு தருமியுடை முரணுய உண்மை யின்மைப் பிரகார க வுணர்வு ஐய மென்பது பொருள். பொதுவா யென; இரண்டினும் பொதுவாய தருமத்தி னுணர்வு ஐய ஹேதுவாம். எங்ஙனம்:—மிகு உயர்ச்சி குற்றிமகப் பொதுவை யுணர்ந்து இது குற்றியா? அலவா? என ஐயுறு கின்றனன். இன்னணஞ் சிறப்பாய தரும வுணர்வும் காரணமாம். அங்ஙனம்:—சத்தத் தன்மை, நித்தியாநித்திய நீக்கத் தன்மையானே சத்தத்திற் கவரப்பெறுதலின், சத்தம் நித்தியமா? அலவா? வென ஐயுறுகின்றனன். சத்த நித்தியமா? அலவா? என் பதாதி சத்தவடிவ விப்பிரதிபத்தியோ ஐய ஹேது வா காதாம். சத்த வியாத்தி யுணர்வு முதலியவற்றிற்கு நிச் சய மாத்திரத்தைப் பயக்குந் தன்மை யியற்கை யுண் மையின்; மற்றே, ஆண்டுச் சத்தத்தானே இருகோடி யுணர்வு எழும்புகின்றது, ஐயமோ மானதமே யென்ப தாம். இங்ஙனம் உணர்வில், பிரமாணமாதலையத் தான் விடய ஐயமாம் என்க. இவ்வாறே வியாப்பிய ஐயத்தானும் வியாபக ஐயம் என்பன முதலியவற்றை யும் உணர்க; மற்றே; ஐயத்தில் தருமி யுணர்வாதல்,

தருமி பொறி யொற்றுமை யாதல் காரண மென்ப தாம். துதையுமேன. அப்பிரமையின் பொருட்டுத் தோடங் காரணம், பிரமையின்பொருட்டுக் குணங் காரணம். ஆண்டும் பித்த முதலிய வடிவத்தோடங்கள் தொடர் புறுதனவாம். அவற்றிற்குக் காரணத் தகைமை உடன் பாடெதிர்மறைகளானே துணியப் பெறுவதாகும். குணத்திற்குப் பிரமையைப் பயக்கும் பான்மையோ கருதலாற் றுணியப் பெறும். ஆமாறு:—பிரமை, உண ர்வின் பொதுக்காரணத்தினும் வேறாகிய காரணத்தா லுண்டாவதாம், உண்டா முணர்வுத்தன்மை யுண்மை யின், அப்பிரமைபோலும். தோட மிலாமையே காரண மாக ஆகுகவே யென்னற்க; மஞ்சட் சங்கு என்னும் உணர்ச்சி யிடத்தில் பித்ததோட மிருத்தலின் சங்குத் தன்மைப் பிரமை யுண்டாகா தென்னும் வழக்காத லின். ஒருபக்க நிறுவு மூக மிலாமையின் அளவறு தோடாபாவ காரணத் தகைமையைக் குறித்துக் குண த்திற்குக் காரணத் தகைமை நியாயமா யிருத்தலின். குணமிருந்த வழியும் பித்தத்தாற் றடைப்படலாற் சங் கில் வெண்மை யுணர்வுண்டாகாதாமாதலின், பித்தாதி தோட மின்மைகட்குக் காரணத்தகைமை யின்றியமை யாது இயம்பல் வேண்டும், வேண்டவே குணத்திற்கு ஹேதுத்தகைமைக் கற்பனையால் வருவ தென்னை கொ லோவெனின்? என்னற்க; ஆயினும், உடன்பா டெதிர் மறைகளான் குணத்திற்கும் ஹேதுத்தன்மைச் சித்தி

யாதலின். இன்னணம் மயற்பொருட்டுக் குணமின்மை காரணம் என்பதுவும் இனி தியம்பலாகும். ஆண்டுத் தோடங்களவை யென்னும் அவாவி லறையப் பெறுகின்றது:—பித்த மென. சிலபால் மஞ்சண் முதலிய மயவிற் பித்தந்தோடமாம். சிலபால் நிலவு முதலிய வற்றின் அற்ப பரிமாண மயலில் சேய்மைமாசாம்: சிலபாலோ, மூங்கிற்பாம்பு மயலில் மண்டூகக் கொழுப்புமை, என்பதாய வடிவத்தோடங்கள், தொடர்பற்றனமயலைப்பயப்பன என்பது பொருள்.

**இனிக் குணங்களவை யெனு மவாநிகழக் காட்சி முதலியவற்றில் முறையாகக் குணங்கள் காட்டப் படுகின்றன:—**

ஒற்றுமைகாட் சியில்விசே டணமுடைய தோடு
முறும்விசே டியங்குணமாங் கருதலினிற் றுணிபா,
யுற்றபொரு ளடையடுத்த பக்கமதி லாராய்
வுறுங்குணமாஞ் சக்கியத்தில் ஒப்புமையா மதிதான்,
பற்றுவமை தனிற்குணமாஞ் சாத்தவுணர் வினிற்றான்
பகர்தகுதி கருத்தினுடைப் பிரமையிரண் டனுளோன்,
றுற்றுகுண மயலினுமே யயலாகி யோளிரு [யவரே.
முணவைபிவண் பிரமையென்ப ருணர்வையுடை

ஒற்றுமை யென. காட்சியின்கண் விசேடணவத் விசேடிய வொற்றுமை குணம், கருதலின்கண் துணிபொருளுடையதிற் றுணி பொருள் வியாப்பிய அடை

யடுத்ததை யடுத்தத னுணர்வு குணம், இந்நெறியே மே லுமுய்த்துணர்க. பிரமை பிறங்கப் பெறுகின்றது;— மயலினுமே யென.

அல்லதிங் கதனை யடையுடைத் தாகி யஃதுடை விசேடிய வுணர்வே, நல்லது பிரமை பிரமையு மயலு நாடிடா ததுநிரு விகற்பம், இல்லதிவ் வடைமை யோற் றுமை விடய மில்லது வதுபிர மாவா, தல்லது தனிஞற் கோடலில் லதுவா மையமற் றமைவுரு மையினே.

அற்றேல், யாண்டு இப்பி வெள்ளிகளின்மாட்டு இவை வெள்ளிகள் என்பதாக உணர் வுண்டாகின்ற தோ, ஆண்டு வெள்ளி யங்கி சத்தும் பிரமை யாகாதாம், அவ்வுணர்வு மயலினு மயலாகாமையின் எனிற் கூறப் படுகின்றது:-அல்ல தேன. அஃதுடை விசேடிய முடை யதாகி அதைப் பிரகாரமாயுடைய உணர்வு பிரமை யென்பது பொருள். இனி யிங்ஙனம் மிருதிக்கும் பே யாத் தன்மையாம், அதனு லாவ தென்னை கொலோ வெனின்? அவ்வாறாய வழி அதன் கரணத்திற்கும் அய லளவையாந் தகைமையாம் எனின்? அற்றன்றும், மெ ய்யனுபவ கரணத்தையே அளவை யென மிழற்றலின். இதுவோ உணரத் தக்கதாம்:—எவ்வொற்றுமையா னே எஃதுடைமையோ அவ்வொற்றுமையானே அஃது டை விசேடிய முடைமையும் அவ்வொற்றுமையானே அதன் பிரகார முடைமையும் அறைக; அறையவே

கபால முதலியவற்றிற் சையோகாதியான் கடாதி ஞான முளதாயவழி அதிவியாத்தியிராதாம். இங்ஙனமாகவே, நிருவிகற்பத்தை யுடைய பிரமை யுண்டாகாதாம், அதற்குப் பிரகார முடைமையோடு கூடினமையின், ஆகலி னதைப் பெறுகின்றது:—பிரமையுமேன. அற்றேல், தருவிற் கபிசையோக வுணர்வு மயலும் பிரமையும் ஆகுக வெனின்? ஆகாதாம்,பிரதியோகியை வேறு நிலக்களத்தி லுடைத்தாகிய சையோக அபாவமுடையதில் சையோகவுணர்வுமயலாதலின். தருவில் சையோகவின்மை வரைவானே சையோகவுணர்வு மயலாகாதாம்,ஆண்டுச் சையோக வின்மைக்குப் பிரதியோகி யொருநிலக்களத்தன்மையுண்மையின் என வியம்பற்க; ஆண்டுச் சையோக வின்மையின் வரைவானே சையோக வுணர்விற்கு மயலாந்தன்மை மருவலின். இலக்கியத்திற்குத்தொடர்பின்மையினுனேஇலக்கணந்தொடர்புறுவிடினும் இடரின்றாம். பிரமாவாத லேன. மீமாஞ்சகரோ பிரமத்தன்மையைத் தன்னாற்கோடத்தக்கதாமென்பர். ஆண்டுக் குருமதத்தில் உணர்விற்குச் சுவப்பிரகாச ரூபத்தன்மை யுண்மையின், அவ்வுணர்வின் மெய்ம்மை அதனானே கவரப்பெறும் என்பதாம். பாட்டமதத்தில் உணர்வு அதீந்திரியமாம், உணர்வினுதித்த உணரப்பட்டமை காட்சியாம். அதனானே உணர்வு கருதப்பெறும். முராரிமிசிரர் மதத்தில் பின்னுணர்வானே உணர்வு கவரப்பெறும், எல்லாருடைய

மதத்தும் அவ்வுணர்வை விடயமாகவுடைய வுணர்வா னே அவ்வுணர்வின் மெய்ம்மை கவரப்பெறும். விடய த்தானே நிரூபிக்கப் பட்டதேயாம் உணர்வாதலின், உணர்வினுணர்வா லுணரப்படுவது உணர்பொருளாம். அம்மதம் ஆசுறுத்தப் பெறுகின்றது:—தனிஞ் லேன. ஐய மேன; உணர்வின் மெய்ம்மை தன்னாற் கவரப்பெ றுமாயின் பயில்விலாத் தசையி லுண்டா முணர்வில் மெ ய்ம்மை யையம் ஆகாதாம். ஆண்டோ, உணர்வு உண ரப் பெறுமாயின் நின் மதத்தில் மெய்ம்மை உணரப் பெற்றதே யாகுமென யாங்ஙனமையம்? உணர்வு உண ரப்பெறுதிருக்குமாயின் தருமி யுணர்வின்மையின் யாங்ஙனந்தானையம்? ஆகலின் உணர்வில் மெய்ம்மை கருதத்தக்கதாம்; அஃதாமாறு:—இவ்வுணர்வு பிரமை, பயனோடுகூடிய முயற்சியை யுண்டாக்கலின்: எஃதிங்ங னமிலதோ, அஃதிங்ஙன மலதாம், எங்ஙனம் அப்பிர மை. இப்பிருதிவித்தகைமைப் பிரகாரக வுணர்வு, பிர மை, மணமுடைப் பிருதிவித்தகைமைப் பிரகாரகவுண ர்வின் றன்மையான். இங்ஙனம், இச்சலத் தன்மைப் பிரகாரக வுணர்வு, பிரமை, நேயமுடைச் சலத்தகை மைப் பிரகாரக வுணர்வின் றன்மையான். ஹேதுவு ளார் வெங்ஙன மெழுந்த தென வியம்பற்க; பிருதிவித் தன்மைப் பிரகாரகத் தன்மைதானே கவரப் பெறாத லின் ஆண்டு மணக்கவர்வானே மணமுடை விசேடிய முடைமையும் இனிது கவரப்பெறுதலின். அதனைப்

பிரகாரமா யுடைமையானே வரைந்துகொண்ட அஃது டை விசேடிய முடைமை மாத்திரம் கவரப்பெறுதாம், ஐயத்தை யனுசரித்தலின். அற்றேல் எல்லா வுணர்வு கட்கும் மெய்ம்மை யுண்மையின் பிரமை யிலக்கணத் தில் அஃதுடை விசேடிய முடைமைச் சிறப்பு வாளா போம், ஈயத்தில் வெள்ளியை விழைந்தானது முயல் கை மயலாலுதித்த தாகாதாம். நினது மதத்தில் மய லின்மையின் என மலரற்க; ஆண்டே தோடத்தோடுற்ற முன்னிலையிற் சுதந்திரமாய்க் கிடைக்கப்பெற்ற வெள் ளிவேற்றுமையைக் கவராமை யேதுவாதலின். உண் மை வெள்ளி யிடத்திலோ அடையடுத்த வுணர்விரு த்தலின், அதுவே காரணமாம்; உளதாருக ஆண்டும் வேற்றுமைக் கவர்வின்மை, அதுவே காரண மென்ப தாம். அன்னியதாக்கியாதி யணுகுறு மென்னற்க; வெள்ளிக் காட்சியின் காரணமாகிய வெள்ளி யொற்று மை யின்மையின், ஈயத்தில் வெள்ளி மதிகூடாமையின் எனின்? அற்றன்று, உண்மை வெள்ளித் தலத்தில் முயல்வின் பொருட்டு அடையடுத்த உணர்விற்குக் காரணத் தகைமை துணியப்பெற்றிருத்தலின், பிறவி டத்தும் அதைக் கற்பித்தலின். பயனுடை முயல்வில் அதுகாரணம், பயனறுமுயல்விலோ வேற்றுமையைக் கவராமை காரணம் எனக் கழறற்க; எளிதிற் கோடலா னே முயல்வு மாத்திரத்தில் அதற்கேதுத்தன்மை கற் பித்தலின். இவ்வாறாகவே, ஈயத்தில் வெள்ளித் தன்

மை யடையடுத்த மதியைப் பின்பற்றி ஞான இலக்கணச் சம்பந்தங் கற்பிப்பினும் கோதின்றாம்; பலவாயிலாய அரிதிற் கோடலுக்குக் குற்றம் பற்றாமையின். மேலும், யாண்டு ஈயவெள்ளிகளில் இவைவெள்ளிகள் என்றூதல், ஈயங்கள் என்றூதல், என்னும் உணர்வுளதாமோ, ஆண்டுக் காரணவாதையு மிலையாம். மேலும், யாண்டு ஈயவெள்ளிகளில் இவைவெள்ளி ஈயங்கள் என்னு முணர்வாமோ ஆண்டு இருபாலும் ஓரே போழ்தில் முன்னுறலும் பின்னுறலும் ஆம்: ஈயத்தில் ஈய வேற்றுமைக் கவர்வினும், வெள்ளியில் வெள்ளி வேற்றுமைக் கவர்வினும் அந்நியதாக் கியாதி யச்சத்தான் நின்மதத்தில் தோடத்தானே ஈயத்தில் வெள்ளிவேற்றுமைக் கவர் வின்மைக்கும், வெள்ளியில் ஈயவேற்றுமைக் கவர் வின்மைக்கும், இருப் புண்மையின். மேலும் அனுமிதிப்பொருட்டு வேற்றுமையைக் கவராமைக்கு ஹேதுத் தன்மையேல் நீர் மடுவில் தீ வியாப்பியப் புகையுடையதன் வேற்றுமையைக் கவராமையான் கருதல் வாதை யற்றதாம். அடையடுத்த வுணர்வு காரணமாயின் அயப்பிண்டத்தில் தீவியாப்பியப் புகையுணர்வு கருதலைப் பின்பற்றி யடைவுறாம். அவ்விது இருபாலுங் கட்டுறு தாம்பாம். இங்ஙனமாகவே அந்நியதாக்கியாதியால் காட்சியே யளவையாம் ஈயத்தை வெள்ளித் தகைமையானே அறிந்தேன் என்னு மனுபவத்தா னெனத் தொகுத்துக் கூறியதாகும்.

முன்னர் வியாத்தி மொழியப் பெற்றது அதனைக் கவருமுபாயங் காட்டப்படவில்லை யெனவது காண்பிக்கப் படுகின்றது:—

உடனி கழ்ச்சி யுணர்வொடு மாறதன்
இடரும் ஞானம தின்மையு மேதுவாம்
திடநல் வியாத்தியின் ஞானத்தி லேசில
இடவி னுவை யிரிக்குந் தருக்கமே.

மாறதன் என. விடனிகழ்ச்சி யுணர்வின்மையும் உடனிகழ்ச்சியுணர் வுண்மையும் வியாத்தியுணர்விற் காரணமாம். விடனிகழ்ச்சி யுணர்வு வியாத்தி யுணர்வில் தடையாதலின், அதனின்மை காரண மென்பது பொருள். இவ்வாறு உடன்பா டெதிர்மறைகளானே உடனிகழ்ச்சி யுணர்ச்சிக்கும் காரணத் தன்மையாம். பன்முறைத் தரிசனமோ காரண மன்றும், விடனிகழ்ச்சி ஒளிராதவழி ஒருமுறைத் தரிசனத்தானும் சிலபால் வியாத்தி கவரப் பெறுதலின். சிலபால் விடனிகழ்ச்சிச் சங்கையை விட்டொழித்தலினானே பன்முறைத்தரிசன மினிதுகூடும். யாண்டுதான் பன்முறைத் தரிசனத்தானும் சங்கை சாம்பாதோ ஆண்டு விபக்கத்தைப் பாதிக்குந் தருக்கம் விழையப்பெறும். அங்ஙனமன்றே:—தீயிலாத் தேயத்தும் புகையிருக்கும் என ஆசங்கை நிகழுமாயின், அது, தீப்புகைகளின் காரிய காரணபாவ நல்லுணர்வா னீங்கும். இது தீயு

டைய தாகாதேல் புகையுடைய தாகாதாம் காரண மிலாது காரியங் கதுவாமையின். சிலபால் காரண மிலா து காரிய முண்டாமேனும், ஹேது வின்றியே உண்டா மென அதன் மாட்டு மாசங்கை அடையா நிற்கும். அக்கால், அது வியாகாத தோடத்தா லகற்றத் தக்க தாகும். காரண மிலாது காரியமாமே லாயினோ புகைப் பொருட்டுத் தீயையும், மகிழ்வின் பொருட்டு உணவும் மாறுபடாமற் கோடல் நினக்கே பொருந்துறுதாம் என்றுணர்க. யாண்டுத் தானேகவே சங்கை அவதரி ப்ப தில்லையோ ஆண்டுத்தருக்க அவாவுமின்றும். தரு க்கம் என்பதாக அவ்விது அறையப்பட்டது.

**இஞ்ஞான்று மற்றையனது வியாத்தி ஞானத் தடைப்பொருட்டு உபாதி யுரைக்கப் படுகின்றது:—**

சாத்தி யத்தின் வியாபக சாதனத்
தேத்த வ்யாபக மேதது பாதியாம்
தேத்த தன்றன் றிகழுங் துணிபிது
பாத்தி டும்படி காட்டப் படுமரோ.

துணிபொருட்டகைமை யபிமத வியாபகத் தகை மையோடு துணிவிக்கும் பொருட் டகைமை யபிமத அவ்வியாபகத் தகைமை யுபாதியா மென்பது பொருள். அற்றேல், காகம், கறுப்பாம், மித்திரா புத்திர னதலின், என்புழி சாகபாக சன்னியத் தகைமை

உபாதியாகாதாம்; அதற்குத் துணிபொருள் வியாபகத்தகைமை யின்மையின், கறுப்புக் கடாதிகளினும் கதுவலின். இங்ஙனம், வாயு, காட்சிப்பொருள், காட்சிப்படு மூறின் பற்றுக்கோடாதலின் என்புழி உற்பூத உருவமுடைமை உபாதியாகாதாம், காட்சித்தகைமை ஆன்மா முதலியவற்றி லிருத்தலின், ஆண்டோ உருவமின்மையின். இங்ஙன், துவம்சம், விநாசி, தோற்றா தலின்; என்புழி பாவப்பான்மை யுபாதி யாகாதாம், விநாசித் தகைமை முன்னின்மையினு மிருத்தலின்; ஆண்டோ பாவப்பான்மை யின்மையின் எனின்? அற்றன்று, எத்தருமத்தான் வரைந்து கொள்ளப்பட்ட துணிபொருள் வியாபகத் தகைமையோ அத்தருமத்தான் வரைந்து கொள்ளப்பட்ட துணிவிக்கும் பொருள் அவ்வியாபகத் தகைமை என்னும் பொருளிற் கருத்திருத்தலின். மித்திரா புத்திரனுதலானே வரைந்து கொள்ளப்பட்ட கறுப்பின் வியாபகம் சாகபாகஜத் தகைமையாம், அதனுல்வரைந்து கொள்ளப்பட்ட ஹேதுவினவ்வியாபகமுமாம். இங்ஙன், பக்கதரும வெளிப் பொருண்மையால் வரைந்து கொள்ளப்பட்ட காட்சித்தகைமையின் வியாபகம் உற்பூத உருவமுடைமையாம்; இங்ஙன் வெளிப்பொருண்மையால் வரைந்து கொள்ளப்பட்ட ஹேதுவின் அவ்யாபகமுமாம். இன்னணமே, துவம்சம், விநாசி, தோற்றாதலின்,என்புழித் தோற்றந் தன்மையால் வரைந்து கொ

ள்ளப்பட்ட துணிபொருள் வியாபகம் பாவப்பான்மை யாம்; நல்லேதுவிலோ இத்தகைய தருமமில்லையாம். எதனுல் வரைந்து கொள்ளப்பட்ட துணி பொருளின் வியாபகம், அதனுல் வரைந்து கொள்ளப்பட்ட துணி விக்கும் பொருளின் அல்வியாபகமும் சிறிது ஆம். பிறழ்வுடையதன்மாட்டோ உபாதியினது நிலைக்களனு கிய எத்துணிபொருளின் நிலைக்களமோ எதுதானுபாதி சூனியம் துணிபொருட் பிறழ்ச்சி நிலைக்களமோ அவை யிரண்டனு மொன்றுந் தன்மையானே வரைந்து கொ ள்ளப்பட்ட துணிபொருளின் வியாபகத் தகைமையும் துணிவிக்கும் பொருளினது அவ்வியாபகத் தகைமை யும் உபாதிக்குமுடிபாகச் சம்பவிக்கு மென்பதாம்.

**இதனனே இலக்கியமாகிய உபாதிசொ ரூபத்தையும் இதனனுசாரமாய்க் காட்டப் படுகின்றது:—**

துணிபோ ருடனி ஞெருநிலைக் களந்துதை வனவாம்
அணியு பாதிக ளகிலமு மேதுவி னேகம்
புணையி டத்தவை தற்றுணி பொருட்பிறழ்ச் சியவாம்
பணுபி றழ்ச்சியின் கருதலு பாதியின் பயனே.

தற்றுணிபோருள் என. தானுந் துணிபொருளும் தற்றுணிபொருள், அவற்றின் பிறழ்ச்சி யென்பது பொருள். உபாதியின் ஊடகத்தன்மை விரை விளம்ப ப்படுகின்றது:—பிறழ்ச்சியின் என. உபாதிப் பிறழ்ச்சி

யானே ஹேதுவில் துணிபொருட் பிறழ்ச்சி யனுமானம் உபாதியின் பயன் என்பது பொருள். அங்ஙன மன்றே:— யாண்டுத் தூய துணிபொருள் வியாபக உபாதியாமோ ஆண்டுத் தூயதேயாய உபாதிப் பிறழ்ச்சி யானே துணிபொருட் பிறழ்ச்சி யனுமானமாம்; எங்ஙனம்:—புகையுடையது தீயின் என்பதாதியில், தீ புகைப்பிறழ்ச்சியைப் புணர்வது, அதன்வியாபக ஈரவிறகின் கூட்டப் பிறழ்ச்சி யுடைபதாந் தன்மை யுண்மையின் என்பதாம்; வியாபகப் பிறழ்ச்சி யுடையதற்கு வியாப்பியப் பிறழ்ச்சி யின்றியமையாது வேண்டப் படுதலின். யாண்டுதான் சிறிது தருமத்தானே வரைந்து கொள்ளப்பட்ட துணிபொருள் வியாபக உபாதியாமோ, ஆண்டு அத்தருமமுடையதி லுபாதிப் பிறழ்ச்சியானே துணிபொருட் பிறழ்ச்சி அனுமானம். எங்ஙனம்:—காகம், கறுப்புடையது, மித்திரா புத்திரத்தன்மையின், என்பதாதியில் மித்திரா புத்திரனுதல் கறுப்பின் பிறழ்ச்சி யுடையதாம், மித்திரா புத்திரன்பால் சாகபாகஜத் தகைமைப் பிறழ்ச்சி யுடையதாந் தகைமை யுண்மையா னென்பதாம். பாதத்திற் கிலக்காகாத பக்கத்தயலோ, துணிபொருள் வியாபகத் தன்மையைக் கவர்வதாய அளவையின்மையினானும் தனது வியாகாதம் வருதலினானும் உபாதியாகாதாம். பாதத்திற் கிலக்காவதோ உபாதியேயாம்; எங்ஙனம்;— தீ, வெப்ப மற்றது, செயற்கைய தாதலின், என்பதா

தியில் காட்சியானே தீயில் வெப்பத்தைக் கவரின், தீய யற் றகைமை யுபாதியாம். யாண்டுபாதிக்குத் துணிபொருள் வியாபகத் தன்கமை ஐயுறலாமோ, அது சந்திக்த உபாதியாம். பக்கத்தயலோ சந் திக்த உபாதியெனவும் உன்னத்தகாதாம், ஊதைகாரரது சம்பிரதாய அனுசாரத்தான் என்பதாம். சிலரோ, சற்பிரதிபக்கத்தைக் கிளப்ப லுபாதியின் பயனும், அஃதாமாறு:— அயப்பிண்டம், புகையுடையது, தீயுடைமையின், என்பதாதியில் அயப்பிண்டம் புகையின்மையை யுடைது, ஈரவிறகின்மையின் என்னும் சற்பிரதிபக்கஞ் சம்பவித்தலின். இவ்வாறாகவே, துணிவிக்கும்பொருள் வியாபகமும் சிலபாலு பாதியாம், எங்ஙனம்:—இமக்கட்டி, பிருதிவி, கடின சையோக முடைமையின் என்பதாதியில் வெப்பதட்ப மற்ற ஊறுடைமையின். ஈண்டுச்சொரூப அசித்தியே தூடண மெனச் சொல்லற்க; யாண்டுமுபாதிக்கு அயற்றோட சாங்கரிய மெய்தலின். ஈண்டோ துணிபொருள் வியாபகப் பக்கத்திராதது உபாதி என்பர்.

ஓசையு முவமை தாமு மோருதனி யளவை யன்று
னீசேயு மனுமா னத்தி னிற்றலின் மதம்வி சேடம்
ஆசையிங் கிஃதோவ் வாதா லன்றியும் வியாத்தி ஞான
மோசைமுன் னுணர்வுண்டாத லுலகனு பவமே யன்றே.

ஓசையு மென. வைசேஷிகரது மதத்திற் காட்சியுங் கருதலும் அளவையாம். ஓசை யுவமைகட்கோ

கருதல் வகையினுனே அளவையாதலாம். அங்ஙனமன்றே;—கோலான் ஆவைக்கொணு எனன் முதலிய உலகத்துறு மொழிகளாதல், வேட்க வெனன் முதலிய வோத்துறு மொழிகளாதல், கருத்துவிடய நினைப்பித்த பதப்பொரு ளொற்றுமைப் பிரமைவாயிலாயின, அவாய்நிலை முதலியவற்றை யுடைய மொழிக்கூட்டத் தன்மையின், குடத்தைக் கொணுவென்னும் மொழிக் கூட்டம்போலும். அல்லது, இப்பதப்பொருள்கள் ஒன்றொடொன்று ஒற்றுமை யுடையன, தகுதிமுதலியவற்றை யுடைய மொழியான் நினைப்புறுத்தப் பெறலின், அத்தகைய பதப்பொருள் போலும். காட்டினும் அயற்காட்டானே துணிபொருட் பெறுதியா மென்க; இங்ஙன், ஆமாவியத்திக் காட்சியின்பின் ஆமாமொழி ஆமாத் தன்மைப் பிரவிருத்தி நிமித்தத்தை யுடையது, மற்றொன்றி விருத்த விலாமன் முதியோரான் ஆண்டுப் பிரயோகிக்கப் படுதலின்; மற்றொன்றி விருத்த விலாமன் முதியோரான் யாண்டு யாது பிரயோகிக்கப் படுமோ ஆண்டு அவ்வப் பிரவிருத்தி நிமித்தகம். எங்ஙனம்:—ஆமொழி ஆத்தன்மைப் பிரவிருத்தி நிமித்தகமாமோ. அல்லது, ஆமாமொழி, பிரவிருத்தி நிமித்தகத்தோடு கூடியதாம், நன்மொழி யாதலின் என்னுங் கருதலானே பக்கத்தருமத்தன்மை வலியானே ஆமாத் தன்மைப் பிரவிருத்தி நிமித்தகத் தன்மை துணியப் பெறும். அம்மதந் தூடிக்கப் படுகின்றது:—ஆசையிங்

கேன வியாத்தி யுணர்வின்றியும் சாத்த வுணர்ச்சிக்கு அனுபவசித்தத்தன்மை யுண்மையின் யாண்டுஞ் சத்தக்கேள்வியின் பின்னர் வியாத்தி யுணர்ச்சியில் அளவையுளதென வின்றன்றே. மேலும் ஓசையுணர்விடமியாண்டும் வியாத்தியுணர்வு கற்பிக்கப்படுமேலாயின் கருதவிட மியாண்டும் மொழியுணர்வைக் கற்பித்து ஓசையுணர்விலே யுடன்படாததென்னை கொலோ வெனச் சிந்திக்குக.

திருவகைகருதல் வேறுற்றேளி கேவலான் வயியேன்
றிருவகை வியாத்தியாகு மிசையன்னு வயமாறுக
உரையன்னு வயவியாத்தி யுரைத்தனம் வெதிரேகந்தா
ணிரைதுணி பொருளபாவ வியாபக மேதுபாவம்.

திருவகையென, கருதலோ மூவிதமாம், கேவலான்னுவயி, கேவல வியதிரேகி, அன்னுவய வியதிரேகி வேற்றுமையான். அவற்றுள் விபக்கமில்லாமை கேவலான்னுவயியாம்; எங்ஙனம்:— குடம் அபிதேயம் பிரமேயத் தன்மையான் என்பன முதலியவற்றில், ஆண்டோ யாவற்றிற்குமே அபிதேயத் தன்மை யுண்மையின் விபக்க மில்லாமையாம். சபக்கமிலாமை கேவலவியதி ரேகியாம்; எங்ஙனம்:— பிருதிவி, பிறவற்றினின்றும் வேருயது, மணமுடைமையின் என்பதாதியில், ஆண்டோ நீர்முதலிய பதின்மூன்றன் வேற்றுமை முன்னர்த் துணியப்பெருமை யானே துணிவுற்ற துணிபொருளை யுடைய சபக்கமிலாமையின். சபக்க

விபக்கங்களை யுடையது அன்னுவய வியதிரேகி; எங்ஙனம் தீயுடையது புகையுடைமையின் என்பதாதியில், ஆண்டுச் சபக்கமாகிய அடுக்களை முதலியவையும், விபக்கமாகிய மடுமுதலியவையு மிருத்தலின். ஆண்டு வியதிரேகியில் வியதிரேக வியாத்தி யுணர்வு காரணம் அதன்பொருட்டு வியதிரேக வியாத்தி விளம்பப்படுகின்றது:—துணிபொருளென. துணிபொருளின்மையின் வியாபகீபூத வின்மையி னெதிர்மறையாத லென்பது பொருள். ஆண்டிஃதறிதற் பாலதாம்:— எவ்வொற்றுமையானே எதனால் வரைந்துகொண் டதன்பொருட்டு எவ்வொற்றுமையானே எத்தருமத்தானே வியாபகத் தன்மை கவரப் பெறுமோ, அவ்வொற்றுமையான் வரைந்து கொள்ளப்பட்ட எதிர்மறையை யுடைய அத்தருமத்தானே வரைந்து கொள்ளப்பட்ட இன்மையுடைமை யுணர்வான் அவ்வொற்றுமையான் வரைந்து கொள்ளப்பட்ட எதிர்மறையை யுடைய அத்தருமத்தானே வரைந்து கொள்ளப்பட்ட இன்மையின் றுணிபென்பதாம். இவ்வாறாகவே, யாண்டு விசேஷணதாதி சம்பந்தத்தானே இதரத்தன்மை வியாபகத் தகைமை மணமின்மையிற் கவரப் பெறுமோ ஆண்டுமணமின்மையினின்மையானே இதரத்தன்மையின் முற்று மின்மை துணியப்பெறும்; யாண்டுதான்றுதான் மியசம்பந்தத்தானே இதரவியாபகத் தகைமை மணமின்மைக்குக் கவரப்பெறுமோ. ஆண்டுத் தாதாத்மிய சம்பந்தத்தா

னே. இதரத்தினின்மை துணியப்பெறும்? அஃதே ஒன்றென் றன்மையாம். இன்னணம், யாண்டுச் சையோக சம்பந்தத்தானே புகைப்பொருட்டுச் சையோக சம்பந்தத்தானே தீயினுக்குவியாபகத்தகைமை கவரப்பெறுமோ, ஆண்டுச் சையோக சம்பந்தத்தானே வரைந்து கொள்ளப்பட்ட எதிர்மறையை யுடைய தீயின்மையானே நீர்மடுவில் சையோக சம்பந்தத்தானே வரைந்து கொள்ளப்பட்ட எதிர் மறையையுடைய புகையின்மை துணியப்பெறும். ஈண்டோவிய திரேக வியாத்தி யுணர்வில் வியதிரேக உடனிகழ்ச்சி யுணர்ச்சி காரணமாம். சிலரோ:—வியதிரேக உடனிகழ்ச்சியானே அன்னுவய வியாத்தியே கவரப்பெறும் வியதிரேக வியாத்தி யுணர்வு காரணமன்று. யாண்டு வியதிரேக உடனிகழ்ச்சியானே வியாத்தி கவரப்பெறுமோ ஆண்டு வியதிரேகி யென விளம்பப்பெறும். துணிபொருள் வெளிப்படையோ குடமுதலியவற்றே யுளதாயதாம் பின்னர்ப் பிருதிவித் தன்மையின் வரைவானே துணியப்பெறலாம் எனச்சாற்றுவர்.

அளவையிங் கயலல வருத்தவா பத்தி
விளிவெதிரே கவியாத்தி புத்தியான்
உளிலுறு தலிற்சுக முலகம் வேட்டிடு
மோளியறத் துறுமறத் துறுந்துய ரமே.

அருத்தவா பத்தியென. அருத்தா பத்தி அயலளவை யென்பதாகச் சிலர் சிந்திக்கின்றனர், அங்ஙனமன்றே:—

யாண்டுத் தேவதத்தனது நூறுவருட வாழ்க்கை சோதிட நூலா னுணரப் பெற்றதோ, வாழ்பவனது இல்லிராமையும் காட்சியாற் கவரப் பெறலாமோ ஆண்டு நூறுவருட வாழ்க்கையனது இல்லிராமை வெளியிருப்பிலாது பொருந்துறுதென வெளியிருப்புக் கற்பிக்கப்பெறும் என்பதாம். அது கருதலானே உட்சென்றமையின் அங்கீகரிக்கப்பட மாட்டாதாம். அங்ஙனமன்றே:—யாண்டு வாழ்க்கைக்கு வெளியிருப்பு இல்லிருப்பு ஆகிய இரண்டனு ளொன்றன் வியாப்பியத் தகைமை கவரப்பெறலாமோ ஆண்டு இரண்டு ளொன்றன் றுணிபுளதாயவழி இல்லிருப்பின் வாதையின் வெளியிருப்புக் கருதலிற் றிகழும். இம்முறையே, பருமையுடைய தேவதத்தன் பகலிலுண்ணான் என்பதாதியில் பருமைக்குணவின் வியாப்பியத் தகைமை யுணர்வான் உணவு துணியப்பெற்றவழி பகலுணவு வாதையுற்றுழி இரவுணவு துணியப்பெறும். அபாவக் காட்சி யனுபவிக்கப் படுதலின் அனுபலம்பமும் அயலளவை யாகாதாம். மேலும் அறியப்பெறுத தோற்றமை யேதுவாயின் ஞான கரணமுடைமை யாகாமையின் காட்சியாம், அறியப்பெற்றதேது வாயினோ அதன்மாட்டும் அயற்றோற்றமையவாவென எல்லையில்லாது செல்லலாம். இந்நெறியே, சேட்டையு மயலளவை யாகாதாம் அதற்குச்சங்கேதத்தைக் கவருஞ் சத்தத்தை நினைப்பிக்குந் தன்மை

யுண்மையின் எழுத்து முதலியவற்றின் சமசீலமேவிச் சத்தத்தின் கண்ணே யுள்ளடங்குதலின். யாண்டுதான் வியாத்தியாதியின் கவர்ச்சியாமோ ஆண்டனுமிதியே யாமென்க. சுகந்தொகுக்கப் படுகின்றது:—சுகமேன-வேட்டிடும்=அவா விடயமாம். அறத்துறும் = அறத்தன்மையானே இன்பத் தன்மையானே காரியகாரணபாவமென்பது பொருள். மறத்துறும்=மறத்தன்மையானே துன்பத் தன்மையானே காரிய காரண பாவமென்பதுபொருள்.

இன்னுயிர் வெறுப்பது விருப்ப தின்பத்தி
லுன்னரு ரின்மையி னுணர்வது கோடே
மன்னுறு மிச்சை யுபாய மீததன்
றன்னிட்ட வுபாயமாந் தன்மை ஞானமேல்.

வெறுப்பதேன. துக்கத்தன்மை யுணர்வினானே யாவருக்கும் இயற்கையாய வெறுப்பு விடயமாம் என்பது பொருள். இச்சை யியம்பப் பெறுகின்றது:—

இன்பத்திலென. பயனை விடயஞ் செய்வதெனவும், உபாயத்தை விடயஞ் செய்வதெனவும் இச்சையிருவகையாம். பயனே இன்பமும் துன்பமு மின்மையுமாம். ஆண்டுப்பல இச்சையின் பொருட்டுப் பயனுணர்வு காரணம். இதனானே புருடார்த்தஞ் சம்பவிக்கும். யாதறியப் பெற்றதாய்த் தன்பா விருப்பதாக

அங்கீகரிக்கப் பெறுமோ அது புருடார்த்தமா மென அதனிலக்கண மாதலின். இதர இச்சையின் அதீன மாகாத இச்சையின் விஷயத்தன்மை யென்பது பலிதப் பொருளாம். உபாய இச்சையின் பொருட்டு இட்ட சாதனத் தன்மை ஞானங் காரணம்.

செய்யுமிச்சையுங் கிருதிசாத்தியத்து வச்சிறப்பின்
செய்யவிச்சையாங் கிருதிசாத்திய விட்டந்தனதி
னெய்யுஞ் சாதனத் தகைமையின் மதியதனேதுத்
துய்ய வல்லமையிட்ட வேதுதைமதி தடையே.

முயல்வான் மூற்றுப்பெறுந் தன்மைச் சிறப்புற்ற முயல்வான் முடிவுபெறுந் தொழிலே விடயஞ் செய்யும் அவா, செய்யுமிச்சையாம். பாகத்தை முயல்வான் முற்றுறுவிப்பேன் என அதனனுபவ மாதலின். செய்யும் விழைவின் பொருட்டு முயல்வாற் செயப்படுந் தகைமையி னுணர்வும், இட்டசாதனத் தகைமையுணர்வும், காரணங்களாம். அதனேதுவென. இதனுனே மழை முதலியவற்றில் முயல்வாற் செயப்படுந்தகைமை யுணர்வின்மையின் இயற்றுவா னிச்சையின்று மென்க. வல்லமையென. வலியுடைத்தாய் வெறுக்கப் படுபொருட் சாதனத் தகைமை யுணர்வு தடையாம். ஆகலின் மது விடங் கலந்த வுணவை யுண்பதில் இயற்றும் வேட்கையின்றும், வலியுடைத்தாம் வெறுப்பு தடையாம் என்பர் மற்றையர்.

சிலர்மதத்த தனேதுதை சிவணிலா மதியே
தலமனேதுவுள் வேறுப்பதன் சாதனத் தகைமைப்
பலமதி வெறுப்பேது முன்பன்னு பின்னுறலோ
டலேசெய் சீவனகாரண மறைவர்மும் முயல்வே.

ஏதுதையென. வலுவுடை விழையாததை யுண்டாக்காமையி னுணர்வு காரண மென்பது பொருள். துவேடந் தொகுக்கப் படுகின்றது:—

வேறுப்பதேன. துக்க உபாய விடயகமாகியது வேடப்பொருட்டுப் பலவத்து வேஷப்படு பொருட். சாதனத் தகைமை யுணர்வுகாரண மென்பது பொருள். பலவத்திட்ட சாதனத் தன்மை யுணர்வு தடையாம். அதனுனே, இடையீடுபட்ட துயரைப் பயப்பதாகிய பாகமுதலியவற்றில் வெறுப்பின் றென்பதாக இல்லை. முயற்சி மொழியப்பெறும்:—முன்னேன. பிரவிருத்தி, நிவிருத்தி, ஜீவனயோனி, யென்னும் வேற்றுமை யானே முயற்சி மூவகை யென்பது பொருள்.

செய்யுமிச்சை கிருதிசெயும் பொரு
ளுய்யுமிட்ட வுணர்வத னேதுதை
கையுறும்முதல் தன்னுடைக் காட்சியு
மையமுன்னுறுங் காரண மாகுமால்.

செய்யுமிச்சை யென்பதாதி; மதுவிடம் விரவிய வுணா வுண்பதாதியில் பலவத்த நிட்டத்தை யடைவித்

தலினானே இயற்றுமிச்சை யின்மையின் முன்னுறுத லின் றென்பது கருத்தாம். முயல்வாற் றுணியப்படுந் தன்மையி னுணர்வு முதலியன போலப் பலவத்த நிட்டத்தைப் புகுத்தாமையி னுணர்வும் சுதந்திர உடன்பாடெதிர் மறைகளான் முன்னுறுதலிற் காரணமென வுங் கழறுநிற்பர். காரியத்தன்மையுணர்வு ஏவுவதென்பர் குரவர். அஃதமையுமாறு:—உணர்விற்கு முன்னுறுதலைப் பயப்பதில் இயற்றுமவாவை யொழித்து அயலொன்றை யவாவ வேண்டுதலில்லை, அதுவும் முயல்வான் முற்றுப் பெறுந்தன்மை யுணர்வாற் றுணியத் தக்கதாம், இச்சைக்கு, தனது சிறப்பின் சிறப்புடை யுணர்வாற் றுணியப்படுந் தகைமை நியமமா யிருத்தலின். செய்புமிச்சையோ முயல்வாற் றுணியப் படுவதாந்தகைமைப்பிரகாரக வேட்கையாம். ஆண்டு, முயல்வாற் றுணியப் படுவதாந் தகைமை சிறப்பாம், அச்சிறப்புடை யுணர்வு செய்யும் வேட்கையில், அதன் வாயிலாய்த்தான் முன்னுறுதலி லேதுவாதல், இட்டசாதனத் தன்மை யுணர்வு அதன் மாட்டேது வாகாதாம். முயல்வான் முற்றுப் பெறுததாகிய சந்திர மண்டலத்தைக் கொணர்தலாதியில் முன்னுறன் மன்னுறுதலின். அற்றேல் முயல்வான் முற்றுப் பெறுமையி னுணர்வு தடையாமாலோ வெனின்? ஆகாதாம், அதனின்மையைக் குறித்து முயல்வான் முற்றுப் பெறுந்தன்மை யுணர்வுநொய்திற் கோடலாதலின். இரண்டுமே ஹேது

வாயி னென்னுமாலோ வெனின்? என்னும், அரிதிற் கோடலன்றேவாம். அற்றேல், நின்மதத்தும் மதுவிடம் விரவிய உணவை யுண்பதினும் ஜைனமந்திர வந்தனத்தும் முன்னுறன் மன்னுறும், காரியத்தகைமை யுணர் விருத்தலின் எனின்? அன்றும், தனது விசேடணமுடைமை யுணர்வினு ளுளதாய காரியத் தகைமை யுணர்விற்கு முயல்விக்குந் தன்மை யுண்மையின். காமியமாகிய யாகபாகாதியிலோ வேட்கை, தனது சிறப்பாம்; அதனானே வலியுடைத்தாயவாவாதனை யாக்காததாகிய காமிய சாதனத் தகைமை யுணர்வினானே காரியத் தகைமை யுணர்வாம், அதனானே முன்னுறலாம். திருத்தன் உணவின் முயலான் அஞ்ஞான்று வேட்கை புருடச்சிறப்பாயிராமையின். நித்தியத்தோ, சவுசாதிகள் புருட விசேடணமாம்; அதனானே சவுசாதி ஞானாதீன முயல்வினுன் முற்றுப் பெறுந்தன்மை யுணர்வினான் ஆண்டு முன்னுறலாம். அற்றேல்? அதனோக்குமிந்து நொய்திற் கோடலானே வலியுடைத்தாய வாவாதனை யாக்காததாகிய இட்டசாதனத் தன்மை விடயக காரியத்தன்மை ஞானத்தன்மையானே ஹேதுத்தன்மையுளதாகுக, வலியுடைத்தாய வாவாதனை யாக்காததாதலும், இட்டோற்பத்தியிடையீடிலாத துக்காதிக துக்கத்தை யியாக்காமையாதல், வலியுடைத்தாகிய வெறுப்புவிடைய துன்பத்தை யுண்டாக்காமை யாதல் எனின்? அற்றன்று, இட்டசாதனத்தன்மையையும்முய

ல்வான் முற்றுறுவிக்குந் தகைமையையும் ஒரேகாலத்தில் அறிவான் முடியாமையின் சாத்தியத் தகைமை சாதனத் தகைமைகட்கு முரண்பாடுண்மையின். துணியப் பெறுதற்குச் சாத்தியத் தன்மையும், துணியப் பெற்றதற்குச் சாதனத்தன்மையு மிருத்தலின். ஒன்றுஒன்றுன் ஒரே போழ்தில் துணியப்பெற்றதும் பெறுததும் என அறியப்பெறு லாகாதா மாதலின் காலவேற்றுமையானே இரண்டும் அறியப்பெறும். இவ்வாறியம்ப லேலாதாம், எளிதிற் கோடலானே, வலியுடைத்தாய வாவப் பெறுததை யாக்காவிட்ட சாதனத் தகைமையோடுற்ற முயல்வான் முற்றுப்பெறுமைமயி னுணர்விற்கு ஹேதுத்தகைமை யுண்மையின். சாத்தியத்தன்மைசாதனத்தன்மைகட்கு முரண் பாடுண்டா மென்னற்க; ஒரொருகால் சாத்தியத்தன்மை சாதனத்தன்மைகட்கு முரண்பா டின்மையின் ஒரே போழ்தில் சாத்தியத்தன்மை சாதனத்தன்மைகளி னுணர்வாதலின். புதியரோ: இஃது எனது முயல்வாற் சாதிக்கப் பெறுவது என்னு முணர்வு முயல்விப்பதாகாதாம். வரப்பெறுததில் அஃதை யறியக் கூடாமையான்; மற்றோ எத்தகையனுக்கு முயல்வாற் சாதிக்கப் பெறுவதாகயாதுகாரணம் பெற்றதோ அத்தகமையைத் தனக்கெண்ணி ஆண்டு முயல்கின்றனன், அதனன் அதன் சாதனத் தன்மை யுணர்வுடையவனும் அதற்குபகரணமுடையவனும் ஆகிய ஓதன வேட்கையனுக்குப் பாகம்

முயல்வாற் சாதிக்கப் பெறுவதாம். அத்தகையனும் யான் என எண்ணிப் பாகத்தின்கண் முயல்கின்றனன் என மொழியாநிற்பர். அஃதொவ்வாதாம், தான் கற்பித்த எழுத்து முதலியவற்றின் முயல்கையினும், யவ்வனத்திற் காமமுட்போழ் தன்முதலியவற்றானே சம்போகாதிகளினும் அஃதின்மையின், இஃதோ உணரற்பாலதாம்:—இக்காலத்திய இட்ட சாதனத்தன்மை யுணர்வு ஏவுவதாம், அதனானே வரும் யுவராஜ்ஜிய விடயத்தில் பாலனுக்கு முயல்கை கூடாதாம், அக்கான் முயல்வான் முற்றுப் பெறுத்துந் தகைமையின் உணர்வின்மையின் இவ்வாறே திருத்தன் உணவின் முயலான் அஞ்ஞான்று இட்ட சாதனத் தன்மை ஞானமின்மையின். முயல்கின் றனனுமன்றே ரோஷத்தாற் றூடிக்கப்பட்ட மனத்தன் விட முதலியவற்றை யயில்வதில் அக்கால் வலியுடைத்தாய வாவாதவை யுண்டாக்காமை யுணர்வின்மையின், ஆத்திகனுக்கு அடையப்பெறாத வருகைப்பகையழிவு முதலியவற்றின் முயல்வில் யாங்ஙனம், வலியுடைத்தாய வாவாததை யாக்குந் தகைமை மதி? நரக சாதனத் தன்மை ஞான மிருத்தலின் என நவிலற்க; பேராசை முதலியவற்றானே நரக சாதனத்தன்மை யுணர்வு மறை பெறுதலின், மழை முதலியவற்றின் மாட்டோ முயல்வான் முற்றுப் பெறுத்துந் தகைமை யுணர் வின்மையின் செய்யும் வேட்கையின் முன்னுறுதலின்றாம்; மற்றே,

இட்ட சாதனத்தன்மை யுணர்வானே இச்சை மாத்திர மாம். கிருதியையும் பிரவிருத்தி ரூபமாயுணர்க, அத னானே ஜீவனயோனி முயல்கையாற் சாதிக்கப்பெறுவ தாகிய பிராண பஞ்சக சஞ்சாரத்திற் பிரவிருத்தியி லதாம். இன்னணமாகவே முயல்விக்குந் தன்மையைப் பின்பற்றி விதிக்கும் இட்டசாதனத் தன்மை முதலிய வையே பொருளாம். ஆகவே, "விசுவஜித்தான் வேட்க" என்பதாதியில் யாண்டுப்பயன் கேட்கப் பெறுவதின்றோ ஆண்டும் துறக் கம்பலமெனக் கற்பிக்கப்பெறும். அற்றேல், "அனுதினமும் சந்தியை யுபாசிக்குக' என்பதாதியில் இட்ட முதியாமையின் 'பிரவிருத்தியா ஙஙனமாம்? அர்த்தவாத மறைந்த பிரஹ்மலோகாதி யேனும், மறமின்மை யேனும் ஆகிய பயனுமென அறையற்க; அவ்வாறாயின், காமியத் தகைமையானே நித்தியத் தகைமையினானி யடைவாம். வேட்கையில தாயினோ இயற்றலே லாமையின்' இன்னணமாகவே, பலசுருதி யிருந்துழி அர்த்தவாத மாத்திரமெனின்? அன்றும், கிரகண சிராத்த முதலியவற்றில் நித்தியத் தன்மை நைமித்திகத் தன்மைகட்கே போலும் நித்தியத்வ காமியத்வங்கட்கும் முரணின்மையின் வேட்கையிலதேலாயின் இயற்றலேலாமையி னடைவா மென்னற்க; முக்காலத்திய துதிபாடாதிகளிற்போல வேட்கையினிருப்புண்மையையே கற்பித்தலின் வேதத்தாற் போதிக்கப்பட்ட காரியத்தன்மையி னுணர்வாற் பிரவி

ருத்தியா மெனலுஞ் சம்பவியாதாம். தனதிட்ட சா தனத் தன்மையை யறியாமல் அத்தகைய காரியத் தன்மையின் ஞான சகத்தி ரத்தினானும் பிரவிருத்தி கூடாமையின். பண்டா பூர்வம் பலமென்பதுவும் பற்ரு தாம்; வேட்கையிலதாயின் இயற்றலேலாமை சமமாம், வேட்கையைக் கற்பிக்கினே அர்த்தவாதத் தறைந்த பயனே இராத்திரிச் சத்திர நியாயத்தானே கற்பிக்க வேண்டும்; மாறுயினே பிரவிருத்தி கூடாமையின். அத னான் மறத்தி னுற்பத்தி யின்மையை மற்றைய ரெண் ணுகின்றனர். இங்ஙன்,

"எப்புகழ் விரதரிங் கெப்பொழு தினுமே தப்பறச் சந்தியைச் சாற்றுவர் பாவஞ், செப்பவர் சிதைத்தேசெறி யும நாமய வோப்பறு மயன்ற னுலகை யடைவரே"

இங்ஙன் "அன்பினே நேர்வானன் பொடும்பி துர் க்கட், கின்பொடு நாளு மெண்ணிரீக." என அன்பு வடிவதாகவே பயனுருக, பிதுர்க்களின் பிரீதியாங் ஙனம் பயனும், வேறு நிலக்களத் திருத்தலி னென விளம்பற்க; கயையச் சிராத்த முதலியவற்றிற்கடுப்ப உத்தேசியத் தன்மைச் சம்பந்தத்தானே பயனைப் பயக்கும் பான்மையைச் சிலபாற் கற்பித்தலின், இத னேனே யன்றே நூலிற் காட்டப்பட்ட பயன் அனுட் டான கருத்தாவின் கண்ணெனபது சாமானியமெ னச் சாற்றப்பெற்றது. பிதுர்க்கள் விடுபட்ட வழி தன

க்குத் துறக்க முதலிய பயனெய்தும். எல்லா நித்திய நைமித்திக அனுட்டானத்திற்குப் பொதுவாகவே துறக்கத்தைப் பயக்குந்தன்மை யுண்மையின்; பண்டா பூர்வப் பொருட்டுப் பிரவிருத்தியுஞ் சம்பவியாதாம். அது இன்ப துன்ப மின்மைபோலும் தானேகப் புரு டார்த்தமன்றும், அதன் சாதனமு மன்றும். மறவுதய மின்மையில் யாங்ஙனம் பிரவிருத்தி யெனின்? இங்ங னமாம், எங்ஙனம், நித்தியத்தை யியற்றியவழி பாபா பாவநிலை பெறுமோ அஃதிலதேலாயின் அஃதிலதா மோ; அங்ஙனம், பாபா பாவமிருப்பின் துன்பமுன் னின்மையி னிருப்பாம். அஃதிலதே லாயின் அஃதில தாம் என யோக க்ஷேம சாதாரண காரணத் தன்மை யைத் துன்ப முன்னின்மைப் பொருட்டும் எளிதாக வியம்பலாமாதலின், இம்முறையே மாற்று வினைக்கும் துன்ப முன்னின்மை யேதுத்தன்மையாம். அற்றேல், “களஞ்ச முண்ணற்க” என்பதில் விதிப்பொருண் மாட்டு யாங்ஙனம் நஞ்ஞர்த்தச் சேர்க்கை. இட்ட சாதனத்தன்மை யின்மையையும் முயல்வான் முற்று ப்பெறுந் தன்மை யின்மையையும் உணர்த்துவான். முடியாமையின் எனின்? அற்றன்றும், ஆண்டு இட்ட சாதனத் தன்மையும் கிருதி சாத்தியத் தன்மையும் பாதமாதலின் விதிப்பொருளாகாதாம்; மற்றோ, வலி யுடைத்தாய வாவாதததை யாக்காமை மாத்திரமாம் அதன பாவம் நஞ்ஞாலுணர்த்தப்பெறும். அல்லது

வலியுடைத்தாய வாவாதகை யாக்காமையைச் சிறப்பாகவுடைய இட்ட சாதனத் தன்மையோடு கூடிய கிருதி சாத்தியத்தன்மை விதியின் பொருளாம். அதனபாவமோ நஞ்ஞான் விசேடிய முடையதி னுணர்த்தப் பெறுவதாய் அடையடுத்த அபாவம் விசேடணுபாவத்தில் விசிராந்தி யடைகின்றது. அற்றேல், "சேனத்தா லபிசரித்து வேட்க" என்பதாதியில் யாங்ஙனம் வலியுடைத்தாய வாவாதகை யாக்காமை பொருளுறல்? மரணனுகூல வியாபாரமாகிய சேனத்திற்கு ஹிம்சைத் தன்மை யுண்மையானே நரகசாதனத் தன்மை யுண்மையின். விதித்தன்மை யுண்மையின் நிடேதமன்றென்று நிகழ்த்தற்க; அபிசாரத்தின்கண் மாற்றுவினை யுபதேசித்திருத்தலின். மரணனுகூல வியாபார மாத்திரம் ஹிம்சையாகு மாயின்கட்கக்காரனுக்கும், கூபங்குடை பவனுக்கும் ஹிம்சகத் தன்மையின் அடைவும், களம்வரை யுணவுண்டதி னின்று முண்டாய மரணத்தில் தன்னுன்மவதத் தன்மையி னடைவுமாம் என அறையற்க: மரண உத்தேஸ்யகத் தன்மையையும் சிறப்பாக்கலின், அயலைக் குறித் தெய்த நாராசத்தால் கொல்லப்பட்ட மறையவனுக்கு வாசநிகம் பிராயச்சித்தமாம், எனின்? அற்றன்றும், சேன நீக்கப் பொருட்டு அதிட்ட வாயிலுடைமை யின்மையானே சிறப்பித்தலின். இதனானே ஸ்ரீ காசி மரணப் பொருட்டுச் செய்யப்பட்ட சிவபூஜை முதலியவற்றிற்கும் ஹிம்

சைத் தகைமையிலதாம். நேரின் மரணத்தைப் பயப் பதற்கே ஹிம்சைத் தன்மையாம் சேனமோ அவ்வா றன்றும், மற்றேரு, அதனுனுளதாய அபூர்வமாமென அறையற்க; கட்க தாடனத்தானே மறையவன் இரண பாக பரம்பரையானே மரிக்கின் ஹிம்சைத் தன்மை யடைவுறுமையா மாதலின். சிலரோ, சேனத்தி னிம் சைப் பலம் மரண மன்றும்; அதனுனே, சேனத் தானே யுண்டாக்கப்பட்ட கட்கக்காதன் முதலிய வடி வஹிம்சை அபிசார பதப்பொருளாம். அதற்கும் பா வத்தைப் பயக்கும் பான்மையாம் ஆகலின் சேனத்தி ற்கு விதித்தன்மை யுண்மையின் பாவத்தைப் பயவா தெனினும் வரும் பாவத்தையெண்ணிச் சற்சனர் முய ல்கின்றிலர் என்பர். ஆசிரியரோ ஆத்தனபிப்ராயமே விதியின் பொருளாம். "பாகஞ்செய்தி" என்பதாதி யில் ஆஞ்ஞையாதி ரூபஇச்சை வாசித்தகைமை யொ ப்ப வியங்கோண் மாத்திரத்திற்கு இச்சை வாசித்த கைமை எளிதிற் கோடலானே யாதலின். இவ்வாருக வே, துறக்க காமன் வேட்க" என்பதாதியில் மகம் துறக்க விழைவு முயல்விஞன் முற்றுப் பெறுதலிஞ னே ஆத்த இட்டமாமென்பது பொருள். அதனுனும் ஆத்த இட்டத் தன்மையானே இட்ட சாதனத் தன் மை முதலியவற்றைக் கருதிப் பிரவிருத்திப்பன். களா ஞ்ச பக்ஷணத்தில் அஃதின்மையின் பிரவிருத்தியான். வேதத்தில் பௌருஷேயத் தகைமையை யங்கீகரி

யாத வதன்பொருட்டு விதியே ஆங்குக் கருப்பம்போ லும் மறையெனுங் குமரிக்கு மாதேவரது கூட்டின் மானமாம். கர்த்தாவின் நினைவின்மையே பாதகமெனக் கழறற்க; கபிலகணாதாதிகளானே இதுகாறும் கர்த்தாவின் நினைவிற்கே புலப்பாடுண்மையின்; மாறாயினே மிருதிகட்கும் கருத்தாவுடைமை யின்மை யடைவாதலின். ஆண்டே கருத்தாவின் நினைவுளதாமெனின் வேதத்தும் "சந்த சுகளை புணர்ந்தனர் ஆதலின்" என்பதாதியாகக் கர்த்தாவின் நினைவுளதேயாம். இவ்வண்ணம், "மன்வந்தரந்தோறு மிம்மறை மாறாய் விதிக்கப்படும்" என்பதையுங்கண்டு கொள்க. "இவ்வேத பகவான் சுயம்புவாக இலங்குவான் ஒவ்வு மும்மான் முன்னேளிர்ந்தது கிதம், செவ்விய சிவாதி பிருடிகள் வரையோ, அவ்விதனினைவினராற்றின ரல்லரே" என்பதோ வேதத்தினது துதிமாத்திரமேயாகும். பௌருஷேயத் தன்மையேல் மயன் முதலியவை சம்பவித்தலின் அப்பிரமாண்யமா மாலோவென் றுரையாடற்க, நித்திய சர்வஞ்ஞத் தன்மை யுண்மையானே நிர்த்தோஷத் தன்மையுண்மையின் இதனானே வேறு புருடர்க்கு மயன் முதலியவை சம்பவித்தலின் கபிலர் முதலியோருக்கும் வேதகர்த்திருத்தகைமை மேவாதாம். மேலும், வருணாங்கட்கே அநித்தியத்தகைமை வழங்கப்போதலின் அதன் சங்கர்ப்பத்தோடுற்ற வேதமநித்தியமென்பது ஒருதலையேயா மன்றேவெனத் தொகுப்

பாம். முதலென. சமவாயி காரணத்தினது காட்சி பிர விருத்தியிற் காரணமென்பதாம்.

பின்னுறல் வெறுப்பால் வெறுப்பதனேதுப் பெற்றியி னுணர்வினுக்கேது, மன்னுறவாழ்க்கைக் காரணம்போ றிக்குமன்னுரு வெப்போழுதினுமா, லின்னுடலு யிர்ச்சஞ் சாரத்திலேது விந்திய மறிந்திடாகனதை, மன்னு மண்ணீ ரில நித்தியத்தநித்த மருவுநித்தியத்தி னித்தியமே.

பின்னுறலென. வெறுப்பதன் சாதனத் தன்மை யுணர்விற்குப் பின்னுறற் பொருட்டும் பயக்கும்பான மையுடன்பாடெதிர் மறைகளானே துணியப்பெறும் என்பது கருத்தாம்.—

வாழ்க்கைக்காரண முயல்வு வாழும்வரை தொட ரும், அஃது மதீந்திரியமேயாம். அதன் கண்ணளவை அறையப் பெறுகின்றது:— இன்னுடலென. உயிர்ச் சஞ்சார மென்பது அதிக சுவாசாதியாம், முயல்வான் முற்றுறவதாம். இன்னணமாகவே, எல்லாவுயிர்ச் சஞ் சாரத்திற்கும் முயல்வான் முற்றுப்பெறுத்துந் தமை மைக் கருதலுண்டாதலினானும், காட்சிப்படு முயற்சி வாதிக்கப் படுதலினானும், பொறிக்கெடடா முயற்சி துணியப் பெறலாம். அஃதே ஜீவனயோனி முயற்சி யாம். குருத்வங் கூறப்பெறுகின்றது:— இந்தியமறிந்

திடாதென. அநித்தியமென. அநித்தியமாய இரட்டை யணு முதலியவற்றில் மருவுங் குருத்துவம் அநித்யமாம். நித்திய பரமாணுவில் நித்தியமாம் குருத்தன்மையெனத் தொடர்புறும்.

விழுதலி லசமவாயியுமதுவே விளம்புசாம் சித்திக நெகிழ்ச்சி, தழுவுறுநயிமித்திக மேனவாதி சலிலத்திற் கடையதுமண்டீ, யுழியறற் பரமவணுவினி லழிவிலொழிவது பிறவிடங்கடைய, தழலுறவரி நெய்யினி லொழுக்கேது வாந்திரட்டலி னிமித்தமதே.

அக்குருத்வம் அசமவாயி காரணமாம். விழுதலில் = முதல்வீழ்ச்சியில் என்பதாம். திரவத்வம் திகழ்த்தப்பெறுகின்றது:—சாம்சித்திகமென. சாம்சித்திகம் நைமித்திக மெனத்திரவத்வ மிருவிதமாம். கடையது=நைமித்திகம். அறலென. நீர்ப்பரமாணுவில் நெகிழ்ச்சி நித்திய மென்பது பொருள் பிறவிடம்=பிருதிவிப் பரமாணு முதலியவற்றிலும், சலில இரட்டையணு முதலியவற்றிலும் நெகிழ்ச்சி அநித்தியமாம். சிலபாற் றேயுவினும், சிலபாற் பிருதிவியினும் நைமித்திக நெகிழ்ச்சியாம். ஆண்டு நைமித்திகப் பொருளியாதென்பது காட்டப்படுகின்றது:—கடையதேன. அழலெண. அழற்சையோகத்தாலாகியது நைமித்திக திரவத்வமாம். அதுவும் மாதங்காதி வடிவத்தேயுவினும்,

என்பதாம். ஏது=அசமவாயி காரணம். திரட்டலின்= சத்து முதலியவற்றின் சையோக விசேஷத்தின். அது=நெகிழ்ச்சி, நேயத்தோடு கூடியதெனஉணரற் பாற்றும்;அதனானெகிழ்ந்த பொன் முதலியவற்றின் றிரட்டலின்றும்.

நீரினி னேயமது நித்தமணுவி னித்தமில்லது மவய வியில், பாருறு தயிலத்தத னுயர்வதனாற் பன்னனுகூல தையனற்காம், தாருறுவேகம் பாவனை திதியின் ருபகமே னல் சமுக்காரம், வேருறு வேகம் மூர்த்த மாத்திரத்தில் வேகஜங்கரும ஜஞ்சிலரே.

நேயம் நிருபிக்கப்படுகின்றது:— நேயமெனநீரினி லெனை. நீரின் கண்ணே யென்பது பொருள். அற்றேல், மண்ணின் கண்ணும் தைலத்தில் நேயம் புலப்படுகின் றது, அது நீரில் நிகழ்வதா மென்னற்க; அங்ஙனாயின், அனற்கு மாறும் ஆகலின் அறையப் பெறுகின்றது;— தயிலத்தென, அதனுயர்வதனன்=நேய உயர்வான். தயிலத்திற் புலப்படாநின்ற நேயமும் நீரில் நிகழ்வதே அதற்குயர்வாந் தன்மை யுண்மையின் அனற் குதவுவ தாம். தாழ்வாய நேயமா நீரோ தீயை நீக்கும், என்ப தாம். சமுக்காரம் சாற்றப்படுகின்றது:—சமுக்காரமென வேகம், திதித்தாபகம், பாவனை, என்னும் வேற்றுமை யான் சமுக்காரம் மூவகையாம்: மூர்த்தமென. கர்மஜ வேகஜ வேற்றுமையானே வேகம் இருவகையாம். ஆக

முதலியவற்றிலோ நோதனத்தா லுண்டாக்கப்பட்ட தொழிலானே வேகமுண்டாம். அதனானே, முற்றொழி லழியும், அதன்பின் பிற்றொழிலாம். இங்ஙனம் மேலும் வேகமிலாது தொழிற்குத் தொழிற்றடைத் தன்மை யுண்மையின் முற்றொழி லழிவும் பிற்றொழி லுதயமும் ஆகாதாம். யாண்டு வேகமுடைய கபாலத்தானே உண்டாக்கப்பட்ட குடத்தில் வேகமுண்டாமோ அது வேகஜ வேகமாம்

கடையது கிதியில் நான்கினிற் சிலவர் கதுவுறுவது பொறிக்கோரோ, விடமதி லசைவு மாட்டாது மேது விரி யுயிர் விருத்தி பாவனைதா, னடைவறும் பொறிக்கு நோதும லினு னுருவிலருந் துணிபுத னுடையேதாம், தொடர்வு ணர் வதினும் நினைவினு மிஃது துண்ணுறு மேதேனச் சொலுமே.

கடையது=திதித்தாபகம். வளைத்த சாகை முதலி யவற்றை விடுதலானே யுண்டாம் மீட்சி நிலைபெறுத்து கையான் முற்றுறுவதாம். கிதி முதலிய நான்கன் கண் நிலைபெறுத்துகையைச் சில ரெண்ணுகின்றனர் அஃதளவை யற்றதாம் என்க. அது=திதித்தாபகம். ஓரோ விடம்=வளைத்த கோடு முதலியவற்றில். பாவனை யென. அதனுடை=சமுக்காரத்தினுடைய. நொதுமல் வடிவ வுணர்வானே சமுக்கார உதய மின்மையின் நொதுமலி னுருவில் என்றதாம். அதனைதயத்தான்

அதனதுதயங்கூடாமையின் துணிபு என்னப்பட்டது அதனானே நொதுமலினும் அயலாய நிச்சயத் தன்மை யானே சமுக்காரப் பொருட்டு ஹேதுதை யென்பது கருத்தாம், அற்றேல் நினைவின் பொருட்டு நொதும லினும் அயலாய நிச்சயத் தன்மையானே ஹேதுதை யாம், அதனான் நொதுமன் முதலிய இடங்களில் நினை வின்றும். இங்ஙனமாகவே சமுக்காரப் பொருட்டு ஞானத்தன்மையானே ஹேதுதை யுளதாகுகவேயெ னின்? ஆகாதாம், ஒருபக்கம் நிறவும் ஊகமின்மையி னானும் சமுக்காரப்பொருட்டு நொதுமலினும் அயலாய நிச்சயத் தன்மையானே ஹேதுதை துணியப்பெறுத லின். மேலும் நொதுமற்றலத்தில் சமுக்கார கற்பனை யாற்றல் அரிதிற் கோடலின் சமுக்காரப் பொருட்டோ நொதுமலினும் அயலாய நிச்சயத் தன்மையானே ஹே துதை துணியப்பெறுதலின். இஃது = சமுக்காரம். ஆண்டளவை காட்டப்படுகின்றது:— நினைவினுமென. நினைவையும் தொடர்வுணர்வையும் உதிப்பித்தலின் சமுக்காரங் கற்பிக்கப்படும். வியாபாரமின்றி முன் னனுபவத்திற்கு நினைவு முதலியவற்றைப் பயக்கும் ஆற்றலின்மையின், தான் தனது வியாபாரம் என் னும் இரண்டனு ளொன்றிலாதவழி காரணத்தகை மை சம்பவியாமையின். தொடர் வுணர்வின் பொரு ட்டு அவ்வச் சமுக்காரத்திற் கேதுத் தகைமையேல் தொடர் வுணவிற்குச் சமுக்கார ஜன்னியத்தன்மை

உண்மையானே மிருதித்தகைமையி னடைவாமெ னற்க; அப்பிரயோஜகத் தகைமையுண்மையின். மற்றை யரோ வெளிப்படாத சமுக்காரத்தான் தொடர்வுணர் வுதயமாகாக்கால் வெளிப்பட்ட சமுக்காரத்திற்கு ஹேது த்தன்மையைக் குறித்து, அந்த அந்த நினைவிற்கே தொடர்வுணர்வின் பொருட்டு ஹேதுதை கற்பிக்கப்பெ றுமென்பர்.

## அதிட்டம் அறையப் பெறுகின்றது:-

அறமற மதிட்டந் துறக்க சாதனமா மறம்பகீரதி முழுக்காதி, கறையறு மகமுன் வினைகளு மறமாங் கருமநாசா வறற்றேடலான், அறமிறு மறமோ நரகமுன்னேதுவா மிகழ்வினையி ஞன்மாற்றுந், திறவினை முதலா லழிவுறுமிரண்டுஞ் சீவனிலிருப்பன வேனுமே.

துறக்கமேன, துறக்க முதலிய எல்லா வின்பங்கட்கும் துறக்கஹேதுவடிவமாகிய ஆகமுதலியவற்றிற்கும் ஹேதுதருமமாம் அதன்கண் ணளவை அறைவான் அறையப் படுகின்றது. மகமுன்னேன. யாகாதி வியாபாரமாக அறங் கற்பிக்கப்பெறும்; அன்றுயின் வேள்வி முதலியவற்றிற்கு அழிவுற்று நெடுநாட்களாதலினும் வியாபாரமிலாமையினும் இனிமேலுளதாம் துறக்கத்தைப் பயக்கும் பான்மை யெவ்வாதாம். அஃதறையப் பெற்றுளது ஆசிரியரான்:— “இயற்றிய கருமாதிசய மின்றியே, குயிற்றினோர் குலைந்து

சென்றது, பயிற்றடப் பயனைப் பற்றியதலவே" என, அற்றேல், மகத்துவம்சத்தின் மாட்டே வியாபார மாம், பிரதியோகியதன் றுவம்சங்கட்கு ஒருபாற் பய வாமையா மென்னற்க; யாண்டும் அவ்வாறூர் ஙகைமை யில் அளவையின்மையின். நின் மதத்தில் பய முடிவு பேறற்றதாம், எம்மதத்தில் முடிபாய பயனுக்கு பூர் வத்தை யழிக்குந்தன்மை யுண்மையின் அவ்வாறுந்தன் மையின்றும் என்னற்க; காலவிசேடமும் சககாரியாத லின் எனக்கடாவிக் கூறப்படுகின்றது:— பகீரதியென. ஸ்ரீகங்கையாடற்கே துறக்கத்தைப் பயக்கும் பான்மை யுளதேலாயின் முடிபிலாத நீர்ச்சையோகத் துவம்சங்க ட்கு வியாபாரத் தன்மையைக் குறித்து ஓர் அபூர்வ மே கற்பிக்கப்பெறும் நொய்திற் கோடலானே யென் பது கருத்தாம்.

அற்றேல், துவம்சமும் வியாபாரம் ஆகாதொழிக வியாபார மற்றதாகிய நீறுண் முன்னழிவுற்றதற்கு யா ங்ஙனம் காரணத்தகைமையெனக் கழறற்க; அயலோ ராற்றுற் பெறப்படாததாய் நியதமாய் முன்னிற்பதாந் தன்மைக்கு ஆண்டுமிருப்புண்மையின். தடையற்றமுன் னிருத்தற் றன்மையே விழிக்கூட்ட முதலியவற்றிற்குக் காரணத் தன்மையேல், யாண்டுமில்லையாம். காரியகால இருப்புண்மையேபோலும், சமவாயி காரணத்திற்கு, எனக்கடாவி விடையளிக்கப் படுகின்றது:— கருமநாசா வென.

அபூர்வமாகா தொழியு மேலாயின் கருமநாசா ஜலத்தைத் தீண்டன் முதலியவற்ருனே அறத்திற் கழிவுறுந் தகைமை யாகாமற்போம். அதனுன் மக முதலியவற்றின் அழிவேனுந் தடையேனும் செய் வான் முடியாதாம், அதற்கு முன்னரே இருப்புண்மை யின் என்பது கருத்தாம். இதனுனே, தேவதைப் பிரீ திக்கே பலத்தன்மை யென்பது நீக்கப்பட்டது. ஸ்ரீ கங் கையாடன் முதலியவற்றில் யாண்டுமே தேவதைப் பிரீதிக் கசம்பவ முண்மையினுனும் என்க. தேவதை க்குச் சேதனத்தன்மை யுண்மையேனும் அதன் பிரீ திக்குக் குறிப்பிடாத் தன்மை யுண்மையின் பிரீதிக்குச் சுகசொரூபத் தன்மையானே விஷ்ணுப் பிரீதியாதிக களில் அஃதசம்பவமாதலின். உண்டாய இன்பமுதலி யவற்றிற்கு ஆண்டின்மை யுண்மையின் அதனுன். விஷ்ணுப்பிரீதி ஜன்னியத் தன்மையானே மற்றையர் விரும்பிய துறக்க முதலியவையே விஷ்ணுப் பிரீதி சப்தத்தானே குறிப்பிக்கப்படும். மறமேன. நரகமுத லிய சகல துன்பங்கட்கும், நரக சம்பந்தமாய தேக முதலியவற்றிற்கும் சாதனம் மறமாம், அதன் கண்ண ளவை யறையப்படுகின்றது:-மறமாகா தொழியுமேலா யின் மாற்றுவினை மாற்றப்படுந் தன்மை யாகாமற் போம். அதனுன் பிரஹ்மஹத்தியாதிகளின் அழிவே னுந் தடையேனும் விதிப்பான் முடியாதாம். அதற்கு முன்னரே சென்றொழிந்த தன்மை யுண்மையின் என்

பது கருத்தாம். சிவனெனக் கடவுளுக்கு அறம் மறம் இன்மையினென்பது கருத்தாம்.

வாதனைதனினின் றுதிப்பன விவைகள்வரு முணர் வானுமேமாயு, மோதோலி தோனியும் வருணமும் மேளாத் துதிப்பது தோனிக்களக் கூட்டா. முதலாம் வருணங் காதிகளாகு மாசினிதனி லிவையமரும், காதினி லுதித்த கவரலா முதித்தல் கடலலை நெறியினிற்கவரே.

இவைகள் = அறமறங்கள். வாதனையென ஆக வின் ஞானியான் செய்யப்படுவன வாயினும் நல்லவை தீயவைகள் பயன்பயப்பா ஆற்றலற்றனவாம் என்பது கருத்து. உணர்வானுமென. உண்மையானே போகமுங் கோடக் கிடந்தது. அற்றேல், தத்துவ ஞானத்திற்கு யாங்ஙனம் அறமறத்தை யழிவுறுத்துந் தன்மை "கற்ப கோடி சதங்களானும்மே, அற்பமுமயிலாக் கருமமழி வுறு" என்னுந் திருமொழி முரணுறாதகலின். இவ்வாறு கவே தத்துவஞானிகட்கு வினைவிற் காயவியூகத்தான் எல்லாக் கருமங்கட்கும் போகத்தாலழிவு ஆமெனின்! அற்றன்றும், ஆண்டுப் போகத்திற்கு வேதத்தானுரைத்தப்பட்ட நாசகங்களின் உபலக்ஷகத்தகைமையுண் மையின். அன்றாயின் யாங்ஙனம் மாற்றாவினை முதலிய வற்றானே கருமங்கட்கு அழிவெய்தலாம்! அஃதருளப் பட்டுளது:—ஞானத்தீ எல்லாக் கருமங்களையும்" என் பதாதியான் "பாவமாகிய பசிவத்தொகுதி விரவிய வினது கருமங்கள் வீழும்" என்பதாம். அற்றேல், தத்துவ ஞானிக்காயின் காயநிகழ்தலும் இன்பத் துன் பாதிகளும் ஆகாவாம், ஞானத்தானே எல்லாக்கருமங் கட்கும் அழிவுண்மையின் எனின்? அற்றன்றும், நுகர் வினை யொழித்தொழிந்த வினைகட்கே அழிவுண்மையின்